




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17
இதழ் 20

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—*பாரதியார்*

ஹேவிளம்பி
கார்த்திகை 30

# புஸ்வாணம்

“அணுகுண்டு ஜலஜகுண்டுகளைத் தூர எறியுங்கள். அவைகளின் உற்பத்தியை நிறுத்துங்கள்!” என்று நடுநிலைமை வகிக்கும் உலக நாடுகள் சொன்னால் அதற்குப் பின்வரும் சமாதானம் சொல்லி வந்தார்கள்:

“பல்லாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள எங்கள் எதிரி நாடுகளை மட்டும் குறி வைத்துத் தாக்கும் அணுகுண்டு ஜலஜ குண்டுகளைக் கண்டுபிடித்திருக்கிறோம்! கவலைப் படாதீர்கள்! உங்களை ஒன்றும் செய்யாது!” என்று சமாதானம் சொல்லி வந்தார்கள்.

ஆனால் நம் நாட்டுப் பெரியோர்கள், “உங்கள் பறக்கும் குண்டுகள், யந்திரக் கோளாறினாலோ, அல்லது அந்தக் குண்டுகளை அனுப்பும் விஞ்ஞானிகளின் சிறு தவறு களினாலோ, உங்கள் எதிரி நாடுகளுக்கு இடையேயுள்ள நிரபராதிகளான சிறு நாடுகள் மீது விழுந்து பெருத்த சேதம் விளைவித்து விட்டால் என்ன செய்வது? விஞ்ஞானத் துறையில் தவறுகள் நேர்வது இயற்கை. அதனால் இந்த நாசகரமான குண்டுகளை ஒழிப்பதே நலம்! விஷப் பரீட்சை வேண்டாம்” என்று ஒரு காரணத்தையும் சொல்லி வந்தார்கள்.

ஆனால் அமெரிக்கா தனது விஞ்ஞான மேதா விலாசத்தில் அளவுகடந்த ஆணவம் கொண்டு மேற்கண்ட உண்மைகளைப் புறக்கணித்து வந்தது!

விஞ்ஞானத் துறையில் உலக நாடுகள் எல்லாவற்றையும் விடத் தான் முன் னணியில் நிற்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தது. ருஷ்யாவினால் தன்னை விஞ்ஞானத் துறையில் மிஞ்ச முடியாது என்று சொல்லி இறுமாந்து கொண்டிருந்தது. வான மண்டலத்தில் முதலில் ராக்கெட்டுகள் அனுப்பிப் புதுச் சந்திரன்களைச் சுழலவிடப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தது. “வான்கார்டு” என்ற ராக்கெட்டைப் பற்றிப் பத்திரிகைகளில் சென்ற ஒரு வருஷத்துக்கு முன்பிருந்தே பலப்பல கட்டுரைகள் வெளியிட்டு விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தது. ஆனால் ருஷ்யா இப்படியெல்லாம் சொல்லவில்லை. ஒருநாள் திடீரென்று ஒரு செயற்கைச் சந்திரனை வானவெளிக்கு அனுப்பிச் சுழல விட்டுவிட்டு உலகை வியப்புக் கடலில் ஆழ்த்தியது.

இதைப் பார்த்து அமெரிக்கா திடுக்கிட்டது! “எங்களை முந்திக் கொண்டு விட்டார் களே?” என்று அவமானமும் கோபமும் அடைந்தார்கள் அமெரிக்க மக்கள்.

“இன்னும் நாம் சும்மாயிருக்கக் கூடாது. நமது வான்கார்டை அனுப்ப ஏற்பாடு செய்தாக வேண்டும்” என்று அமெரிக்கத் தலைவர்களும் மக்களும் பேசிக் கொண்டார்கள். அதற்கான முயற்சிகளிலும் ஈடுபட்டார்கள்.

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போது, ருஷ்யா இன்னொரு செயற் கைச் சந்திரனை வான வெளிக்கு அனுப்பி வைத்தது.

இது அமெரிக்கர்களின் வியப்பையும் வெட்கத்தையும் அதிகரித்தது. இது இத்துடன் நின்றிருந்தால் அமெரிக்கர்களுக்கு நன்றாக இருந்திருக்கும். ஆனால் விதி வேறு விதமாகத் தீர்மானித்தது.

பிரமாதமாக விளம்பரப்படுத்தப்பட்ட “வான்கார்டு” தீபாவளி புஸ்வாணம் போல் புசுபுசுத்து விட்டது. பூமியை விட்டுச் சில அடிகளே உயரக் கிளம்பித் தொப் பென்று விழுந்து பெரும் தீயையும் புகையையும் கிளப்பிவிட்டு அடங்கி விட்டது!

அமெரிக்கா தேசத்துப் பெருத்த விஞ்ஞானிகள் எல்லாரும் சேர்ந்து முயன்ற இந்த "வான்கார்டு" இந்தப் பரிதாப நிலையை அடைந்தது. இதைவிட அமெரிக்காவுக்கு வேறு அவமானம் என்ன வேண்டும்?

"வான்கார்டு" ராக்கெட் இப்படிப் புஸ்வாணமாகப் போனது அதன் ஆணவத்தைக் குறைத்திருக்கும் என்று நம்புகிறோம். நமது பெரியோர்கள் சொல்லுவதன் உண்மையை உள்ளத்தில் உறைக்கும்படி செய்யும் என்றும் எதிர்பார்க்கிறோம்.

சில நாட்களுக்கு முன் பிரிட்டன் அணுகுண்டு உற்பத்திச் சாலையில் ஏதோ கோளாறு ஏற்பட்டதனால், அணு விஷம் பரவி அந்த யந்திர சாலையைச் சுற்றிப் பல மைல்களுக்குக் காய்கறிகளும், பாலும் விஷமயமாகச் செய்து விட்டன என்றும் பல டன்கள் எடையுள்ள பால் கீழே கொட்டப்பட்டதாகவும் செய்திகள் பத்திரிகைகளில் வந்தது நினைவிருக்கலாம்!

இவையெல்லாம் விஞ்ஞான அறிவைப் பரிபூரணமாக நம்பி அணுகுண்டு, ஜலஜ குண்டுகளுடன் பழகுவது சரியல்ல என்பதை வல்லரசுகளுக்கு நிரூபிக்கின்றன!

எனினும் மத்திய கேந்திரத்தில், ஜலஜ குண்டுகளைத் தாங்கிய ஆகாய விமானங்கள் ரோந்து சுற்றி வருவதாகச் செய்திகள் வருகின்றன! ஏதாகிலும் ஒரு கோளாறினால் விபரீதம் விளைந்தால் அது எத்தகைய பயங்கரமாக இருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை! ஆகவே, "வான்கார்டு" விஷயம் அமெரிக்காவின் ராஜதந்திரத்தில் ஒரு மாற்றத்தை விளைவிக்க வேண்டும். அப்படி விளைவிக்கா விட்டால், 'சொன்னாலும் தெரியாது தனக்காகவும் தெரியாது' என்ற பழிப்புக்கு அமெரிக்கா ஆளாக நேரிடும்!

## மூளைக் கோளாறு

ருஷ்யாவின் குட்டிச் சந்திரன்களையும், தாங்கள் செய்த சந்திரன் புஸ்வாணமாகப் போனதையும் கண்டு அமெரிக்கத் தலைவர்களுக்கு மூளைக்கோளாறு உண்டாகி விட்டது.

அவர்களுடைய தற்போதைய யோசனை இதற்குச் சான்று. ஐரோப்பாவிலுள்ள தங்களுடைய நேச நாடுகளிலெல்லாம் அணு குண்டுகளையும் ஜலஜ குண்டுகளையும் அந்தந்த ராஜ்யத் துருப்புகளுக்குக் கொடுத்து விட்டு, ருஷ்யாவை முற்றுகை போட வேண்டும் என்பது யோசனை.

இந்தத் திட்டம் நிறைவேறி விட்டால் உலகத்துக்கு ஏற்பட்டிருக்கும் பேரபாயம் பன்மடங்கு பெருகி விடும். உலகத்துக்கே விநாசம் வந்து விடும் என்று பயந்தும் பழி தம் பேரில் சுமத்தப் படக் கூடாது என்று அஞ்சியும் இவ்வளவு நாள் வரையில் அமெரிக்காவும் ருஷ்யாவும், இருசாராரும் நாசகர குண்டுகளை வைத்துக் கொண்டு அவற்றை உபயோகப் படுத்தாமல் இருந்து வந்தார்கள்: புதுத் திட்டத்தின்படி அணுகுண்டு உபயோகத்தை ஆரம்பிக்கக் கூடியவர்கள் டஜன் கணக்கில் ஆகிவிடுவார்கள். புத்திக் கோளாறு ஏற்படுவதற்கு வசதி அதிகமாகி விடும்: எங்கேயாவது ஓரிடத்தில் அவசரப்பட்டோ, பயந்தோ அல்லது தற்செயலாகவோ ஒரு வெடி வெடித்து விட்டால், உலகம் முழுதும் தீப்பிடித்து விடும். இதை யோசிக்காமல் ருஷ்யாவின் ஐ.ஸி.பி.எம்.முக்குப் போட்டித் திட்டமாக அபாய முற்றுகை ஆரம்பிக்கப் போகிறார்கள். இது விநாச காலத்துக்கு விபரீத புத்தி என்கிற தத்துவத்துக்குள் அடங்கும். ருஷ்யாவில் அமெரிக்காவின் தூதராக இருந்து வந்த கென்னன் என்கிற நிபுணர், இந்த விஷயத்தைப் பற்றித் தம்முடைய நாட்டு மக்களை எச்சரித்திருக்கிறார். மிகத் தெளிவாக அபாயத்தை எடுத்துக் காட்டி பி. பி. ஸி. ஒலிபரப்பில் பேசியிருக்கிறார்.

## புள்ளி விவரச் சமாதானம்

சென்னை சர்க்கார் காரியாலயத்திலிருந்து சென்ற வாரம் ஒரு புள்ளி விவரக் கணக்கு வெளியாயிற்று. அந்தக் கணக்கைப் பார்த்த போது, "யார் சொன்னது நமது நாட்டில் உணவுப் பஞ்சமென்று? நெல் ஏராளமாக விளைகிறது. பஞ்சமே கிடையாது! கிடையாது!" என்று ஆர்ப்பரித்துத் தமுக்குப் போட வேண்டும் போல் தோன்றுகிறது.

நமது ராஜ்யத்தில் 1952—53 வருஷம் 16,86,000 டன் அரிசி விளைந்ததாம். அப்படிப்பட்ட ராஜ்யத்தில் இப்பொழுது 1956-1957ம் ஆண்டில் 31,03,000 டன் அரிசி விளைந்திருக்கிறது. கிட்டத்தட்ட இரண்டு மடங்கு அரிசி அதிகமாக விளைந்திருக்கிறது!

இப்படித் திடீரென்று விளைந்துவிடவில்லை. படிப்படியாக விளைவு உயர்ந்திருக்கிறது;

1953 - 54 = 25,72,000 டன் அரிசி
1954 - 55 = 27,36,000 டன் அரிசி
1955 - 56 = 29,58,000 டன் அரிசி
1956 - 57 = 31,03,000 டன் அரிசி

1952 லிருந்த நிலைக்குக் கிட்டத்தட்ட இரு மடங்கு நமது உணவு உற்பத்தி அபிவிருத்தி அடைந்திருக்கிறது.

'சாதாரண வருஷத்தில் நமது ராஜ்யத்தில் மூன்று லட்சம் டன் அரிசி பற்றாக்குறை ஏற்படுவது வழக்கம். இப்பொழுது ஒன்றரை லட்சம் டன் அரிசி நமக்குப் பற்றாக் குறையாக இருக்கிறது' என்றும் சென்னை சர்க்கார் அறிவித்திருக்கிறார்கள்!

'சாதாரண வருஷம்' என்று எதைக் குறிப்பிடுகிறார்களோ தெரியவில்லை. 1952—53 ம் ஆண்டு மழை சரியாக இல்லாததால் பஞ்சம் மிகுந்த வருஷம் என்று சொல்லப்படுகிறது;

# தளர்த்தி விடுங்கள்!




அமெரிக்காவில் பாரத நாட்டு வரிக் கொள்கைகளை ஆதரித்துப் பேசி வந்த பாரத நாட்டு வர்த்தக தூதுகோஷ்டியின் தலைவர் திரு ஜி. டி. பிர்லா "இப்பொழுது அமெரிக்க மூலதனம் கிடைத்தாலும் கிடைக்கலாம்; உள் நாட்டில் மூலதனம் திரட்டுவதுதான் கஷ்டமாக இருக்கிறது" என்று கூறியிருக்கிறார்.

1953—54-ம் ஆண்டுகளில் 25 லட்சம் டன் வரை அரிசி விளைந்திருக்கிறது!

இதைச் சாதாரண வருஷம் என்றால், 28 லட்சம் டன் விளைந்தாலே, தலைக்கு மேல் வெள்ளமாகக் கருத வேண்டும். ஆனால் 1956-57 ம் ஆண்டுகளில் 31 லட்சம் விளைந்திருப்பதாகக் கணக்கு அளித்திருக்கிறார்கள். இவ்வளவு விளைந்திருந்தால் பற்றாக் குறை ஏன் ஏற்படுகிறது? எப்படி ஒன்றரை லட்சம் டன் அரிசி பற்றாக் குறையாக இருக்கமுடியும்?

இவ்வளவு அபரிமிதமான விளைச்சல் ஏற்பட்டுள்ள இந்த வருஷத்தில்தான் உணவுப் பஞ்சத்தைப் பற்றிப் பலத்த கூக்குரல்கள் எங்கும் கேட்கிறோம்!

மந்திரிகள், "அரிசிச் சாதத்தைச் சாப்பிடுவதைக் குறையுங்கள். உணவுப் பழக்கங்களை மாற்றுங்கள்" என்று பல மேடைகளில் சொல்லி வருவதைக் கேட்கிறோம்.

விருந்துகளுக்கு அதிகம் பேரை அழைக்கக் கூடாது; எண்ணிக்கையைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்றும் கூறப்படுகிறது.

சென்ற வாரம் சென்னை விவசாய மந்திரி திரு பக்தவத்சலம், ஹோட்டல் முதலாளிகளைக் கோதுமைப் பண்டங்கள் செய்து விற்று மக்கள் உணவுப் பழக்கங்களை மாற்றும்படி கேட்டுக் கொண்டார்.

ஆனால் நேயர்களுக்கு மற்றொரு விஷயத்தை ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

சர்க்கார் மிகக் குறைந்த விளைவு, பஞ்ச நிலைமை ஏற்பட்டிருந்தது என்று சொல்லுகிற 1952—53 வருஷத்தில்தான் அரிசி ரேஷன் எடுக்கப்பட்டது. மக்கள் வேண்டிய மட்டும் அரிசி வாங்கி வயிறாரச் சாப்பிட்டார்கள். அன்றிருந்த நிலையைவிட இன்று இரண்டு பங்கு விளைவு அதிகரித்திருக்கிறது என்று சொல்லும்போது இந்த அறைகூவல் ஏன்?

இப்படி நாம் ஆராயும்போதுதான் சர்க்கார் அளித்துள்ள புள்ளிக் கணக்கு தவறு என்று எண்ண வேண்டியிருக்கிறது. நேர்முகமாக நிலைமையை அறிந்து கொள்ளாமல் சர்க்கார் காரியாலயத்துக்குள்ளிருந்து சிருஷ்டிக்கப்பட்ட கணக்கு என்று எண்ணவேண்டியிருக்கிறது.

இத்தனை ஏக்கர் தரிசு நிலம் விவசாயத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது; அதிலிருந்து இவ்வளவு விளைவு எதிர்பார்க்கலாம் என்று உத்தேசக் கணக்கு வைத்துக்

கொண்டு இந்தப் புள்ளி விவரங்களை உண்டாக்கியிருக்கிறார்கள் என்று எண்ணுகிறோம். உண்மையில் விளைவைப் பார்த்து, கொள் முதலைப் பார்த்து எடுக்கப்பட்ட கணக்கல்ல என்றே தோன்றுகிறது.

சென்னை ராஜ்யத்தில் சமீப காலத்தில் செய்யப்பட்ட நிலச் சீர்திருத்தச் சட்டங்களே இன்றைய உணவு நெருக்கடிக்குக் காரணம். இந்தச் சட்டங்கள் நிலத்தில் பாடுபடும் உழவுத் தொழிலாளர்களையும், நிலச் சொந்தக்காரர்களையும் நிலத்தில் அக்கறை கொள்ள முடியாமல் செய்து விட்டன. அதனால் நிலத்தில் சாதாரணமாக விளையும் விளைவு கூடக் காண முடியாமல் பெரிதும் குறைந்திருக்கிறது. மேலும், புதுச் சட்டங்கள் விவசாயிகளுக்கும் நில உரிமையாளர்களுக்கும் புதுப் புது தகராறுகளை உண்டாக்கி யிருக்கின்றன. விளைந்த நெல்லை அவரவர்கள் களஞ்சியங்களுக்குக் கொண்டு போவதற்கு முன்னால் விவசாயியும் நிலச்சுவான்தாரும் கோர்ட்டுகளுக்குப் போய் நின்று வழக்காட வேண்டியிருக்கிறது. வழக்குகள் தீருவதற்குப் பல மாதங்கள் பிடிக்கின்றன. இவற்றினால் உற்பத்தி பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கின்றது! இதுதான் இன்றைய நிலைமை!

மந்திரிகள் வோட்டுகள் பிடிக்க வேண்டும் என்று போட்ட சட்டங்கள் இப்படி ஒரு நிலைமையை உண்டாக்கியிருக்கின்றன; இது எல்லாரும் ஒப்புக்கொள்ளும் உண்மை. ஆனால் இந்த உண்மையைத் தாங்கக் கூடிய சக்தி நமது மந்திரிகளுக்கு இல்லை. அதை விட இந்த அவல நிலைக்குப் பரிகாரம் காணுவதற்குரிய யோசனையோ ஆர்வமோ இல்லை.

இதனால்தான் இப்படி ஒரு புள்ளி விவரத்தைக் காண்பித்து, சமாதானம் சொல்லப் பார்க்கிறார்கள்.

உண்மை நிலையை நன்கு அறிந்து, நாம் முன்னர் "முதற் பிரச்னை" என்ற தலையங்கத்தில் சொன்னதுபோல் நிலச் சொந்தக்காரர்களையும், விவசாயிகளையும் நிலத்தில் சமமாக அக்கறை கொள்ளும்படி செய்ய வேண்டும்! இல்லையேல் 1951-ம் வருஷம் இருந்த நிலைமைதான் காங்கிரஸ் மந்திரி சபைக்கு மீண்டும் ஏற்படும்.

# நேருஜியின் கோபம்

பிரதம மந்திரி நேருஜி திராவிடக் கழகத்தை வன்மையாகக் கண்டித்து விட்டார். கண்டித்ததின் நோக்கம் என்ன? திரு ஈ. வெ. ரா. தம்முடைய கொள்கையையும் நடவடிக்கையையும் மாற்றிக் கொள்வார் என்று இப்படிக் கண்டித்தார் என்று தோன்றுகிறது. பாரத நாட்டை ராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டுமானால், அதற்கு வேண்டிய நிர்வாக முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். வெறும் பிரசார முறையினால் ராஜ்ய பரிபாலனம் நடைபெறாது.

பிரதமர் பேசியது, பெரியாரை நல்வழிக்குத் திருப்புவதற்கு அல்ல. சென்னை அரசாட்சியை ஊக்குவதற்கு என்று வைத்துக் கொண்டு ஆராய்ந்தாலும், நேருஜியின் பேச்சில் நாம் பொருள் காணவில்லை. கூட்டத்தில் பேசுவதைவிடச் சென்னை அரசாங்கத்தாருக்குக் கண்டிப்பான உத்தரவு ஒன்று அனுப்பியிருந்தால் எண்ணிய நோக்கம் நிறைவேறியிருக்கும். அதற்குப் பதில் பெரும் கூட்டத்தில் பிரசங்கம் செய்வதில் பயன் ஒன்றும் ஏற்பட்டுவிடாது.

# அருள் வாக்கு

தென்னாட்டில் அநேகமாகக் கோயில்கள் எல்லாம் கிழக்குப் பார்த்தவை. சில இடங்களில் சுவாமி மேற்கு முகம் பார்த்தவண்ணம் இருக்கிறார். மேற்கு பார்த்த சுவாமிகள் உள்ள கோயில்களில் கூடப் பிரதான கோபுரம் கிழக்குப் பக்கத்திலேயே இருக்கும். ஆனால் இரண்டு இடங்களில்தான் பகவான் தெற்கு நோக்கி யிருக்கிறார். ஒன்று ஸ்ரீரங்கம். மற்றொன்று சிதம்பரம். இருவரும் ராஜாக்கள். ஒருவர் ரங்கராஜன். மற்றவர் நடராஜன். இரண்டு பேரும் கலாக்ஷேத்திரத்தைச் சேர்ந்தவர்கள். ரங்கம் என்றால் நாடக மேடை. அதற்கு ரங்கநாதன் ராஜா. மற்றவர் கூத்தாடுபவர்களுக்கு ராஜா; நடராஜன். இரண்டு பேரும் ஆனந்த மூர்த்திகள். ரங்கநாதன் ஆனந்தமாக யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கிறார். நடராஜன் ஆனந்தம் தாங்காமல் கூத்தாடுபவர். சாதாரணமாக ஆனந்தம் அதிகமாகப் போய்விட்டால் மனித இயல்பு பாடத் தோன்றும். ஆடத் தோன்றும். அதனால்தான் அளவுகடந்த ஆனந்தமான பிரும்மானுபவம் ஏற்படும் போது 'ஹாவு ஹாவு' என்று ஸாமகானம் பண்ணத் தலைப்படுகிறார்கள் என்று தைத்திரிய உபநிஷத்தில் கூறப்பட்டது. கவலை வந்தால் நன்றாகப் பாடக்கூடியவனுக்குக்கூடப் பாட்டு வராது. சம்சாரத்தில் துக்கம்தான் அதிகம். வாத்சல்யத்துக்குக் காரணமான குழந்தை குட்டிகள்கூட ஒரோர் காலத்தில் துக்கஹேதுவாகின்றன. ஆகவே துக்கம் நிறைய இருந்தாலும் ஒரு க்ஷணமாவது ஆனந்தம் வேண்டுமானால் ஆனந்தமாக யோக நித்திரையி லிருப்பவனை, ஆனந்தமாக நடனமாடுபவனை நினைக்க வேண்டும். ஒரு சிறு நினைப்புக்கூட நன்மை அளிக்கும், கூரையின் இடுக்கின் வழியே வரும் சூரிய ரச்மிகூட இருட்டாக இருக்கும் இடத்தில் பிரகாசத்தை உண்டுபண்ணுவது போல.

ஆனந்தம் இரண்டு விதம். பொங்குகிற ஆனந்தம், அடங்கியுள்ள ஆனந்தம். நடராஜனுடையது பொங்கும் ஆனந்தம். அந்தப் பொங்கும் ஆனந்த ஆட்டத்தின் வேகத்தில் சடைகூடத் தூக்கிக் கொண்டு நிற்கிறது. விரித்த செஞ்சடையான் கையில் இருக்கும் உடுக்கிலிருந்து கிளம்பும் சத்தம் பதினாறு சூத்திரங்களாக அமைந்தன. அடங்கியுள்ள ஆனந்தத்தைத் தக்ஷிணாமூர்த்தியிடம் காணலாம். அவரும் தெற்குப் பார்த்து இருப்பவர்தான். நடராஜர் காலை தூக்கி ஆடினால் தக்ஷிணாமூர்த்தி காலை அடக்கிக் கொண்டிருக்கிறார். நடராஜனுக்கு ஆனந்த முத்திரை. தக்ஷிணாமூர்த்திக்கு சின் முத்திரை. ரங்கநாதனுக்கு நித்ரா முத்திரை. 'நித்ரா முத்ராம்-ரக்ஷணே ஜாகருக:' என்பது ரங்கநாதனைப் பற்றிய அனுபவம். ஞானம் வந்தால் சாந்தம் ஏற்படும். ஜபம் செய்வதானால் தக்ஷிணாமூர்த்தியை நினைக்கவேண்டும். நடனம் பார்த்துக் களிக்க வேண்டுமானால் நடராஜனை நினைக்க வேண்டும். மூன்று பேரும் தெற்கே பார்க்கிறார்கள். அதன் கருத்து என்ன? மரண பயம், யமவாதனை இல்லாமல் நாங்கள் பார்த்துக் கொள்கிறோமென்று அவர்கள் ஆச்ரி தரிசனத்துக்காகத் தெற்குத் திக்கைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். இதில் அவரவர் மன ருசிப்படி எந்தத் தெய்வத்தை வேண்டுமானாலும் நினைத்து தியானிக்கலாம்.

ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்



# சென்னையில் நேருஜி

காந்தி கிராமத்துக்கு விஜயம் செய்ய வந்த நேருஜி லே. சென்னையில் பல நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார். 1. விமான நிலையத்தில் கவர்னர் திரு ராஜமன்னாரும், முதன் மந்திரி திரு காமராஜரும். 2. குழந்தைகளின் கேளிக்கை. 3. நேருஜியுடன் மேயர் ஸ்ரீமதி தாராசெரியனும், மந்திரி திருமதி லூர்தம்மாளும், ஷெரிப் திருமதி ஔப்வாலாவும். 4. குழந்தைகளின் திரைப்பட அரங்கைத் திறந்து வைக்கிறார் நேருஜி.







# வேலை நிறுத்த ஜுரம்

**ரஜனி**

—கொழும்பு, டிசம்பர் மீ 6உ

இவ்வாரம் இலங்கையில் வேலை நிறுத்தங்கள் ஏக அமர்க்களப்பட்டு அரசாங்கமே கவிழ்ந்து விடுமோ என்று அஞ்சும்படியான நெருக்கடி ஏற்பட்டுவிட்டது. பத்து தினங்களாகத் துறைமுகத் தொழிலாளர் சம்பள உயர்வும் அதிக அலவன்சும் கேட்டு வேலை நிறுத்தம் செய்தார்கள். இதனால் ஏராளமான சரக்குகளுடன் வந்த நாற்பதுக்கு மேற்பட்ட கப்பல்கள் துறைமுகத்தில் காத்துக் கிடக்க நேரிட்டது. மற்றும் பல கப்பல்கள் துறைமுகத்தில் நுழைய முடியாமல் வெளியிலேயே நின்றன. அழுகிவிடக் கூடிய கிழங்கு வெங்காயம் முதலியவை பல கப்பல்களில் இருந்தபடியினால் வியாபாரிகளுக்குப் பெரு நஷ்டம். கிறிஸ்துமஸ் பண்டிகைக்காக ஏராளமான ஜவுளிகளும் இதர பல சாமான்களும் கப்பல்களிலிருந்து இறக்க முடியாமல் இருந்தபடியினால் வியாபாரிகள் தவியாய்த் தவித்துப் போனார்கள். இனி அவைகளை இறக்கிக் கிறிஸ்துமஸ் வியாபாரத்தை நடத்தினாலும் பெரும் நஷ்டமேற்படுவது நிச்சயமென்று கவலைப்படுகிறார்கள். வேலை நிறுத்தம் அமர்க்களப்பட்டு வெடிகுண்டுவீச்சு, அடிதடி, சண்டை எல்லாம் நடந்து ஒருவிதமாகப் பத்து தினங்களுக்குப் பின் வேலை நிறுத்தம் முடிந்தது. தொழிலாளர் கோரியபடி அவர்களுக்குச் சம்பள உயர்வும் அதிக அலவன்சும் கிடைத்தன.

இலங்கையின் பொருளாதாரம் தேயிலை ரப்பர் ஏற்றுமதியையே பொறுத்திருக்கிறது. பத்து தினங்களாகத் தேயிலை ஏற்றுமதியாகாதபடியினால் மலை மலையாகத் தேயிலைப் பெட்டிகள் குவிந்து கிடக்கின்றன. தேயிலை ஏல விற்பனையும் நடைபெற முடியவில்லை.

இந்த லட்சணத்தில் சுமார் 8000 முனிசிபல் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தபடியினால் கொழும்பு நகரம் நரகலோகத்தைப் போலாகிவிட்டது. துர்நாற்றம் தாங்க முடியவில்லை. சில வீதிகளில் நடந்துபோகவே முடியவில்லை. இராணுவத்தினர் விசேஷ சேவையில் அமர்த்தப்பட்டுள்ள பொழுதிலும் நகரத்தி வேலையை அவர்களால் சமாளிக்க முடியாமல் மக்கள் தவிக்கிறார்கள். வீட்டுக்கு வீடு மலைபோலக் குப்பைகள் குவிந்து கிடக்கின்றன. இக்கடிதத்தை எழுதும் வரையில் முனிசிபல் தொழிலாளர் வேலை நிறுத்தம் முடிவடையும் அறிகுறியைக் காணோம். டிராம், பஸ், டிராலி பஸ் தொழிலாளரும் இந்த வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டிருக்கிறார்கள். ஒருசிலர் மாத்திரம் வேலைக்குத் திரும்பியுள்ளதால் போலீஸ் பாதுகாப்புடன் சில டிராலி பஸ்கள் சில இடங்களில் ஓடுகின்றன. டிஸம்பர் 16ம் தேதி முதல் ரயில்வே மின்சார இலாகா, தபால் தந்தி இலாகா, பொது மராமத்து, ஸ்தல ஸ்தாபன இலாகா முதலியவற்றைச் சேர்ந்தவர்கள் வேலை நிறுத்தத்தை ஆரம்பிக்கப் போவதாக அறிவிப்பு கொடுத்திருக்கிறார்கள். கொழும்பு முனிசிபல் சபையை அரசாங்கம் இவ்வாரம் திடீரென்று கலைத்து விட்டு, ஒரு கமிஷனரை நிர்வாகியாக நியமித்திருக்கிறது.

டிஸம்பர் மத்தியில் பல யூனியன்களைச் சேர்ந்தவர்கள் ஏககாலத்தில் வேலை நிறுத்தம் செய்தால் நிலைமை என்ன ஆகுமோ என்று மக்கள் கலங்கி வருகிறார்கள். காரியம் மிஞ்சிப் போவதற்குள் பிரதம மந்திரி ஒரு சமரச உடன்பாடு செய்து விடுவார் என்ற நம்பிக்கையும் இல்லாமலில்லை. எப்படியும் இந்த டிஸம்பர் மாதம் பண்டாரநாயகா அரசாங்கத்துக்கு ஒரு பெரிய சோதனைகாலமாக இருக்கப்போகிறது என்பதில் சந்தேகமில்லை. கொழும்பு முனிசிபல் சபையைக் கலைத்தது போல் பார்லிமெண்டையும் கலைத்து மறுதேர்தல் நடத்த வேண்டுமென்று எதிர்க் கட்சித் தலைவர் வற்புறுத்தி வருகிறார். அரசாங்கத்தின் மீது ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வரப் போவதாயும் அவர் அறிவித்திருக்கிறார்.

இதற்கிடையில் இன்று நாட்டில் நடக்கும் குழப்பங்களுக்கெல்லாம் எதிர்க் கட்சித் தலைவரான டாக்டர் என். எம். பெரைரா என்பவர் காரணமென்றும் ஆட்சியைக் கைப்பற்ற அவர் திட்டமிட்டுச் சதி செய்து வருவதாயும் அரசாங்கம் குற்றம் சாட்டுகிறது. இலங்கையில் பண்டாரநாயகா அரசாங்கம் ஏற்பட்ட நாள் முதல் தொழிலாளர் பலம் மேல் ஓங்கி வருவதையும் முதலாளிமார்களை அவர்கள் ஆட்டிவைப்பதையும் எல்லா இடங்களிலும் பார்க்க முடிகிறது. தொழிலாளர் யூனியன் என்ற பேச்சுக்கே இடமில்லாமல் இருந்த இடங்களில் கூடக் கட்டுப்பாடான யூனியன்கள் ஏற்பட்டு நிலைமை தலைகீழ்ப்பாடமாகிவருகிறது. தான் வளர்த்த கடாவே மார்பில் பாய்ந்த கதையைப்போல் பண்டாரநாயகா அரசாங்கத்தின் கதி ஆகிவிடுமோ என்று இப்பொழுது பலரும் பகிரங்கமாகவே பேசிக் கொள்ளத் தலைப்பட்டுவிட்டனர்.

இவ்வாறிருக்க, ஸ்ரீ எஸ். தொண்டமான் தலைமையிலுள்ள இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வதென்று தீர்மானித்திருக்கிறது. தொழிலாளரின் ஐந்து அம்சக் கோரிக்கைகளை முன்வைத்து நான்கு லட்சம் தோட்டத் தொழிலாளர்களை ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்யும்படி ஸ்ரீ தொண்டமான் கோரியிருக்கிறார். இந்த அடையாள வேலைநிறுத்தத்துக்குப் பிறகும் தோட்டமுதலாளிமார்கள் இணங்கி வராவிட்டால் மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுப்பது என்பதைக் காங்கிரஸ் தீர்மானிக்குமாம்.

நாடு முழுவதும் பரவி வரும் வேலை நிறுத்த ஜுரம் மக்களின் அன்றாட வாழ்க்கையைக் கடுமையாகப் பாதித்து வருகிறது. பொழுது விடிந்து பத்திரிகையைப் புரட்டினால் புதிதாக என்ன வேலைநிறுத்த எச்சரிக்கை இருக்குமோ என்று கவலைப்படும் இந்த நிலைமையை நிச்சயம் நீடிக்கவிட முடியாது.




எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரம் பூமி. அவைகளை உருவாக்கி அனுபவிப்பது மனித சமூகங்கள். ஆதலால், ஒரு நாட்டின் பொருளாதாரத்தை ஆராய்வதற்கு முன் அதன் நிலப்பரப்பையும் மக்களையும் பற்றி அறிவது அவசியம்.

பாரதத்தோடு ஒப்பிடுவதற்குச் சில முக்கிய நாடுகளின் விவரங்கள் பின்வருமாறு :

| | விஸ்தீர்ணம் லக்ஷம் சதுரமைல் | ஜனத்தொகை லக்ஷம் | சதுரமைலுக்கு ஜன விகிதம் |
|---|---|---|---|
| பாரதம் | 11.74 | 3567 | 304 |
| சைனா | 38.58 | 5902 | 153 |
| சோவியத் ருஷியா | 84.73 | 2145 | 25 |
| அமெரிக்க ஐக்கிய நாடு | 30.22 | 1643 | 50 |
| ஜப்பான் | 1.47 | 882 | 601 |
| மேற்கு ஜெர்மனி | .95 | 491 | 520 |
| பிரிட்டன் | .93 | 509 | 545 |
| பிரான்ஸ் | 2.13 | 428 | 202 |

சைனாவைவிட இந்தியாவின் ஜனநெருக்கம் இரு மடங்கு. அமெரிக்க ஐக்கிய நாட்டைக் காட்டிலும் 6 மடங்கு. சோவியத் ருஷ்யாவை விட 12 மடங்கு. சராசரி ஜன விகிதத்தில் ஜப்பான், ஜெர்மனி, பிரிட்டன் மூன்றும் அதிக நெருக்க முள்ளன. ஆனால் அவை சிறிய தேசங்கள். இயந்திரத் தொழில் ஓங்கிய நாடுகள். தவிர, இந்தியாவின் ஜன நெருக்கம் சமமாக இல்லை. ராஜ்ய வாரி யான புள்ளி விவரங்கள் பின் வருமாறு :

| | விஸ்தீர்ணம் ஆயிரம் சதுரமைல் | ஜனத்தொகை லக்ஷம் | சதுரமைல் ஜன விகிதம் |
|---|---|---|---|
| ஜம்முவும் காஷ்மீரும் | 92.8 | 44.0 | 48 |
| ஆந்திரப்பிரதேசம் | 105.7 | 312.6 | 295.7 |
| அஸ்ஸாம் | 85.1 | 90.4 | 106.3 |
| பீகார் | 67.1 | 387.8 | 577.9 |
| பம்பாய் | 190.7 | 483.7 | 253.1 |
| கேரளம் | 14.9 | 135.5 | 907.1 |
| மத்தியப் பிரதேசம் | 171.3 | 260.7 | 152.2 |
| சென்னை | 50.2 | 299.7 | 597.4 |
| மைசூர் | 74.9 | 194 | 259.2 |
| ஒரிஸ்ஸா | 60.3 | 146.5 | 243.1 |
| பஞ்சாப் | 47.1 | 161.3 | 342.8 |
| ராஜஸ்தான் | 132.1 | 159.7 | 120.9 |
| உத்தரப் பிரதேசம் | 113.4 | 632.2 | 557.3 |
| மேற்கு வங்காளம் | 33.9 | 263 | 776.2 |
| மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத்துக்குட்பட்ட இதர பகுதிகள் : | | | |
| ஹிமாசலப் பிரதேசம் | 10.9 | 11.09 | 102.0 |
| டில்லி | 0.6 | 17.44 | 3017 |
| மணிப்பூர் | 8.6 | 5.77 | 67 |
| திரிபுரா | 4.0 | 6.39 | 158 |
| அந்தமான், நிகோபார் தீவுகள் | 3.2 | 0.30 | 10 |
| லக்ஷத் தீவுகள், மினிகாய், அமினிதிவித் தீவுகள் | (10 சதுரமைல்) | 0.21 | 2144 |



# மக்களும்

ஒரு சதுர மைலுக்கு 640 ஏக்கரா. சாதாரணமாக மூன்றில் ஒரு பங்கு மலை, காடு, சதுப்பு நிலம், ஆறு, குளம், ஏரி முதலியவைகளால் அடைபட்டு மனிதவாசத்துக்குப் பிரயோசனப்படாது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆதலால், சதுர மைலில் 427 ஏக்கராக்கள்தான் இதற்கு உதவும்.

இவற்றிலும் மேய்ச்சல் நிலமென்றும், தரிசு நிலமென்றும் தரக் குறைவான நிலமென்றும் ஒரு கணிசமான பாகம் விவசாயத்துக்கு உபயோகப்படாதது. சாகுபடிக்கு ஏற்ற நிலம் ஒரு சதுர மைல் விஸ்தீரணத்தில் சராசரி 325 லிருந்து 350 ஏக்கர் நிலம்தான் என்று கணக்கெடுக்கப்பட் டிருக்கிறது. இதன்படி பார்த்தால் கேரளம், வங்காளம், சென்னை, பீகார், உத்தரப் பிரதேசங்களில் உபயோகமான நிலம் தலைக்கு ஒரு ஏக்கரா விகிதம் கூட இல்லை என்பது அந்த ராஜ்ய மக்களால் மிகவும் கவலையுடன் கவனிக்கத் தக்கது.

ஒரு தேசத்தின் விஸ்தீரணத்துக்கும் ஜன நெருக்கத்துக்குமுள்ள சம்பந்தத்தைப் பற்றிப் பொருளாதார வித்வான்கள் இருநூறு வருஷங்களாக நுண்ணிய சர்ச்சை செய்து வருகின்றனர். நாட்டின் விஸ்தீரணம் என்றும் மாற முடியாது. ஜனத்தொகையோ ஓயாமல் மாறிக் கொண்டிருக்கும். 1803-ம் ஆண்டில் மால்தஸ் என்ற ஆங்கில ஆசிரியர் 'ஜனத்தொகைத் தத்துவம்' என்ற ஒரு நூல் பிரசுரித்து ஐரோப்பிய மக்களைப் பிரமிக்கச் செய்தார். ஒரு நாட்டின் ஜனத்தொகை மக்களின் இயற்கை நியதிகளின்படி பெருகி வளருகிறது. ஆனால் உற்பத்தியாகும் நில விஸ்தீரணத்தைக் கணக்கின்றி அதிகரிக்க முடியாது. தரிசு நிலங்களைப் பண்படுத்தி விவசாயத்துக்குக் கொண்டு வரலாம். விவசாய முறைகளையும் மாற்றி யமைத்து ஓரளவுக்கு உற்பத்தியை விரிவடையச் செய்யலாம். ஆனாலும் இவற்றின் மூலம் கிடைக்கக்கூடிய அதிகப்படி உணவு உற்பத்தி துரிதமாக அதிகரிக்கும் ஜனத்தொகையைப் போஷிக்கப் போதாது. ஏனெனில் உணவு உற்பத்தி 1, 2, 3, 4 அல்லது இரு மடங்கு, மும் மடங்கு, நான்கு மடங்கு என்ற வரிசைக் கிரமத்தில் பெருகுகிறது. ஆனால் ஜனத்தொகையோ 1, 2, 4, 8, 16, 32 அல்லது இரு மடங்கு, நான்கு மடங்கு, எண் மடங்கு, பதினாறு மடங்கு, முப்பத்திரண்டு மடங்கு என்று இரட்டிப்புத் துரிதக் கிரம வரிசையில் பெருகுகிறது. இதன் விளைவாக நாளடைவில் மக்களுக்கு வேண்டிய உணவு கிடைக்காது. பலவித நோய்கள் பெருகி நாட்டில் அகால மரணம் அதிகரித்து ஜனசங்கியை குறைக்கும். எக்காலங்களில் இம்மாதிரி ஜனப் பெருக்கத்துக்கும் உணவு உற்பத்திக்கும் ஏற்றத் தாழ்வு ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் நாட்டில் பசி, பிணி முதலியவை மேலிட்டு மக்கள் அழிவார்கள். இயற்கை வசதிகளின் வரம்புகளைத் தாண்டிய ஜனத்தொகை இயற்கைச் சக்திகளாலேயே வரம்புக்குட்படுத்தப்படும் என்று அவர் கூறினார். இந்தக் கொள்கையை அவர் ஒரு பொது விதியாகவே போதித்தபடியால் அவர் பெயராலேயே ''மால்தஸின் விதி'' என்று இது பொருளாதார நூல்களில் இடம் பெற்றிருக்கிறது.

இந்த நூல் பிரசுரமானதும் ஐரோப்பிய நாடுகளில் பெரும் பரபரப்பை உண்டாக்கியது. அச்சமயம் அந்தத் தேசங்களின் ஜனத்தொகை தீவிரமாகப் பெருகி வந்தது. திகிலடைந்த மக்கள் இந்தஅபாயத்தைத் தவிர்க்க வழி தேடினார்கள். மால்தஸ் அவ்வழிகளை ஆதரிக்காத போதிலும், விஞ்ஞானிகளும், சமூக தத்துவஞானிகளும் அறிவுள்ள மனிதன் மிருக சக்திகளுக்குத் தலைகுனியலாகாது. மால்தஸ் கூறிய அபாயத்தை மனித முயற்சிகளால் தடுக்க வேண்டும் என்று பிரசாரம் செய்தனர். தெய்வ பக்தியுள்ளவர்கள் தம்பதிகளின் இந்திரிய நிக்கிரகம் ஒன்றே அறவழி என்று வாதாடினர். அது சாத்தியமல்ல என்று, மற்றவர்கள் கர்ப்பத் தடைமுறைகளை ஆராய்ச்சி செய்து பிரயோகிக்கலானார்கள். அதன் பலனாக பிரிட்டன், பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய நாடுகளின் ஜனவளர்ச்சி குறைய ஆரம்பித்து, தற்சமயம் அது அநேகமாக நின்று விட்டது. வருங்காலத்தில் ஜனத்தொகை குறைந்து விடுமோ என்ற பயமும் ஏற்பட்டுவிட்டது. இரண்டு உலக யுத்தங்களுக்கு நடுவில், முசோலினி, ஹிட்லர் முதலிய எதேச்சாதிகாரிகள் தங்கள் நாடுகளின் சைனிய பலத்தை விருத்தி செய்வதற்காகக்

கர்ப்பத் தடை முறைகள் அனுஷ்டிக்கப்படுவதைக் குற்றமாக்கிக் குழந்தைகள் அதிகமாகப் பெறும் பெற்றோர்களுக்குப் பரிசுகள் வழங்கி ஜனத்தொகையைப் பெருக்க முயற்சி செய்தனர். சோவியத் ருஷ்யாவில் முதலில் கர்ப்பத் தடை முறைகளும், கர்ப்பங்களை அழிக்கும் வசதிகளும் அனுமதிக்கப்பட்டு, பின்னர் யுத்த பயம் மேலிட்டதால் ஸ்டாலின் கோஷ்டியாரும் ஹிட்லரைப் பின்பற்றத் தொடங்கினர்.

ஜனத்தொகைப் பெருக்கை நிர்ணயிக்க இரண்டு அளவுகளைக் கையாளலாம். ஒன்று ஸ்தூல அளவு. பிரதி வருஷம் புதிய பிறப்புகளின் தொகையிலிருந்து இறப்புகளின் எண்ணிக்கையைக் குறைத்தால் மீதியிருப்பது அவ்வாண்டின் ஜன விருத்தியைக் குறிப்பிடும். பாரதத்தில் தற்பொழுது வருஷாந்திரப் பிறப்பு ஆயிரம் மக்களுக்கு 36-லிருந்து 44 வரையில், சராசரி 40. சாவுகளோ 21-ல் இருந்து 34 வரையில், சராசரி 27. ஆதலால் பாரதத்தின் சராசரி வருஷாந்திர விருத்தி 1000-த்துக்கு 13 அல்லது 100-க்கு 1.3 என்று கணக்கிடலாம்.

ஆனால் இது முற்றிலும் சரியான நிர்ணய முறையல்ல. நாட்டின் மக்கள் எல்லோரும் பிறப்புகளுக்குக் காரணமில்லை. கர்ப்பம் தரிக்கக்கூடிய பெண்களின் எண்ணிக்கையையும், அவர்களுக்கு, சராசரி எத்தனை குழந்தைகள் பிறக்கின்றன என்பதையும் கொண்டே நிர்ணயிக்க வேண்டும். நமது நாட்டில் அனேகமாக எல்லாப் பெண்களுக்கும் விவாகமாகி, தாம்பத்திய வாழ்க்கை நடைபெறுகின்றது. 15 வயதிலிருந்து 45 வயது வரையில் கர்ப்பம் தரிக்கும் சக்தி உண்டு. இந்த வயதுக்குட்பட்ட பெண்களின் தொகை 750 லக்ஷம். ஒவ்வொருவருக்கும் இந்த முப்பது வருஷத்தில் சராசரி 6 குழந்தைகள் பிறக்கின்றன. அதாவது வருஷாந்திரவிகிதம் 1/5. ஆதலால் மொத்தம் 150 லக்ஷம் குழந்தைகள் பிறக்கின்றன. ஆண்டுதோறும் சுமார் 100 லக்ஷம் மக்கள் இறந்து போவதால் மீதி 50 லக்ஷம் நமது ஜனத்தொகையின் வருஷ வளர்ச்சியாகும். இதுகூட ஓரளவு ஸ்தூலக் கணக்கேயாகும். குழந்தை பிறப்பு விகிதம் மாறுதலடைந்து வருகிறது. மரண விகிதமும் மாறுகிறது. இவற்றின் மாற்று விகிதத்தையும் கவனித்து ஏற்பட்ட கணித சூத்திரங்களைக் கொண்டு ஜனத்தொகை நுட்பமாக நிர்ணயிக்கப்படுகிறது.

நமது நாட்டின் ஜனத்தொகை 1921-ம் தணிக்கையில் 2482 லக்ஷமாக இருந்து 1931-ல் 2755 லக்ஷமாகி, 1941-ல் 3149 லக்ஷமாகப் பெருகி, சென்ற 1951-ம் வருஷத் தணிக்கையில் 3568 லக்ஷமாயது. இதே கணக்கில் போனால், இருபத்தைந்து வருஷங்களில் பாரதத்தின் ஜனத்தொகை 50 கோடி ஆகி விடக்கூடுமென்று அறிஞர்கள் கணக்கிட்டிருக்கின்றனர்.

ஐரோப்பாவில் மால்தஸ் தத்துவத்துக்கு இருந்த மதிப்பு சென்ற நூறு வருஷங்களில் குறைந்து விட்டது. பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நாடுகள் இயந்திரத் தொழிலில் முன்னேறி, ஆசிய ஆப்பிரிக்கா நாடுகள்மீது தமது ஆதிக்கம் செலுத்தியதால் வெளிநாடுகளிலிருந்து உணவு இறக்குமதி செய்வது சுலபமாகி விட்டது. விஞ்ஞான முறையில் விவசாயத்தின் பலனைப் பன்முறை அதிகரிக்க ஆற்றல் பெற்றனர். கர்ப்பத் தடை முறைகளால் ஏற்படும் விருத்திக் குறைவோடு, நாட்டின் செல்வம் வளர்ந்து மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தால் தம்பதிகளுக்குக் குழந்தைகள் பிறக்கும் விகிதமும் குறைகிறதென்பதையும் கண்டனர். வைத்திய முறைகளின் முன்னேற்றத்தாலும் சுகாதார வசதிகளின் பெருக்காலும் குழந்தைகளின் அகால மரணங்கள் மிகவும் குறைந்துவிட்ட போதிலும், பிறப்புகள் குறைந்ததால் ஜனவிருத்தி அத்தேசங்களில் குறைந்து விட்டது. நமது நாட்டில் பிறக்கும் 1000 குழந்தைகளில் சராசரி 116 ஒரு வருஷத்துக்குள் இறந்து விடுகின்றன. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் 20 குழந்தைகளே சாகின்றன. ஆனால் அவ்விடங்களில் வருஷாந்திர மரண விகிதம் 1000 த்துக்கு 12 தான்; இந்தியாவிலோ 40.

மால்தஸ் தத்துவத்தின் போக்கு, பொருளாதார முன்னேற்றத்தாலும், நவநாகரிக ஒழுக்கங்களாலும் ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் பெரும்பாலும் பாதிக்கப்பட்டிருந்தாலும் விவசாயத்தையே அண்டிப் பிழைத்து ஜனநெருக்கம் மிகுந்த தேசங்களில் நன்கு கவனிக்கத் தக்கதாகவே இருக்கின்றது. இது பாரதத்துக்கு மிகவும் பொருந்தும். நமது ஜனப்பெருக்கைக் குறைத்து ஓர் வரம்புக்கு உட்படுத்தாமல் இருப்பின் நமது ஐந்து வருஷத் திட்டங்களும், அவைகளால் ஏற்படும் செல்வ விருத்தியும் கடலில் கரைத்த சர்க்கரை போலாகும்.

இப்பிரச்னையைப் பற்றிய மற்றோர் உண்மையையும் இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் மறக்கலாகாது. ஜனத் தொகையின் விருத்தியும் குறைவும் நீண்ட காலக்கிரமத்தில்தான் நேரக்கூடியவை. உலக யுத்தம், கொடிய தொத்து வியாதிகள் முதலிய பேராபத்துகளால் சில வேளை திடீரென்று மாறுதல் ஏற்படக் கூடும். சாதாரணமாக, இருபத்தைந்து அல்லது முப்பது வருஷங்களில்தான் மாறுதல் போக்குகளின் பலன் தெளிவாகும். இன்றே இந்தியத் தம்பதிகள் ஒவ்வொருவரும் சராசரி ஒரு குழந்தையைக் குறைத்துக் கொள்ளுவது என்று தீர்மானம் செய்து அதை நிறைவேற்றினாலும் அடுத்த பதினைந்து வருஷங்களுக்கு ஜனத்தொகை தற்போதைய விகிதத்தில் பெருகிக் கொண்டே போகும். அதன் பின்னரே விகிதம் குறையும். பாதி பலன் முப்பது வருஷங்களுக்குப் பிறகு கிடைக்கும். முழு பலன் தோன்றுவதற்கு நாற்பத்தைந்து வருஷங்களாகும். அப்பொழுதே இன்றையத் தாய்மார்கள் எல்லாரும் மக்களைப் பெறும் வயதைத் தாண்டுவார்கள். ஆதலால் ஜன அபிவிருத்தியைக் கட்டுப்படுத்தும் முயற்சிகள் பலன் அளித்து விடும் என்று நம்பி, இடைக்காலத்தில் அதிகரித்துக் கொண்டே போகும் ஜனத்தொகையின் பராமரிப்புக்கு வேண்டிய உணவு, உடை, வீடு முதலிய சாதனங்களைப் பெருக்கும் முயற்சிகளைத் தளரவிடக் கூடாது. (தொடரும்)

# வள்ளுவர் வாசகம்

## ராஜாஜி

### 8

பர புருஷர்களிடம் மனம் செல்லாதவாறு மனைவியை வீட்டில் அடைத்து வைப்பதும், பிற நிர்ப்பந்தங்களுக்கு உட்படுத்துவதும் பயன்தர மாட்டா. பெண்ணாகப் பிறந்தவளுக்கு உறுதியான துணையும் 'காப்பும் அவளுடைய மனநிறை ஒன்றே. 'நிறை' என்றால் அந்தரங்க உறுதி. வெளி நிர்ப்பந்தங்களினால் பயனில்லை. அந்தராத்மாவின் காப்பே காப்பு.

சிறைகாக்கும் காப்பு எவன்
செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே
தலை.

புறநிர்ப்பந்தங்களினால் உண்டாகும் சுத்தம் கற்பாகாது. தன் உள்ளத் தூய்மையால் அடையும் சுத்தமே கற்பு.

கணவன் ஏற்படுத்திய நிர்ப்பந்தங்களினாலும், தானாக வைத்துக் கொள்ளும் நிர்ப்பந்தங்களினாலும் ஒருத்தி கஷ்டப்பட்டு அடையும் பரிசுத்த நிலை, உண்மைக் கற்பு ஆகாது. தன் மன உறுதியினாலும் பண்பட்ட இயல்பினாலும் தானாகவே நிற்கும் சுத்த நிலையே, உண்மைக் கற்பு. அத்தகைய கற்புடைய மனைவி யாருடன் பேசிப் பழகினாலும், எங்கே சென்றாலும் அவளுடைய கற்புக்குக் குறைவில்லை. காப்பு உள்ளே இருக்கிறது. வெளியே காப்பு வேண்டியதில்லை.

காலப் போக்குடன் சமூக வாழ்க்கை முறைகள் மாறுபடும். ஒரு காலத்தில் குற்றமாகக் கருதக் கூடிய செயல்களை இக்காலத்தில் தவறாக எண்ணமாட்டோம். ஆனால் வழக்கங்கள் எவ்வளவு மாறியபோதிலும் சில உண்மைகள் எக்காலத்திலும் மாறாத உண்மையாகும். மகளிரைப் பற்றிய வழக்கங்களும் கட்டுப்பாடுகளும் இக்காலத்தில் மிகவும் மாறுபாடு அடைந்து விட்ட போதிலும், கற்பின் சிறப்பும் அந்தக் கற்புக்குக் காப்பாக அமையும் உள்ளத்தின் தூய நிலையும் இக்காலத்திலும் உண்மையேயாகும். முனிவர் சொன்னவை பழைய காலத்துப் பேச்சு என்று தள்ளிவிட வேண்டியதில்லை. தள்ளினால் துக்கமும் துயரமும் விளையும்.

பெண் குலத்துக்கு வள்ளுவர் கொடுக்கும் மதிப்பையும், மன நிறைக்கு அவர் தரும் சிறப்பையும் இக்காலத்திலும் நாம் தந்து, குடும்ப வாழ்க்கையை மாண்புறச் செய்ய வேண்டும். நல்லொழுக்கத்தோடு வாழும் குடும்பங்கள் நிறைந்த நாடே, இன்பமும் புகழும் அடையும்.



# மாதர்குல திலகங்கள்



## திருமதி தாரா செரியன்

சென்னை நகரம் முதன் முறையாகப் பெண் குலத்துக்குப் பெருமையளித்துக் கௌரவித்தது. பாரதியாரின் நீண்ட நெடுநாளையக் கனவு இன்று நனவாகியது: 'பெண்மை வாழ்க வென்று கூத்திடுவோமடா!' என்று விடுதலை முரசம் மகிழ்ச்சியொலி எழுப்பியது.

சென்னை நகரச் சரித்திரத்திலே முதல் தடவையாகத் திருமதி தாரா செரியன் மேயர் பதவியை அடைந்திருக்கிறார். தமிழ்நாட்டு மக்கள் பெண் குலத்துக்கு அளிக்கும் பெருமை இதிலிருந்து நன்கு விளங்குகிறதல்லவா?

அல்லும் பகலும் அனவரதமும் பெண் மக்களின் நல்வாழ்வுக்காகவே அரும் பணி புரிந்து வருகிற திருமதி தாரா சென்னையில் 1913-ம் வருஷம் மேமாதம் 28-ந் தேதி பிறந்தார். அவரது குடும்பம் சென்னையில் நீண்ட நெடுங்காலமாக வசித்து வருகிற குடும்பம். போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் ஸ்ரீ டி. ஐ. ஜேசுதாசன் அவர்களின் புதல்வி இவர். சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில் கல்வி பயின்று திருமதி தாரா பி. ஏ. பட்டம் பெற்றார். தாம் பெற்ற கல்விச் செல்வத்தை இவர் வீணாக்காமல், பல கல்வி நிலையங்களின் வளர்ச்சிக்குப் பயன்படுத்தி வருகிறார்.

சென்னை சர்வகலாசாலை செனட் சபையில் அங்கத்தினராக அமர்ந்து இவர் கல்வித் தொண்டு புரிந்திருக்கிறார். சென்னை ஆசிரியப்பயிற்சிக் கல்லூரி, லேடி வெல்லிங்டன் கல்லூரி இவற்றின் ஆலோசனைக் குழுவின் அங்கத்தினராக இருந்து இவர் ஆற்றிய அருஞ் செயல்கள் பல.

பிரசித்தி பெற்ற சென்னை எழும்பூரிலுள்ள மாதர், குழந்தைநல ஆஸ்பத்திரியின் ஆலோசனைக் குழுத் தலைமைப் பதவி இவரை நாடி வந்ததென்றால் இவரது தொண்டின் சிறப்புக்கு வேறு அத்தாட்சி வேண்டியதில்லை.

ரஷ்யா, சீனா, உஸ்பெக் முதலிய வெளிநாடுகளிலிருந்து பல கலைத் தூதுவர்கள் நம் நாட்டுக்கு விஜயம் செய்தனரல்லவா? விருந்தினர்களை வரவேற்று உபசரிக்கும் பணி திருமதி தாரா செரியனிடம் வந்தடைந்தது. சென்னையில் வெளிநாட்டுத் தூதுவர்களை அகமும் முகமும் மலர வரவேற்று உபசரித்துப் பெரும் பாராட்டுதலைப் பெற்றார் திருமதி தாரா.

வெள்ளம், பஞ்சம் முதலிய உற்பாதங்களால் அல்லலுறும் மக்களின் துயரைத் துடைக்கும் பிரதம மந்திரி தேசிய நிவாரண நிதிக்கு ஏராளமான நன்கொடை வசூலித்துக் கொடுத்திருக்கிறார்.

சென்னை மேல்சபையின் அக்கிராசனராக இருந்துவரும் டாக்டர் செரியன் அவர்களின் மனைவியார் திருமதி தாரா. அவர் வைத்தியத் துறையில் பெரும் புகழ் ஈட்டினார். டாக்டர் செரியன் அவர்களைப் போலவே, திருமதி தாரா செரியன் மாதர் நலனுக்குத் தொண்டு புரிந்து நற்பெயர் சம்பாதித்திருக்கிறார். எழும்பூர் மாதர், குழந்தை நல ஆஸ்பத்திரிக்காக ஒரு 'பிளாக்' இவரது பெருமுயற்சியினாலேயே நிறுவப்பட்டது. ஹரிஜனக் குழந்தைகளுக்காகச் செய்யூரில் ஒரு உணவு விடுதியைத் துவக்கி வைத்து அறத் தொண்டு புரிந்தார். சென்னை நகரத்திலுள்ள பல மாதர் நல ஸ்தாபனங்கள் இவரது சேவையைப் பெற்றிருக்கின்றன.

சென்னை நகரசபைக்குச் சென்னை சர்வகலாசாலையின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட திருமதி தாரா ஆல்டர்மனாகவும் இருந்திருக்கிறார். விளையாட்டுக் கலையிலே திருமதி தாராவுக்கு அபாரப் பிரியம். டென்னிஸ், கிரிக்கெட் முதலிய விளையாட்டுக்களில் மிகுந்த ஈடுபாடு இவருக்கு.

இங்கிலாந்து, அமெரிக்கா, ஐரோப்பா முதலிய உலகிலுள்ள பல தேசங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து அங்குள்ள சமூக நல ஸ்தாபனங்களின் வேலை முறைகளையெல்லாம் தெரிந்துகொண்டிருக்கிறார். அயல்நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தில் டிவேலராவையும், போப்பாண்டவரையும் சந்திக்கும் வாய்ப்பு இவருக்குக் கிட்டியது. பிரிட்டனுக்கு விஜயம் செய்தபோது, அங்குள்ள ஸ்தல ஸ்தாபன முறையை அறியும் சந்தர்ப்பம் கிடைத்தது.

பெண் சமூக நலத் தொண்டும், கல்விப் பணியும் ஆற்றியுள்ள திருமதி தாரா செரியன் சென்னை மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டுகிறோம். பெண் குலத்துக்குப் பெருமையளித்த சென்னை நகரசபைக்கு வாழ்த்துக் கூறுகிறோம்.



## பி. வி. ஜி ஊசியின் விளைவு

தலைவர் ராஜாஜி அவர்களுக்கு, வணக்கம்.

சேலம் ஜில்லா ஓமலூர் தாலூக்கா தாரா புரம் கிராமத்தில் பி. வி. ஜி ஊசி நெசவாளி களுக்குப் போட்டார்கள்.

இருமல் வியாதியால் ஒரு மாதத்துக்கு முன்பு ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஒரு வாரம் இருந்து குணமடைந்த காவேரி என்ற ஒரு ஏழை நெசவாளி 1-12-57 பி. வி. ஜி ஊசி போட்டதால் மறுபடியும் வியாதி ஆரம்பித்து இளைப்பு, இருமல் ஏற்பட்டுத் தொழில் செய்ய முடியாமல் மூன்று நாட்களாகக் கஷ்டப்படு கிறார். இன்று அவர்கள் பரிசீலனை செய்து உடனடியாக ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போகும்படியும் வியாதி மீறி விட்டதாகவும் கூறினார்கள். மற்றொருவர், பெருமாள் என் பவர் கை வலி எடுத்து நெய்ய முடியாமல் தவிக்கிறார்.

தாராபுரம் புதூர்
4—12—57

டி. வி. ராஜகோபால்

## பிரார்த்தனை

அரசியல், ! சமுதாய முன்னேற்றம், சமாதானம், இலக்கியம் ஆகிய பல்வேறு துறைகளில் சிறந்த பணி புரிந்து உலகுக்கே ஒரு தலைவராக விளங்கும் உத்தமர் ராஜாஜி அவர்களுக்கு மனித சமூகம் என்றுமே கடமைப் பட்டிருக்கிறது .அவருடைய சேவை களுக்கு நன்றி தெரிவிப்பது போல அவருடைய பொன்னடிகளில் 'கல்கி' மலரைச் சமர்ப் பித்து, தமிழன் என்றும் நன்றி மறவாதவன் என்பதைச் சிறப்பாக எடுத்துக் காட்டி விட்டீர்கள். பாரதத்தின் உயர்ந்த பதவியை வகித்து ராஜனாகவும் ஆசிரமத்தில் வாழ்ந்து எளிய கோபாலனாகவும் அவர் நாட்டுக்குச் செய்த தொண்டுகள் வேறொருவர் எண்ணிக் கூடப் பார்க்கமுடியாதவை.மதுவிலக்கு மூதல் மக்கள் வயிறார உண்ணுவதற்காக ரேஷனையும் கண்ட்ரோலையும் எடுத்ததுவரை நம் தமிழ் மக்களுக்குச் செய்துள்ள நற்காரியங்கள் எண்ணி லடங்கா. இப்பேர்ப்பட்ட ஒரு பெரியாரை என்றும் மனமாரப் போற்றினால் தான் நாம் நல்வாழ்வு வாழ முடியும். அவர் நீண்ட காலம் நல்வாழ்வு வாழ அருள் புரியு மாறு இறைவனை இறைஞ்சுவோம்.

கானாடுகாத்தான்
5—12—57

கே. சுந்தரராமன்

## எப்படி வர்ணிப்பது?

வியாழக்கிழமை விடியற்காலை வாரப் பதிப்பு கல்கியின் நினைவுடன் எழுந்தேன். அடுத்த கடைக்குச் சென்று அட்டைப் படத் தைப் பார்த்தவுடன் ஆவல் அதிகமாகி விட்டது. உடனே வாங்கி உள்ளே புரட்டி னேன். ''யுக புருஷ''ரின் சேவைகளைப் படித்து விட்டு ''உலகத் தலைவர் ராஜாஜி'' யையும் கர்மயோகி, உலகுக்கு ஒரு மேதை, ஞான முனிவர் ராஜாஜியையும் கண்டேன். பாரத ரத்னங்களின் தரிசனம் செய்து விட்டு ''வாழ்க ராஜாஜி'' என்ற வாழ்த்துப்பாவைப் பாடிவிட்டு, ப்சலம் தந்த செல்வரை, அச்செல் வத்தை ஈந்த தந்தையை, தர்மபத்னியை, தரணி போற்றும் தலைவர்களை, நாடு போற் றும் நல்லோர்களைத் தரிசித்தேன். கடைசியில் இன்றைக்குச் ! சரியாக மூன்றாண்டுகளுக்கு முன் மறைந்த மேதை, பேறு மன்னர், அமரர் கல்கியின் 'ராஜாஜி பொல்லாதவ' ரைப் படித்துவிட்டு அதிலிருந்த நாடு போற் றும் ''நல்லான்'', உலகம் புகழும் ''சக்கர வர்த்தி''யின் திருஉருவப் படத்தை எடுத்துச் சட்டம் போட்டுப் பூஜை அறையில் வைத்த பிறகு தான் மறுவேலையில் ஈடுபட்டேன் நான். கல்கி இதழின் இன்பத்தை, மலரின் மணத்தை என்னென்று வர்ணிப்பது? தங்கள் சேவைக்குத் தமிழன் என்ற முறையில் நன்றி யைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருச்சி
5—12—57

டி. இ. சாரங்கபாணி

## உலக மேதைகள்

ராஜாஜியின் பிறந்த தின விழா இதழ் படித்து மகிழ்ந்தேன். ராஜாஜியின் பிறந்த வருஷம் பற்றி ஏதோ சந்தேகம் இருப்பதாக முன்பு செய்திகள் வந்துள்ளன. தாங்கள் அவர் பிறந்ததேதி 8-12-1879 என்று நிர்த் தாரணம் செய்துள்ளதை வரவேற்கிறேன். அவர் 1879 ஆம் ஆண்டுதான் பிறந்திருக்க







# மேஜை



முடியும். உலக மேதைகளில் பலர்...9 என்று முடியும் ஆண்டில்தான் பிறந்துள்ளார்கள் என்பது என் ஆராய்ச்சி. நெப்போலியன் (1769), டென்னிஸன் (1809) மகாத்மாஜி (1869), நேருஜி (1889) நமது பேராசிரியர் கல்கி (1899) பிறந்துள்ளார்கள்.

ராஜாஜியின் தந்தையின் திருவுருவமும் அவருடைய தர்ம பத்தினியின் உருவப்படமும் சிறப்பு மலரின் சிறப்பை அதிகப்படுத்துகின்றன. சரித்திரப் பிரசித்தி பெற்ற பல பழைய சம்பவங்களை ஞாபகப்படுத்தும் படங்களும் மலருக்கு அணி செய்கின்றன. பேராசிரியர் கல்கியின் கட்டுரை மலருக்குச் சிகரமாக விளங்குகிறது.

இத்தனை ரஸமான மலரை ராஜாஜிக்குத் தெரியாமல் வெளியிட்ட தங்களை மிகவும் பாராட்டுகிறேன்.

சென்னை - 7
5—12—57 — கே. ஆர். கல்யாணராமன்

## இரண்டு தலையங்கங்கள்!

விக்கவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் அவதிப்படுவதாக உவமானம் கூறுவார்கள்; அதே நிலையில் தம் சென்னை அரசாங்கம் பெரியாரின் துஷ்பிரசாரத்தைத் தடுக்கவும் முடியாமல், மக்கள் கிளர்ச்சிக்கு மௌனம் சாதிக்கவும் முடியாமல் தவிக்கிறது. ஏற்கனவே, நீடித்த சிறைவாசம் விதிக்கக் கூடிய மெக்காலே காலத்திய பழைய சட்டம் இருந்தும், கண் துடைப்பாக அவமதிப்புச் சட்டம் நிறைவேற்றியிருக்கிறது.

வானால் யுத்தம் நடந்த காலத்தில் தேவைப்பட்ட - சேவை செய்த - செஞ்சிலுவைச் சங்கம், அணுகுண்டு காலத்துக்கு அவசியமற்ற தென்பதைத் தங்கள் தலையங்கம் படம் பிடித்துக் காட்டுவது பாராட்டத் தக்கது.

கொழும்பு
21-11-57 — நவமணி எம். எ. ரஹ்மான்

## பாவைவிளக்கு

"கல்கி" இப்பொழுது புது மணம் கமழுவதை அறிகிறேன். அகிலன் அவர்களின் "அற்புதவிளக்"கை ஓர் "அறிவு விளக்கு" என்று கூறலாம்! கதையைப் படிக்கும் பொழுது ஏதோ ஒரு அறிஞரின் அறிவு நூலையும் உடன் வைத்துப் படிப்பதாகத் தோன்றுகிறது! இதுபோன்ற அறிவு செறியும் நாவல்களைக் கல்கியில் வெளியிட நேயர்கள் சார்பில் வேண்டுகிறேன்.

தாண்குநேரி
20-11-57 — து. தனஞ்சயன்

## கருத்துமிக்க கார்ட்டூன்

வணக்கம். தங்கள் இதழில் இவ்வாரம் வெளியான "கார்ட்டூன்" ஒன்று என் உள்ளத்தைக் கவர்ந்தது. அதாவது, 'பாடப் புத்தகங்களைச் சர்க்காரே பிரசுரிக்க ஆரம்பித்தால், அதிலே, கட்சிக் கொள்கைகள் தலைவிரித்தாடும்'' என்ற கருத்தை விளக்கும் "கார்ட்டூன்". இது போன்ற பல கருத்துள்ள கார்ட்டூன்களையே நாங்கள் "கல்கி"யில் எதிர்பார்க்கிறோம்.

முத்துப்பேட்டை
25—11—57 — எம். எம் அலிகான்

## உணவுப் பிரச்னை

வார்த்தைக்கு வார்த்தை யாவரும் அப்படியே ஒப்புக் கொள்ள வேண்டிய பொருளைக் 1-12-57 கல்கி இதழில் வெளியான "முதல் பிரச்னை" என்ற தலையங்கம். விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர் ஒவ்வொருவரும் அக்கறை எடுத்துக் கொள்ளும்படியான நிலைமை ஏற்படச் சர்க்கார் அவசியம் உணவு உற்பத்தி மிக உச்ச நிலையை அடையும் வரையிலாவது சொந்தக்காரர், உழவர் இடையே விவகார வேற்றுமைகளை யுண்டாக்கும் சட்டங்களை ரத்து செய்தல் வேண்டும். தங்கள் நிலத்தில் சொந்தக்காரர்களுக்கு அக்கறையும், பூரண நம்பிக்கையும் உரிமை உணர்ச்சியும் உண்டாகும்படி செய்ய வேண்டியதுடன், குடியானவர்களுக்கும் உழைப்பின் உயர்வை உணரச் செய்து, உணவு உற்பத்தி பெருகவும் அரசாங்கம் ஆவன செய்ய வேண்டும்.

அதிராம்பட்டணம்
2—12—57 — கண்ணன்

## "விலக்கு அளியுங்கள்"

தங்கள் 1-12-57 கல்கி இதழ் தலையங்கத்தைப் படித்தேன். மிகவும் நன்றாக அலசி ஆராய்ந்து எழுதி இருக்கிறீர்கள். இன்று







நம் சென்னை அரசாங்கத்தின் நியாயவாரம், சாகுபடியாளர் பாதுகாப்பு மசோதா இவைகளால் நெல் கொள் முதல் மிகவும் பாதிக்கப்பட்டு வருகிறது. அதுமட்டும் இல்லாமல் பல ஏக்கர் நிலம் தரிசாகக் கிடக்கிறது.

திருச்சி, தஞ்சாவூர், மற்றும் பல இடங்களில் சிறு நிலச்சுவான்களுக்கு மேற்படி சட்டங்களிலிருந்து விலக்கு தருவதாக மந்திரிகள் கூறியிருந்தனர்.

சிறு நிலச்சுவான்கள் குத்தகைக்குப் பிடித்துப் பாடுபடும் குடியானவர்களைக் காட்டிலும் ஏழைமையில் அடிபட்டுத் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். இது யாவரும் அறிந்ததே. ஆகையால் அடுத்த சட்டசபை நடைபெறும் பொழுதாவது, சட்டசபை அங்கத்தினர்களாவது மந்திரிக்கு ஞாபகமூட்டி, சிறு நிலச்சுவான்தார்களுக்கு இந்த இரண்டு சட்டங்களிலிருந்து பூர்ண விலக்கு அளிக்க ஏற்பாடு செய்வார்கள் என்று நம்புகிறேன்.

திருமாநிலையம்
29—11—57

வி. எஸ். சேதுராமன்

## பெருமை தரும் செய்தி

சென்ற வாரம் கல்கி வட்டமேஜைப் பகுதியில் திரு ஜி. வி. பட்டாபிராமன் அவர்கள் எழுதியிருந்த கடிதத்தைப் படித்துப் பெருவகை அடைந்தேன். அணுவைப் பிளந்து ஆதிசக்தியை வெளிப்படுத்தி அண்ட கோளங்களுக்குத் தாவித் திரியும் புதுப்புதுக் கருவிகளைக் கண்டுபிடிப்பதில் ஊக்கம் கொண்டுள்ள ருஷ்யர்கள் சைவ சித்தாந்தத்தை விரும்புகிறார்கள் என்றால், உண்மையில் தமிழன் பெருமைப்படக் கூடிய செய்திதான் அது. விஞ்ஞானப் பேருண்மைகளின் எல்லையைக் கடந்து அலகிலாத படைப்பு விளையாட்டைப் புரிந்திருக்கும் சிவசக்தி மர்மங்களை ருஷ்யர்கள் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும். ருஷ்யாவிலுள்ளவர்களுக்குச் சைவ சித்தாந்தத்தைப் போதிப்பதற்கு இங்குள்ள நூல்களை அனுப்பிவிட்டால் மட்டும் போதாது. தமிழ் நாட்டில் சைவ சித்தாந்தத்தைக் கரைகண்ட திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களை அரசாங்கமோ பொதுமக்களோ, ருஷியாவுக்கும் தமிழகத்துக்கும் இடையே மிகச் சிறந்த சைவசித்தாந்தத் தூதராக அனுப்பினால் அவர் அரும் பணி புரிந்து வருவார் என்பதில் தடையில்லை. வடநாட்டுப் பல்கலைக் கழகங்களில் ஆங்கிலத்தில் சைவ சித்தாந்தப் பேருரைகள்* ஆற்றி இந்த நூற்றாண்டின் குமரகுருபரர்போல் விளங்கும் திருவாசகமணியே தமிழகத்திலிருந்து ருஷ்யா செல்ல வேண்டிய அருளாளர் ஆவர். பாரத அரசாங்கமோ, ருஷ்ய அரசாங்கமோ இதில் சிரத்தை கொண்டு ருஷிய மக்களுக்குச் சைவ சித்தாந்தக் கலையின் பயன் கிடைக்குமாறு செய்ய வேண்டும்.

திருச்சிராப்பள்ளி
26—11—57

திருலோக - சீதாராம்

## வரவேற்கிறோம்

கல்கி பத்திரிகையைப் படிக்கும் எண்ணற்ற வாசகர்களில் நானும் ஒருவன்: கல்கியில் மீண்டும் திரு காந்தன் அவர்கள் சினிமா விமர்சனம் எழுதுவதைப் பார்த்தவுடன் அளவற்ற உவகை கொண்டேன். தற்சமயம் தமிழ் நாட்டில் எண்ணற்ற பத்திரிகைகள் வாரந்தோறும் விமர்சனம் எழுதி வெளியிடு

அம்மாப்பேட்டை கல்கி ஏஜண்டு திரு பி. எஸ். மாசிலாமணி செட்டியாரின் தந்தை திரு ஆ. செ. ப. சுப்பிரமணிய செட்டியார் அவர்களுக்குச் சென்ற 12-10-57ல் சஷ்டியப்த பூர்த்தி விமரிசையாக நடைபெற்றது. அந்த வைபவத்துக்கு வந்து சிறப்பித்த அவரது குடும்பத்தினரையும், திரு சுப்பிரமணிய செட்டியார் தம்பதிகளையும் படத்தில் காணலாம்.



கின்றன. அவை விமர்சனமாகி விடுமா? கல்கி ஒன்றுதான் நடுநிலைமையுடன் நல்ல தமிழில் சுவைமிக்க பாணியில் கதை, கட்டுரை, விமர்சனம் பிரசுரித்து வருகிறது.

திரு அகிலன் பாவைவிளக்கு அமியாச் சிருஷ்டி; காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்களின் அருள்வாக்கு ஓர் அற்புத நன்னெறி போதனை. கலை கண்ட மலேயாவைப் படித்தால் உண்மையிலேயே அந்த இடத்தை நேரில் பார்த்தது போல் சுவையாய் இருக்கிறது. மேலும், மேலும் எங்கள் ஆசையைப் பல புதுப் புது விஷயங்களைச் சேர்த்து மகிழ்விக்க வேண்டுகிறேன். வாழ்க கல்கி; வளர்க அதன் புகழ்.

திருமங்கலம்
16—11—57

ரவிசந்திரன்

## உதவி மேயர்

சென்னை நகர சபையின் உதவி மேயராகத் திரு டி. பார்த்தசாரதி செட்டியார் அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார் என்பதை அறிந்து மகிழ்கிறோம்.

நுங்கம்பாக்கம் டிவிஷன் கவுன்சிலராக நீண்ட நாள் பணி புரிந்திருக்கிறார். இளைஞர். உற்சாகமாக வேலை செய்யக் கூடியவர். கல்விக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள நிரந்தரக் கமிட்டியின் தலைவராக இருந்திருக்கிறார். இவருடைய பதவிக் காலத்தில் நகரசபை பல துறைகளில் முன்னேறும் என்று சென்னை நகர மக்கள் எதிர்பார்ப்பது இயற்கையே அல்லவா?



## சிறந்த கவிதைகள்

பாலர் மலர் பகுதியில் பாலர் கவிதைகள் தொடர்ந்து வருவதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறோம். எளிய நடையில், பிடித்தமானவை யெல்லாம் கருத்து நிறைய, கோவையான கவிதைகளாக வருகின்றன. மிகவும் ரசித்துப் படித்து இன்புறுகிறோம். இம்மாதிரி எளிய நடை கொண்ட கவிதையைப் படிக்கப் பிடிக்கிறது. எங்கள் தமிழ் ஆர்வத்துக்கு ஊக்கமளிக்கும் கல்கிக்கு எங்கள் நன்றி கலந்த வணக்கம்.

மேட்டூர் அணை
23—11—57

பி. தோராணி

## மின்சார வசதி

ஒரு குதிரை ஓட்டத்துக்கு (One horse power) மின்சாரம் தேவை என்றால் ரூபாய் 50 கட்ட வேண்டும்; வருடத்துக்கு இப்படி 5 குதிரை ஓட்டத்துக்கு 250 ரூபாய் குறைந்த பட்ச அளவு கட்ட வேண்டும். இப்படி ஒருவர் பத்து ஆண்டுகள் கட்ட ஒப்பந்தத்தில் ஒப்புக் கொண்டால்தான் மின்சாரத்தைப் பயன்படுத்திக் கொள்ள விவசாயிகளுக்கு அனுமதிக்கப்படுகிறது. இந்த முறை மற்ற ஜில்லாக்களுக்குப் பொருந்தும். ஆனால் நம் வட ஆற்காடு ஜில்லாவின் நீர் வளமும் விவசாயிகளின் பொருள் வளமும் அந்த அளவுக்கு வசதி தருவதாக இல்லை.

ஒரு விவசாயி எவ்வளவு அதிகப்படி மின்சாரத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று முயன்றாலும் 150 ரூபாய்க்கு மேல் ஓட்ட முடிவதில்லை. அந்த அளவுக்கு வறண்ட கிணறுகள்! இந்த நிலையால் எப்படியும் ஓட்டிக் கொண்டாலும், ஓட்டிக் கொள்ளா விட்டாலும் ரூ.250 கட்ட வேண்டுமே என்று ஏழை விவசாயிகள் பம்பு செட்டுகள் வைத்து விவசாயம் செய்ய முடியாமல் வேதனைப் படுகிறார்கள். இதை அரசியலார் பரிசீலனை செய்து ஆவன செய்தால் நம் வடஆற்காடு ஜில்லாவில் விவசாயம் வளரவும், உற்பத்தி பெருகவும் வாய்ப்பு ஏற்படும். இதே முறையில் மாடு வாங்கப் பண உதவி செய்வது போல் பம்புசெட்டு பயன்படுத்திக் கொள்ளச் செய்தால் பயனுடையதாக இருக்கும்.

ஜோலார்பேட்டை
1—12—57

கே. என். கேசவன்

## அறத்தின் குரல்!

ராஜாஜி ஜயந்தி இதழைப் பற்றி ஒரு வாசகன் என்ற முறையில் என் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன். உலகத்து மேதைகள் பலரை அவர்கள் பிறந்த நாடு மதித்துப் போற்றத் தவறியிருக்கிறது. தமிழ் நாடு அந்தப் பழியிலிருந்து தப்பிவிடும் என்ற நம்பிக்கை ராஜாஜி ஜயந்தி இதழிலிருந்து உண்டாகிறது. அவர்களது சில கருத்துக்களை இப்போது நாடு தெரிந்து கொண்டிருக்கிறது; இன்னும் சில கருத்துக்களைத் தெரிந்துகொள்வதற்கு இன்னும் பல வருடங்கள் ஆகலாம். 'எல்லோரும் இன்றும் என்றும் இன்புற்று வாழ வேண்டும்' என்ற லட்சியம் கொண்ட பெருந்தகை அவர்கள். அணுகுண்டுக்கு எதிராக அவர்கள் எழுப்பும் தனிக்குரல் அறத்தின் வலிமை மிக்க குரலாகும். வள்ளுவன் பிறந்த மண்ணின் வளம் குன்றிவிடவில்லை என்பதை அவை காட்டுகின்றன. உலகம் உய்ய அவர்கள் இன்னும் பல்லாண்டு - பல்லாண்டு வாழ வேண்டும்.

திருச்சி
6-12-57

அகிலன்



# படித்துப் பாருங்கள்

## உயர்ந்த ரகம்

**வா**ழ்க்கையில் மனிதனுக்கு ஏற்படும் கவலைகளை மறக்கச் செய்வது நகைச்சுவை. இந்த நகைச்சுவையை 'உயர்ந்த ரகம்' என்னும் தொகுதியில் நிரம்பக் கையாண்டிருக்கிறார் இந்நூலின் ஆசிரியர். இத் தொகுதியில் பதினொரு நாடகங்கள் அடங்கியிருக்கின்றன. சமையல்காரர் குப்புசாமி உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவர். ராமானுஜம் தம்பதிகளின் வீட்டில் வேலைக்கு அமர்ந்து, குப்புசாமி ஹாஸ்ய அனுகுண்டுகளை அள்ளி வீசுவது நம்மைக் 'குபீர் குபீர்' என்று சிரிக்க வைக்கின்றன.

வீட்டின் எஜமானர் சினிமாவுக்கு ஒன்றரை ரூபாய் டிக்கட்டுக்குப் போகும்போது, திருவாளர் உயர்ந்த ரகம் இரண்டரை ரூபாய் டிக்கட்டு வாங்கிச் செல்கிறார். தமது கௌரவத்தை நிலைநாட்டத் திருவாளர் குப்புசாமி வேலையை விட்டே நீங்கிவிடுவது நாடகத்தின் சிறப்புக்கு அணிகலனாக விளங்குகிறது. 'ஜோசியம் எப்படி?' என்னும் நாடகத்தில் ரங்கசாமிக்கு அடிக்கும் குருட்டு அதிர்ஷ்டம், பிறகு அவருக்கு அதிர்ஷ்டம் அடிக்காமலிருந்தால் போதும் என்ற முடிவுக்கு வரும்போது நம்மை யறியாமலே நாம் நகைப்பில் மூழ்கி விடுகிறோம். இந்நூலிலுள்ள நாடகங்கள் அனைத்தும் படித்துச் சிரித்து அனுபவிக்க வேண்டியவை.

நூலின் ஆசிரியர் : கோமதி சுவாமிநாதன்: பிரசுரம்: அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை-17 விலை : ரூ. 1—75.

## மேதா தக்ஷிணாமூர்த்தி மஹாபிஷேக மலர்

**பல** பெருமைகளைப் பெற்றிருப்பதனால், 'ஆயிரம் ஆனாலும் மாயூரம் ஆகாது' என்ற அழகிய முதுமொழியைப் பெற்றிருக்கிறது மாயூர நகரம். அந்தப் பெருமைக்கெல்லாம் பெருமை அளிக்கும் வகையில், வள்ளலார் கோவிலில் வீற்றிருக்கும் மேதா தட்சிணாமூர்த்தி பெருமான் விளங்குகிறார். உலகத்துக்கெல்லாம் குருவாக விளங்கும் தட்சிணாமூர்த்திக்கு ஆண்டுதோறும் அபிஷேக ஆராதனைகள் செய்து ஆஸ்திகத்தையும் பக்தியையும் வளர்க்கும் மிக அருமையான பணியைச் செய்து வருகிறார்கள் அவ்வூர்வாசிகள். இவ்வாண்டும் 13-12-57 அன்று மேதா தட்சிணாமூர்த்திக்கு மகாபிஷேகம் நடைபெறுகிறது.

இந்த நற்பணியை மக்களுக்கு எடுத்துக் கூறும் வகையில் அழகான மலர் ஒன்று வெளியிட்டிருக்கிறார்கள். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள், ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடாதிபதிகள், ஸ்ரீ தருமபுர ஆதீனகர்த்தர் போன்ற குருபீடத்தை அலங்கரிக்கும் பெரியார்களது அருமையான பாத்துவத்தை விளக்கும் கட்டுரைகள் வெளியாகியுள்ளன.

ஸ்ரீ மேதா தட்சிணாமூர்த்தியின் அருட் பிரசாதத்தைப் பெற விரும்பும் ஆஸ்திக மக்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு நன்கொடை அனுப்பிக் கைங்கரியத்தில் தம் பங்கையும் சேர்ப்பிக்கலாம்.

விலாசம் : காரியதரிசி, ஸ்ரீ மேதா தக்ஷிணாமூர்த்தி மகாபிஷேக அஸோஸியேஷன், நம்பர் 8, வள்ளலார் இரட்டைத் தெரு, மாயூரம், தஞ்சாவூர் ஜில்லா.

## கலைமலர்

**நீ**லவானம், அதில் ஜாலம் காட்டும் விண்மீன்கள், கோல மயில், அதன் எழில் தோகையில் விரியும் வண்ண விசித்திரங்கள் இவைகளையெல்லாம், சிங்கப்பூரிலிருந்து சிறப்பாக வெளிவரும் "கலைமலரின்" தீபாவளி இதழ் கவினுறு காட்சியாகத் தருகிறது. வளம் மிகுந்த நாடான சிங்கப்பூரிலிருந்து வெளியாகும் "கலைமலர்" ஒரு சினிமாப் பத்திரிகை. அதன் இரண்டாவது தீபாவளி மலர் சினிமாக் கலை சம்பந்தப்பட்ட பல கட்டுரைகளையும் சினிமா நட்சத்திரங்களின் எழில் உருவப் படங்களையும் கொண்டு அழகுள்ள மலராகப் பூத்திருக்கிறது. டாக்டர் மு. வரதராசனார், "மணிக்கொடி" கு. சீனிவாசன் முதலிய அறிஞர்களின் கட்டுரைகளைத் தொகுத்திருப்பது மலரில் தமிழ் மணம் கமழப் பெருதவியாயிருக்கிறது. உயர்ந்த தாளில், சிறந்த முறையில் அச்சாகியிருக்கும் இம்மலர் கடல் கடந்த தமிழர்களின் பெருமைக்கு எடுத்துக் காட்டாயிருக்கிறது.

விலாசம் : 'கலைமலர்' காரியாலயம், சிங்கப்பூர்-1; விலை ரூ. 2-25.

## பிரதாப முதலியார் சரித்திரம்

**த**மிழ் அறிந்தவர் அனைவரும் வேதநாயகம் பிள்ளையை அறிவார்கள்; வேதநாயகம் பிள்ளையைத் தெரிந்தவர்கள் நிச்சயம் நல்ல தமிழை அறிந்தவர்களாகவே இருப்பார்கள். வேதநாயகம் பிள்ளையவர்கள்தான் முதல் தமிழ் உரைநடை ஆசிரியர். ஒரே பாடல் மயமாக இருந்த தமிழ் மொழியை வசன நடைப் பாதைக்கு அழைத்து வந்து பெருமைப்படுத்திய பெருந்தகை.

அவர் தமிழில் நல்ல கருத்துள்ள பல கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார்.

அவர் எழுதிய அருந் தமிழ் நாவல் பிரதாப முதலியார் சரித்திரம். அது உலகியல் நீதிகளும், நகைச்சுவையும், நல்ல கருத்துக்களும் கொண்ட நூல். அறிவுக் களஞ்சியம் என்று யாரும் கொண்டாடும் சிறந்த நூல். 1876ம் ஆண்டு வெளியிடப்பட்டது.

இந்தப் பழைய நூலைச் சுருக்கி இப்பொழுது வெளியிட்டிருக்கிறார்கள்.

பிரசுரம் : உமாதேவன் கம்பெனி, தேனாம்பேட்டை, சென்னை 18; விலை: ரூ. 1·25.

எல்லா சோதனைகளிலும்
தேர்ச்சி பெற்ற
ஆதர்ச டூத் பிரஷ்
இன்றே வாங்குங்கள்-
அதன் குணங்
களை தெரிந்து
கொள்ளுங்கள்




எல்லா
கடைகளிலும்
கிடைக்கும்

இந்தியாவிலேயே மிக்க அநுபவம் வாய்ந்த
டூத் பிரஷ் தயாரிப்பவர்கள்

# சுலேகா

## பௌண்டன் பேனா மை




உஷ்ணப் பிரதேசங்களுக்கு ஏற்றவாறு விசேஷ முறையில் 'S-97' ஸால்வெண்ட் சேர்க்கப்பட்டிருக்கிறது. சாதாரண உலோக நிப்புகளில் அமிலம் தாக்காதபடியும் காப்பாற்ற உதவுகிறது.

**சுலேகா ஒர்க்ஸ் லிமிடெட்**
கல்கத்தா - டில்லி - பம்பாய் - சென்னை

## நவரத்ன முறைப்படி

**மீண்டும் நல்ல ஆரோக்கியமடையுங்கள்**

நவரத்தினங்களில் அடங்கியுள்ள குணமளிக்கும் சக்தியையும் தொடர்ச்சியாக பஸ்மங்கள் செய்து அதன் மூலம் வீரிய சக்தியை அளிக்கும் முறையையும் கண்டு பிடித்த ஆயுர்வேத சாஸ்திரத்துக்கு மனித சமூகம் பெரிதும் கடன்பட்டுள்ளது

இவ்விரு முறைகளும் இதில்
ஒருங்கே அமைந்துள்ளது

பண்டிட்
**துர்க்காதத் வைத்யா**
கவிராஜ்
வைத்திய வாசஸ்பதி
அவர்கள் கண்டு
பிடித்து அளிக்கும்



# நவரத்ன கல்பம்

வைரம், நீலம், கெம்பு, முத்து, புஷ்பராகம் மரகதம், கோமேதகம், வைடூரியம், பவழம்

ஆகிய ஒன்பது உயர்ந்த கற்களின் கலவை

முற்றிலும் விஷத்தன்மை யற்றது
மற்றும் அனைவருக்கும் ஏற்றதான
ஒரு ஹானியற்ற நிவாரணி

| | |
|---|---|
| ஜீரணக் கோளாறுகள் | பௌத்திரம் |
| வெண்குஷ்டம் | குழிப்புண் |
| யானைக்கால் | மூலம் |
| விஷமடைந்த இரத்தம் | ஆஸ்த்மா |

இவைகளிலிருந்து குணமளிக்கிறது

○●○

இதர விவரங்களுக்கு எழுதவும்:

**NAVRATNA KALPA PHARMACY**
**JULLUNDUR CITY (India)**

# சர்க்கார் நடத்தும் வர்த்தகம்

எம். எஸ். சிவசாமி

தேசிய வர்த்தக ஸ்தாபனம் (ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன்) அதனுடைய முதல் வருஷாந்திர அறிக்கையைச் சமீபத்தில் வெளியிட்டது. 1957ம் ஆண்டு ஜூன்மாத முடிவு வரையில் ஒரு வருஷத்திய லாப நஷ்டக் கணக்குகளைக் காண்பித்து, 35·42 லக்ஷம் ரூபாய் நிகர வருமானம் கிடைத்திருக்கிறதென்றும், சுமார் பத்து கோடி மதிப்புள்ள பொருள் வியாபாரம் நடத்தப்பட்டதென்றும், வருமானவரி மூலமே அரசாங்கத்துக்கு ஐம்பத்தொரு லக்ஷம் ரூபாய் வரையில் செலுத்தியுள்ளதென்றும் பல விவரங்கள் அதில் கூறப்பட்டுள்ளன.

லாப நஷ்டக் கணக்குகளை மட்டும் கொண்டு இந்த ஸ்தாபனத்தின் நடவடிக்கைகளைக் கவனித்தால் இது சிறந்த முறையிலேயே செயலாற்றியுள்ளது என்று சொல்லத் தோன்றும். ஆனால் இது தனிப்பட்டவர்கள் நடத்தும் வியாபார ஸ்தாபனங்களைப் போன்றதன்று. அரசாங்கத்தாரால் நிறுவி நடத்தப்படுவது. பொதுத் தொகுதி என்றும், தனித் தொகுதி என்றும் தொழில் ஸ்தாபனங்களில் ஏற்பட்டுள்ள பாகுபாட்டை உள்நாட்டு வெளிநாட்டு வியாபாரத்திலும் இது புகுத்தியுள்ளது. இம்மாதிரி ஒரு ஸ்தாபனத்துக்கு உண்மையிலேயே தேவையிருக்கிறதா என்ற விவாதத்தையே கிளப்பியது. இதை ஸ்தாபித்தபோது இதன் அவசியத்தையும் லட்சியங்களையும் விளக்கித் தெளிவுபடுத்தியும் இருக்கிறார்கள் அரசாங்கத்தார். அவைகளில் குறிப்பாகச் சிலவற்றை மட்டும் கவனிப்போம்.

1. ஏற்றுமதி இறக்குமதிக் கட்டுப்பாடுகளின் மூலமும், சுங்க வரிகளை அவ்வப்போது கூட்டிக் குறைப்பதின் மூலமும், அன்னிய செலாவணிக் கட்டுப்பாடுகள் மூலமும், மற்றும் இவைபோன்ற இதர நடவடிக்கைகள் மூலமும் நாட்டின் வர்த்தகத்தின் போக்கை முற்றிலும் கண்காணிக்க முடியாததால், அரசாங்கம் நேரிடையாகவே வியாபாரத்தில் தலையிடுவது அவசியமாகிறது. அதற்கு ஒரு ஸ்தாபனம் தேவை. அதுதான் தேசிய வர்த்தக ஸ்தாபனம்.

2. கம்யூனிஸ்டுக் கொள்கை நிலவும் நாடுகளில் வெளிநாட்டு வர்த்தகம் அரசாங்கங்களாலேயே ஏகபோக உரிமையுடன் நடத்தப்படுவதால், தனிப்பட்டவர்களாலோ ஸ்தாபனங்களாலோ அவர்களுடன் தொடர்பு கொண்டு வியாபாரம் நடத்த இயலாது. எனவே அந்நாடுகளின் வர்த்தகத் தொடர்பு முக்கியமாதலால் அதற்கேற்ற ஒரு அரசாங்க ஸ்தாபனம் தேவை.

3. அவ்வப்போது மாறுதலடைந்து கொண்டு வரும் வெளிநாட்டு வியாபார நிலவரங்களைச் சமாளிக்கத் தற்போதுள்ள ஸ்தாபனங்களால் முடியாது. எனவே தேசிய வியாபார ஸ்தாபனம் இதைக் கவனித்து அவ்வப்போது பரிகாரம் தேடிக்கொள்ளும்.

4. வெளிநாட்டு வியாபாரம் லாபகரமாக இல்லாத போதும்கூட வியாபாரத் தொடர்பையும் விடாமல் நடத்தக்கூடிய சாமர்த்தியம் தனிப்பட்ட ஸ்தாபனங்களுக்கு இல்லை. தேசிய ஸ்தாபனமானால், சிற்சில சமயங்களில் ஏற்படும் நஷ்டங்களையும் சமாளித்து ஈடு செய்து கொள்ள அதனால் முடியும்.

5. வியாபாரப் போக்கின் மாறுதல்களினால் ஏற்படும் விலைவாசிகளின் ஏற்றத் தாழ்வைக் கட்டுப்படுத்திக் கூடுமான வரையில் சம நிலையில் அவற்றை வைத்திருக்க இம்மாதிரி ஒரு ஸ்தாபனத்தால்தான் முடியும்.

மேற்கூறிய காரணங்களைச் சிலர் ஒப்புக் கொள்ளலாம்; அல்லது ஒப்புக் கொள்ளாமலும் இருக்கலாம். ஆனாலும் இத்தகைய லட்சியங்கள் எவ்வளவு தூரம் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன என்பதை மனத்தில் இருத்தித்தான் இந்த ஸ்தாபனத்தின் நடவடிக்கைகளைக் கவனிக்க வேண்டும். சில வகைகளில் இதன் முயற்சிகள் வெற்றியடைந்திருக்கின்றன. கிழக்கு ஜெர்மனி, சோவியத் ரஷ்யா, வியட்-நாம், இந்தோனேசியா, யூகோஸ்லேவியா, ருமேனியா முதலிய நாடுகளுடன் வியாபாரத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டதோடு, பல புதிய இனங்களை இந்தியா இந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் வசதிகளும் செய்யப்பட்டுள்ளன. கிழக்கு ஜெர்மனிக்கு இந்தியாவிலிருந்து 9.96 லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள 18000டன் இரும்புக் கனிப் பொருளும், 13·97 லக்ஷம் ரூபாய் விலையுள்ள 200டன் காப்பிக்கொட்டையும், 19·58 லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள 243 டன் தேயிலையும், 18·97 லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள 1200டன் பருத்திக்கொட்டை எண்ணெயும், மற்றும் இதரவகைகளுமாக மொத்தம் 64·12 லக்ஷம் ரூபாய்க்கு ஏற்றுமதி செய்ய இந்தியா ஒப்புக் கொண்டிருக்கிறது. அந்நாட்டிலிருந்து சோடா — ஆஷ், காஸ்டிக்-சோடா, அம்மோனியம் சல்பேட், பஞ்சாலை யந்திரங்கள் என்று பல இனங்கள் 127·65 லக்ஷம் ரூபாய்க்கு இறக்குமதி செய்யவும் வகை செய்யப் பட்டிருக்கிறது.

சோவியத் ரஷ்யாவுக்கு அனுப்ப ஒப்பந்தம் செய்து கொண்ட பொருள்களில் 154·96 லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள 7 லக்ஷம் ஜோடி பூட்ஸுகளும், 107·85 லக்ஷம் ரூபாய் விலையுள்ள 1500டன் காப்பிக் கொட்டையும், 72·52 லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள 481,497 கஜம் கம்பளங்களும் 20·16 லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள 2000டன் புகையிலையும் இவற்றில் முக்கியமானவை. நம்முடைய ஏற்றுமதியின் மொத்தம் 420·62 லக்ஷம்; அந்நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்கள்

70,000 டன் அம்மோனியா சல்பேடும், 5000 டன் பால் பவுடர்களும் ; மொத்த மதிப்பு 196.85 லக்ஷம் ரூபாய்.

ஜப்பானுடன் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தத்தின் விளைவாக 1,700,000 டன் இரும்புக் கனிப் பொருளும், 85,100 டன் மாங்கனீசும், 17,000 டன் கிரோம் சுரங்கப் பொருளும் அனுப்ப வகை செய்யப்பட்டுள்ளது. இவ்வாறே போலந்து நாட்டுடனும், ஹங்கேரியுடனும், இத்தாலியுடனும் இரும்பு, மாங்கனீஸ் கனிப் பொருள்கள் அனுப்ப ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப்பட்டிருக்கின்றன. ஏற்றுமதிப் பொருள்கள் ஜாபிதாவில் காப்பிக் கொட்டை, ஜோடுகள், கம்பள ஜவுளி வகைகள், புகையிலை, தேங்காய் நாரினால் செய்த பலவகைப் பொருள்கள், இந்திய சிற்ப வேலைப்பாட்டு வகைகள் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கது.

ஆனால் இந்த ஸ்தாபனத்துக்குக் கிடைத்துள்ள லாபம் முற்றிலும் இம்மாதிரி வெளி நாட்டு வியாபாரத்தால் கிடைத்தவையல்ல. உள்நாட்டு வியாபாரத்தில் தலையிட்டதன் விளைவாகவே கிடைத்துள்ளது என்பதைக் குறிப்பிட வேண்டும். முக்கியமாக, உள் நாட்டு சிமெண்ட் விநியோகத்தை ஏகபோக உரிமையாக இந்த ஸ்தாபனம் ஏற்றுக் கொண்டு விட்டது. இதன் மூலம் நாட்டில் உற்பத்தியாகும் 50 லக்ஷம் டன் சிமென்டையும் பற்றாக்குறைக்காக இறக்குமதி செய்யப்பட்ட சுமார் 2 லட்சம் டன் சிமென்டையும் இந்த ஸ்தாபனம் விநியோகித்ததன் விளைவாக "கமிஷன்" அல்லது தரகு வகையில் இதற்குக் கிடைத்த லாபம் மட்டும் சுமார் 65 லக்ஷம் ரூபாய். அதாவது இறக்குமதி செய்யப்பட்ட இரண்டு லக்ஷம் டன் சிமெண்ட் உள்நாட்டு உற்பத்தி விலையைக் காட்டிலும் அதிக விலையில் தருவிக்கப்பட்டதால் ஏற்பட்ட சுமார் 48 லக்ஷ ரூபாய் நஷ்டத்தை ஈடு செய்து சராசரியாகப் பங்கீடு செய்வதற்காக, சிமெண்ட் விநியோக விலை நாடு முழுதும் உயர்த்தப்பட்டது. டன்னுக்கு 12½ ரூபாய் வீதம் சிமெண்ட் விலை நம் நாட்டில் உயர்ந்ததற்கு இந்த ஸ்தாபனம் விநியோக முறையை ஏற்றுக் கொண்டதையே காரணமாகச் சொல்லலாம். உள்நாட்டு உற்பத்தி விலை ஒரே மாதிரியாக இருக்கும். உற்பத்தியாலைகளும் விரிவடைந்து உற்பத்தி பெருகி யிருந்தும் பொது மக்களுக்குக் குறைந்த விலையில் சிமெண்ட் கிடைப்பதற்குப் பதிலாக, அதிக விலை கொடுக்கும் படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இதன் மூலம் இந்த ஸ்தாபனம் அடைந்த 64 லக்ஷ ரூபாய் லாபத்தைப் பொது ஜனங்களிடமிருந்து, குறிப்பாக சிமெண்ட் உபயோகிப்போர்களிடமிருந்தே, வசூலிக்கப்பட்டதாகக் கருதலாம். இந்த அம்சத்தில் இந்த ஸ்தாபனத்தின் நடவடிக்கைகளைப்பற்றிக் குறை கூறுவோர்கள் சார்பில் உண்மையிருக்கிறதென்பதைக் குறிப்பிட வேண்டும்.

மேலும், மாங்கனீசு, இரும்பு கனிப் பொருள் இரண்டு இனங்களிலும் ஏற்கனவே ஏற்றுமதி வர்த்தகம் நடந்து கொண்டுதான் வந்திருக்கின்றன. இவ்வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்களின் எண்ணிக்கையும் அதிகம். சுரங்கச் சொந்தக்காரர்களிடமிருந்து, ஏற்றுமதி செய்வோர் வரையில் இடையிடையே பலர் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். இவ்வர்த்தகத்தில் இந்த ஸ்தாபனம் தலையிட்டபின், அவர்களின் முக்கியத்துவம் குறைந்து போனதுமன்றி வியாபாரமும் ஓரளவு குறைந்தும் விட்டது. ஏனெனில், இவ்விரண்டு இனங்களிலும் உயர்ந்த தரமுள்ள கனிப் பொருள்களை மட்டும் சுலபமாக ஏற்றுமதி செய்து விட்டு, சற்றுக் குறைந்த தரமுள்ளவற்றை அப்படியே விட்டு விட்டதால், வியாபாரத்தில் விஸ்தரிப்பு ஒன்றும் கணிசமாக ஏற்படவில்லை. மேலும், உள்நாட்டு வியாபாரிகளிடமிருந்து இப்பொருள்களை ஒப்பந்த மூலம் வாங்கி அதை வெளிநாட்டுக்கு இந்த ஸ்தாபனம் ஏற்றுமதி செய்வதால், வெளி நாடுகளுடன் செய்து கொண்ட ஒப்பந்த விலைக்கும் உள் நாட்டில் நிலவும் விலைக்கும் ஓரளவு வித்தியாசம் இருக்கத்தான் செய்யும். வெளி நாட்டு விற்பனை ஒப்பந்த விலை அதிகமாக இருந்தால் ஸ்தாபனத்துக்கு லாபம் கிடைக்கும். ஆனால் உள்நாட்டு விலைவாசிகளைச் சரிவரக் கவனித்து வெளி நாட்டு ஒப்பந்தம் செய்து கொள்ளாத காரணத்தால்,, ஒரு சமயம் வெளி நாட்டு ஒப்பந்த விலைக்குக் குறைவாக உள் நாட்டிலிருந்து கொள் முதல் செய்ய முடியாமல் இந்த ஸ்தாபனம் நஷ்டத்திற்குள்ளாக வேண்டியிருந்ததாகக் கூறப் பட்டது. இந்த நஷ்டத்தை ஈடு செய்ய இந்த ஸ்தாபனம் சுரங்கச் சொந்தக்காரர்களிடமிருந்து நயத்திலும் பயத்திலும் ஒப்பந்த விலைக்குக் குறைவாகக் கனிப் பொருள்களைக் கொள் முதல் செய்ய முயன்றதாகவும் தெரிகிறது. இதன் விளைவாகத்தான் உயர்தர கனிப் பொருள்கள் மட்டும் ஏற்கப் பட்டு மட்டரகப் பொருள்கள் நிராகரிக்கப்பட்டன என்றும் கூறப்படுகிறது.

இதன் மூலம் ஏற்பட்ட சில தகராறுகள் காரணமாக வேண்டிய அளவுக்குக் கனிப் பொருள்களைக் குறித்த காலத்துக்குள் ஏற்றுமதி செய்ய இந்தஸ்தாபனத்தால் கொள்முதல் செய்ய முடியவில்லை என்றும் அதனால் சிற்சில சமயங்களில் வெளி நாட்டு ஒப்பந்தங்களை நிறைவேற்ற முடியாமல் போய் விட்டதாகவும் தெரிகிறது. சாமான்களை ஏற்றிச் செல்லுவதற்காக வந்த வெளிநாட்டுக் கப்பல்கள் கூட, சாமான்கள் ஏற்றிச் செல்லாமலே திரும்பியதாகவும் தெரிகிறது. இதெல்லாம் இவ் வியாபாரத் துறையில் அநுபவக் குறைவால் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் இந்த வர்த்தகத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு விளைந்த தொல்லைகள் அதிகம்.

இவ்வாறு நாட்டின் (சுமார் 29 வகை) வியாபாரப் பண்டங்களின் வர்த்தகத்தில் இந்த ஸ்தாபனம் தலையிட்டுள்ளது. இவற்றில் சிமெண்ட் போன்ற பெரிய இனங்கள் பல. "லெமன்கிராஸ்" எண்ணெய் என்று கேரள ராஜ்யத்தில் ஏற்றுமதிப் பொருளாக விளங்கும் சிறிய இனங்கள் சில. இத்தலையீட்டின் மூலம் இந்த வியாபாரத்தில் இதுகாறும் ஈடுபட்டிருக்கும் பல வர்த்தகர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டமும் அதிகமாகக் கூடும்.

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்

DCG/24 R2

---



## நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.




எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

# பாவை விளக்கு

### அத்தியாயம் 35

## பெரிய குழந்தைகள்

உமா கொடுத்த பரிசு ஓர் உயர்ந்த ரகப் பேனா.

வேறு எதை அவள் கொடுத்தாலும் அவன் தயங்காமல் மறுத்திருப்பான். 'இவள் என்ன கொடுப்பது? நாம் என்ன வாங்கிக் கொள்வது?' என்ற அகந்தை அவனுக்கு உண்டு. ஆனால் அந்தப் பேனா அதற்கு இடம் கொடுக்கவில்லை. பாரதியாரின் கவிதைகளில் ஊறியிருந்த அவன் மனத்திலிருந்து அதைக் கண்டவுடன் இரண்டு வரிகள் நினைவில் வந்தன.

''எழுது கோல் தெய்வம் – இந்த
எழுத்தும் தெய்வம்.''

பணிவுடன் அதைக் கையில் வாங்கியவன், திருப்பித் திருப்பி அதன் அழகைப் பார்த்தான். வெளித் தோற்றத்திலும் அது நன்றாயிருந்தது.

''அழகாயிருக்கிறதா, மாமா?'' என்று கேட்டாள் உமா.

''எழுதிப் பார்த்தால் தெரியும்; உழைப்பின் உறுதியில் அழகைப் பார்க்கிறவன் நான்'' என்றான் தணிகாசலம். ''இந்தக் காலத்தில் உதவாக்கரைப் பொருள்களுக்கே அழகு அதிகம்; வெளிப்பகட்டு விற்பனைக்காகவும்.''

''எழுதிப் பாருங்கள்; மை அடைத்துக் கொண்டு வந்திருக்கிறேன்.''

பேனாவின் ஓட்டம் சரளமாக இருந்தது. காகிதத்தின் மேல் எழுத்துக்கள் சிற்றருவித் தண்ணீரைப் போல் தங்குதடையின்றி ஓடின. உமாவை நன்றியுடன் பார்த்துச் சிரித்தான். ''முதல் முதலாக நாளையிலிருந்து ஒரு குறுநாவல் எழுதுவதற்கு நினைத்தேன்; நினைத்த நேரத்தில் உன் பேனா கிடைத்திருக்கிறது'' என்றான் தணிகாசலம்.

''நான் அதிர்ஷ்டக்காரி, மாமா!''

அவனுக்குக்கூட அப்போது அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை பிறந்தது. ''உன் அப்பாவுக்குத் தெரியுமோ?'' என்று கேட்டான். விலைமதிப்புள்ள பொருளை விவரம் தெரியாத பெண்ணிடமிருந்து பெறக் கூடாதல்லவா?

''நாங்கள் இரண்டு பேருமே சைனாபஜாருக்குப் போய் வாங்கி வந்தோம்'' என்றாள் உமா.

அடுத்த நாள் காலையில் அவசரம் அவசரமாக அருவிக்குச் சென்று குளித்துவிட்டுத் திரும்பி வந்தான் தணிகாசலம். வழக்கமாக அவன் திரும்பி வரும் வேளையில் அறையைச் சுத்தப்படுத்தி ஒழுங்காக வைத்திருப்பாள் கௌரி. உடை மாற்றிக்கொண்டு எழுத உட்காருவான்.

அன்றைக்கு அறை அலங்கோலமாகக் கிடந்தது. உமாவும் கௌரியும் அதை ஆக்கிரமித்துக் கொண்டு தங்களுடைய அந்தப்புரமாக மாற்றியிருந்தார்கள். கௌரி அவனுடைய நாற்காலியில் உட்கார்ந்திருக்க, உமா அவளுக்குப் பின்னால் நின்று கொண்டு, நூதனமான முடி அலங்காரக் கலைகளை அவளுக்குக் கற்றுக் கொடுத்தாள். மேஜை எங்கும் அவர்களுடைய வாசனைச் சாமான்கள் பரப்பிக் கிடந்தன. உமா தன்னுடைய பழைய உடைகளையும் அங்கு தாறுமாறாகப் போட்டு வைத்திருந்தாள்.

தணிகாசலத்துக்குக் கோபம் வந்து விட்டது. ஒரு நாளுமில்லாத திருநாளாக அறை இப்படி அவதிப்படுகிறதே!



அகிலன்

"இதோ பார், உமா!" என்று அதட்டினான் அவன். "உங்களுடைய 'சலூனை' நீங்கள் உள்ளே வைத்துக் கொள்ளப் போகிறீர்களா, இல்லையா?"

"முடியாது."

"காலை வேளையில் எனக்குக் கெட்ட கோபம் வரும். நீங்கள் இந்த அறைப் பக்கம் எட்டிப் பார்க்கக் கூடாது. எழுதுகிற நேரத்தில்மட்டும் நான் ரொம்பப் பொல்லாதவன்!"

"எந்த நேரத்தில்தான் நீங்கள் நல்லவர்?" என்று திருப்பிக் கேட்டாள் உமா. அவனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "சாயங்காலத்தில் நீ என்ன வேண்டுமானாலும் செய். அப்போது நீ மலை மேல் ஏறித் தாவலாம்; மரத்தில் ஏறி ஆடலாம்; உன்னுடைய தோழர்கள் வேறு உனக்காக மரங்களில் காத்திருக்கிறார்கள்..."

கோபத்துடன் கௌரியின் கரத்தைப் பற்றிப் பரபரவென்று இழுத்துக் கொண்டு கிளம்பினாள் உமா. "நீ எப்படித்தாய் இந்த மாமாவோடு காலம் தள்ளுகிறாயோ?" என்று வேறு கேட்டு வைத்தாள். தணிகாசலம் அவர்களுடைய சாமான்களைக் கொண்டு போய் உள் அறையில் வைத்தான். உமாவின் பெட்டியையும் தூக்கிக் கொண்டு போனான். நல்லவேளையாக உமா தன் படுக்கையை மாணிக்கவாசகத்தின் வீட்டில் போட்டிருந்தாள்.

அமைதி கிடைத்தவுடன் எழுத உட்கார்ந்தான் தணிகாசலம். அறைக் கதவு பாதி திறந்தும் திறவாமலும் இருந்தது. மனத்தை ஒரு நிலையில் நிறுத்தி ஒரு பக்கம் எழுதி முடித்தான். அதற்குள் உமாவின் குரல் உச்சித் தலையில் அடிப்பது போல் கேட்டது.

"அப்பா! அப்பா! உள்ளே போகாதீர்கள்; மாமாவுக்குக் கோபம் வரும்."

"என்ன உமா, இது?"

"அவர் எழுதுகிறார், அப்பா! கோபம் வந்தால்தான் அவருக்கு நன்றாக எழுதுவதற்கு வருமாம்."

சிரித்துக் கொண்டே தணிகாசலத்தின் அருகில் வந்து பெஞ்சியில் உட்கார்ந்தார் சந்திரசேகரன். "உங்களுடைய வேலை நேரத்தில் குறுக்கிடுகிறேனா?" என்று கேட்டார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை: அவள் கிடக்கிறாள், வாயாடி!" என்று கூறினான் தணிகாசலம். பேராசிரியருடைய வேலை விவரங்களை விசாரித்தான். உமாவின் மூலமாக அவர் தனக்குப் பேனா வாங்கிக் கொடுத்ததாய்ச் சொல்லி அதற்கு நன்றி தெரிவித்தான்.

"என்னை ஒன்பது கடைகளுக்கு இழுக்கடித்துச் சென்று கடைக்காரர்களின் பொறுமைக்கு வெடி வைத்து, கடைசியில் இந்தப் பேனாவைப் பொறுக்கி எடுத்தாள் உமா" என்று பேராசிரியர் மிகவும் பெருமைப்பட்டுக் கொண்டார்.



பேச்சு பலப்பல விஷயங்களைத் தொட்டுக் கொண்டு போய்த் திரும்பவும் உமாவுக்கே வந்தது. "விவரம் தெரியாத வயதில் தாயை இழந்து விட்டாள்; நானும் பக்கத்தில் இருந்து அவளை வளர்க்க முடியவில்லை. தங்கையின் பராமரிப்பு அவ்வளவு போதாது. தங்கையைச் சொல்லியும் குற்றமில்லை; தன் குழந்தைகளையே அவள் சட்டை செய்யாதவள். ஏதோ கடவுள் கொடுத்தார்; கடவுள் வளர்க்கிறார்."

தகப்பனாரின் உள்ளக் கதவு தானாகத் திறந்து கொண்டவுடன், அதற்குள் தாய்மை இருப்பதைக் கண்டு கொண்டான் தணிகாசலம். தந்தையின் பரிவு தாய்மைப் பாசமாகவும் மாறி விட்டது. ஆனால் அவரால் தம் குழந்தையை அணைத்து வளர்க்க வழியில்லை.

"பெண் கெட்டிக்காரி; வந்து ஒரு நாள் கூட ஆகவில்லை. அதற்குள் சௌரியையும் அம்மாளையும் தன் கட்சியில் சேர்த்துக் கொண்டு விட்டாள்" என்றான் தணிகாசலம்.

"மனித உயிருக்கு யாரிடமாவது அன்பு செலுத்தியாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இருக்கிறதல்லவா? அப்படியிருந்தும் சிலரைக் கண்டவுடன் அது வெறுப்பு கொள்ளுகிறது; இன்னும் சிலரிடம் அட்டைபோல் ஒட்டிக் கொள்கிறது. இத்தனை வருஷங்களாகப் பழகியும் என் தந்தையிடம் அவளுக்குப் பற்றுதல் இல்லை. நான் விடுமுறையில் வந்து விட்டால் என்னுடைய உயிரை வாங்கி விடுகிறாள்" என்றார் பேராசிரியர்.

"நான் அதைப் புரிந்து கொண்டேன்" என்றான் தணிகாசலம்.

"அதற்காகவே அவளை நான் புத்தகப் பைத்தியமாக மாற்றி விருக்கிறேன். கல்லூரி நூல் நிலையத்தில் காவ்வாசிப் புத்தகங்களை அவள் கரைத்துக் குடித்திருக்கிறாள். கவிதைகளையும், கதைகளையும் தவிர அவள் வேறெதுவும் படிப்பதில்லை. கதாபாத்திரங்களைப் பற்றி எனக்கு விரிவான கடிதங்கள் எழுதுவாள். நான் அவளுக்கு மறு கடிதத்தில் பதில் சொல்லியாக வேண்டும். அன்றாட வாழ்க்கையில் காணப்படும் மனிதர்களை விட அவளுக்குக் கதைகளில் வரும் மனிதர்களிடம் அனுதாபம் அதிகம்.- நீங்கள் அவள் என்னோடு வாதமிடும்போது வேடிக்கை பார்க்க வேண்டுமே!"

தத்துவப் பேராசிரியரின் உற்சாகமான உள்ளத்தை வேடிக்கை பார்த்தான் தணிகாசலம். நாள் முழுவதும் அவர் சலிப்பின்றி உமாவைப் பற்றியே பேசுவார் போல் தோன்றியது.

"கதை எழுதுகிறவர்கள் எல்லோருமே





உமாவை நீங்கள் குழந்தை என்றே நினைப்பீர்கள்'' என்றான். அவர் புன்னகை செய்தார்.

உமாவின் குரல் அறைக்கு வெளியிலிருந்து 'கணீர்' என்று கேட்டது: ''உள்ளே வரலாமா?''

''வரலாம்'' என்றான்.

''கோபம் ஆறி விட்டதா? தோசை சூடாக இருக்கிறது.''

கௌரியும் உமாவும் தோசை — காப்பியுடன் அறைக்குள் நுழைந்து பரிமாறினார்கள். பேராசிரியர் ஏதோ பெயருக்குச் சாப்பிட்டார். சாப்பாட்டுக்குத் தகுதி இல்லாத மனிதர் அவர். தணிகாசலம் சாப்பிட்டுக் கொண்டே உமாவை வம்புக்கு இழுத்தான். ''கதை எழுதுகிறவர்களைக் கடவுள் என்று நினைக்காதே; அவர்கள் சத்தச் சோம்பேறிகள்! வயல் வரப்பில் போய் உடம்பை வளைத்து வேலை செய்யப் பயந்து கொண்டு, பேனாப் பிடித்துக் காகிதத்தில் உழுகிறார்கள்.''

''சொல்லேர் உழவர்கள்'' என்று சிரித்தாள் உமா. பிறகு, ''நீங்கள் மட்டும் கடவுள் இல்லை என்று தெரிந்து கொண்டேன்; உங்களைப் பெரியவராய் நினைக்கவும் மாட்டேன்'' என்றாள்.

''பிறகு யார் இவர்?'' என்று கேட்டார் பேராசிரியர்.

''குழந்தை: பச்சைக் குழந்தை!''

தணிகாசலத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. தன்னுடைய மன ஓட்டத்தில் மிதந்து கொண்டிருந்த அதே சொல்லை அவள் வெளிப்படுத்தியவுடன் அவன் திடுக்கிட்டான்.

''அத்தையிடம் மாமா எப்படிக் கதை எழுதுகிறார் என்று கேட்டேன். மாமாவுக்கு ஒன்றுமே தெரியாது; அவர் பச்சைக் குழந்தை; ஏதோ கிறுக்கி வைக்கிறார் என்று அத்தை சொன்னார்கள்.''

''அத்தை சொன்னதுதான் சரி!'' என்றான் தணிகாசலம்.

''குழந்தையும் கடவுளும் ஒன்று'' என்று தர்க்க ரீதியாக விளக்கப் பார்த்தார் பேராசிரியர். அந்தச் சிறிய அறை பெரியதொரு கல்லூரியின் பட்டிமன்றமாக அவருக்குத் தோன்றியது. விரிவுரை நிகழ்த்தி விட்டார்.

தணிகாசலத்துக்கு வியப்பாக இருந்தது. மாணிக்கவாசகத்துடன் பழகும் போது மிகப் பெரிய மேதாவியாகக் காட்சியளித்த சந்திரசேகரன் தம்முடைய பெண்ணுக்கு முன்னால் அவளோடு சரிசமமாக மாறி விட்டார். 'முதற் குழந்தை இவர்! அடுத்த

அவனுக்குக் கடவுள்கள்!'' என்றார் பேராசிரியர் சந்திரசேகரன்.

''ஏற்கெனவே நம்மிடம் ஏராளமான கடவுள்கள்; எங்களையும் அந்த வரிசையிலே சேர்த்து விட்டால் ஆபத்துத்தான்'' என்றான் தணிகாசலம்.

தம்முடைய பெண்ணின் வடிகட்டின முட்டாள்தனத்தையே ஒரு பெரிய பாக்கியமென்று அவர் கருதுவதுபோல் அவனுக்குத் தோன்றியது. பெரிய பெரிய இலக்கிய சாதனைகளைச் செய்தவர்களைத் தணிகாசலம் கூடக் கடவுளைப் போன்றவர்கள் என்று நினைத்து மயங்கி இருக்கிறான். ஆனால் அவர்களுடைய வாழ்க்கைச் சரித்திரங்களைப் படித்தபோது அவர்களும் மிகச் சாதாரணமான மனிதர்கள் என்பது அவனுக்கு விளங்கி விட்டது. ''இப்படியே அவளைக் கற்பனை வானத்தில் அன்னப் பறவைபோல் பறக்க விட்டுக் கொண்டிருக்காதீர்கள். பிடித்து இழுத்துப் புழுதி படிந்த தரையில் நடக்க விடுங்கள். சுற்றியுள்ள மனிதர்களைப் பார்த்து அவள் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்'' என்றான்.

''வயது வந்தால் தானாகத் தெரிந்து கொள்வாள்'' என்றார் அவர்.

தணிகாசலத்துக்குச் சிரிப்பு வந்தது. 'அவளுக்கு வயது வந்துவிட்டது என்பது அவளுக்குத்தான் தெரியவில்லை; இந்தப் பேராசிரியருக்குக் கூடவா தெரியவில்லை! பெற்றவர்களுக்கு என்றைக்குமே மற்றவர்கள் குழந்தைகள் தானா?' ''நாலு குழந்தைகளுக்குத் தாயான பிறகும்

குழந்தை இவர் மகள்' என்று நினைத்துக் கொண்டான் தணிகாசலம்.

சாப்பாடு முடிந்ததும் போராட்டம் வலுத்தது. தந்தையும் மகளும் தங்கள் கைவரிசைகளைத் தணிகாசலத்தின் முன்னால் காட்டத் தொடங்கினார்கள். சுவையானதொரு இலக்கியச் சண்டை அழகான முறையில் தொடங்கி, காரசாரமாக வளர்ந்து, ஆத்திரத்தின் வெளியீடாக வெடித்துக் கொண்டிருந்தது. பேராசிரியர் பேராசிரியராகவே இல்லை. தம்முடைய பெண்ணை வாதத்தில் மடக்க முடியாமல் திணறினார்.

கம்பனின் கதாபாத்திரங்களைப் பற்றி இருவரும் வம்பு செய்தார்கள். இளங்கோவை எடுத்துக் கொண்டு என்னவெல்லாமோ பேசினார்கள். கோவலனின் உறுதியற்ற தன்மையை இடித்துக் கூறினார் அப்பா; கண்ணகியைத் திறமையற்றவள் என்று திட்டினாள் பெண். பிறகு காளிதாசனின் சகுந்தலை அவர்களிடம் அகப்பட்டுக் கண்ணீர் வடித்தாள். அடுத்தாற்போல் இருவரும் ஐரோப்பிய யாத்திரை தொடங்கினார்கள். ஷேக்ஸ்பியர் முதல் பெர்னாட்ஷா வரையில் பற்பல ஆசிரியர்களின் பெயர்கள் அடிபட்டன. அவர்களுடைய பட்டியலில் அகப்பட்ட ஆசிரியர்கள் அப்போது உயிருடன் இருந்து, அந்தக் காட்சியையும் கண்டிருந்தார்களானால் தாங்கள் எழுதி வைத்த நூல்களுக்காக மிகவும் வருத்தப்பட் டிருப்பார்கள்.

கடைசியில், "உங்களுக்கு ஒன்றுமே தெரியாது!" என்றாள் பெண்.

"உனக்கு ஒன்றுமே தெரியாது!" என்று கத்தினார் அப்பா.

"நீங்கள் பாடம் சொல்லிக் கொடுக்கத்தான் லாயக்கு!" என்று கூறி, "உங்கள் ஆராய்ச்சியில் இருதயமும் இல்லை; உணர்ச்சியும் இல்லை" என்றாள்.

"உனக்கு மூளையே கிடையாது. நீ வெறும் உணர்ச்சிக் குவியல். இல்லாவிட்டால் இவருடைய கதையை ரயிலில் படித்துவிட்டு ஒரு குடம் கண்ணீர் விட்டிருப்பாயா? இவர் முன்னாலே அழுதாயே, உனக்கு வெட்கமில்லை?"

கைகொட்டிச் சிரித்தார் சந்திரசேகரன். தம்முடைய பெண்ணின் வாயை அடக்கி விட்டதாக அவருக்கு எண்ணம். ஆனால் அடங்குகிற வாயா அது? தன் அப்பாவை மிஞ்சப் பார்த்தது.

கடைசியில் தணிகாசலத்தைத் தீர்ப்புக் கூறச் சொன்னாள் உமா. "அப்பாவுக்கு இலக்கிய நயம் தெரியுமா? எனக்குத் தெரியுமா? ஆசிரியர் உயர்ந்த ரசிகரா? மாணவ மாணவிகள் உயர்ந்த ரசிகர்களா?" என்று கேட்டாள்.

தணிகாசலத்துக்குத் தர்ம சங்கடமாய்ப் போய் விட்டது. இரண்டு பேரும் வேண்டியவர்கள். பேராசிரியர்களிடமும் அவனுக்கு மதிப்பு உண்டு; மாணவ உலகத்திடமும் அன்பு உண்டு.

"பேராசிரியர்கள் பெரிய பெரிய இலக்கியங்களைப் படிப்பார்கள். நீங்கள், நாங்கள் எழுதுகிறதைப் படிப்பீர்கள். பழைய இலக்கியங்களைப் பேணிப் பாது



காப்பவர்கள் ஆசிரியர்கள்; புதிய இலக்கியங்களைப் போற்றி வளர்ப்பவர்கள் மாணவி - மாணவர்கள்."

உமாவின் உற்சாகம் கரை புரண்டு விட்டது. தரையிலிருந்து எழும்பி எழும்பிக் குதித்தாள். மேஜையில் கிடந்த பத்திரிகைகளைத் தூக்கி வீசினாள். தன்னுடைய அப்பா தோற்று விட்டார் என்று பழித்துக் காட்டினாள். அவள் கொண்டாடிய வெற்றி விழாவில் அந்தச் சின்னஞ் சிறிய அறைக்குள் பயங்கரச் சூறாவளியே வீசத் தொடங்கியது.

இதற்காகச் சந்திரசேகரனும் சும்மா இருக்கவில்லை. "ஆசிரியர்கள் உயர்ந்தவர்கள் என்பதைச் சொல்லி விட்டீர்கள். நாங்கள் பாடம் சொல்லா விட்டால் இந்தக் கற்றுக் குட்டிகள் எப்படி உங்கள் கதைகளைப் படிக்க முடியும்!— எங்கே, கையைக் கொடுங்கள்!" என்று தணிகாசலத்தின் கையைப் பிடித்து, அது கனுக்கும் வரையில் குலுக்கினார். அவருடைய சோடா பாட்டில் அடி மூக்குக் கண்ணாடிக்கும் பின்னால் அவர் கண்கள் ஆனந்தமாக மலர்ந்திருந்தன. குழந்தை உள்ளங்கொண்ட பெரியவரா, அல்லது தம்முடைய குழந்தைக்காக இப்படி மாறி விட்டாரா, அல்லது உண்மையிலேயே அவரும் ஒரு குழந்தை தானா என்பது அவனுக்கு விளங்கவில்லை.

அன்றைக்குப் புதிதாக எழுதத் தொடங்கிய நாவல் அவன் எழுதி முடித்த ஒரே பக்கத்துடன் நின்றது.

## அத்தியாயம் 36

# லட்சியம் தெரிந்தது

இரண்டு நாட்கள் சென்றன; அன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை.

குற்றாலத்தின் அருவிகளையும் கலைகளையும் சுற்றிப் பார்ப்பதற்காக உமா கௌரியைத் தூண்டி விட்டுக் கிளம்பச் செய்தாள். தணிகாசலத்துக்கு வழி காட்டி உத்தியோகம்; பாதுகாவல் வேலை. காலையில் பலகாரத்தை முடித்துக் கொண்டு, பெரிய இட்டிலிப் பொட்டலமாய் மத்தியானத்துக்குக் கட்டிக் கொண்டார்கள். உமா சென்னையில் இருந்து, தான் கொண்டு வந்திருந்த புகைப்படக் கருவியைத் தோளில் மாட்டிக் கொண்டாள். கல்யாண வீட்டுக்குக் கிளம்பும் கல்யாணமாகி விட்ட பெண்களைப்போல் இருவரும் ஒரு வழியாகச் சீவிச் சிங்காரித்துக் கொண்டு புறப்படத் தயாரானார்கள்.

அவர்கள் புறப்படும் நேரம் பார்த்து வாசலில் ஒரு கார் வந்து நின்றது. நாற்பது நாற்பத்தைந்து வயது மதிக்கத் தக்க ஒரு மனிதர் காரிலிருந்து இறங்கி வந்தார். எளிய தோற்றமும் புன்முறுவலும் கொண்ட அவரைத் தணிகாசலம் முன்பின் கண்டதில்லை. நீண்ட கதர்ச் சட்டை, மடித்துப்போட்ட மேல்துண்டு, மூக்குக் கண்ணாடி, அகன்ற நெற்றி, உருண்ட முகம்—இவற்றுடன் தோன்றினார் அவர். "தணிகாசலத்தின் வீடு இதுதானே?" என்று தணிகாசலத்திடம் கேட்டு விட்டு, "நான் 'மலர்க்கொத்'து ஆசிரியர்; கந்தசாமி" என்றார்.

தணிகாசலத்துக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. இத்தனை பெரிய அறிஞர் தன்னைத் தேடி வந்திருக்கிறாரே! "உங்களை நேரில் வந்து பார்க்க வேண்டுமென்று எனக்கு வெகு நாட்களாக ஆவல்" என்று கூறி, அவரை மரியாதையுடன் வரவேற்றான். பத்திரிகாசிரியரைக் கண்டவுடன் உமாவுக்கும் கௌரிக்கும்கூடத் தங்கள் திட்டம் மறந்து விட்டது. உமா கௌரியின் காதருகில் போய், "இவரை நான் பட்டணத்தில் அடிக்கடி பார்த்திருக்கிறேன்" என்றாள்.

திருநெல்வேலியில் ஒரு இலக்கிய விழாவுக்காக அவரை அழைத்தார்களாம். அப்படியே அருவியில் குளித்துவிட்டு, அவனையும் பார்த்துவிட்டுப் போகலாமென்று விழாக்காரர்கள் அனுப்பிய காரில் வந்திருந்தார்.

திரும்பிப் போகும் அவசரத்துடன் அவனிடம் அவனுக்குத் தேவையான பல விவரங்களைக் கூறினார். கதைகளின் வாயிலாக ஏற்பட்ட தொடர்பு அவரது மனத்தில் பதிந்து அன்பாக உருவெடுத்திருப்பதை அவருடைய நயமான பேச்சில் கண்டு கொண்டான்.

கந்தசாமி சிரித்துக் கொண்டே கூறினார்: "எழுத்தின் வழியே தெரியும் உங்கள் மனம் எனக்குப் பிடித்திருக்கிறது. நீங்கள் இன்னும் நன்றாக உழைத்து எழுத வேண்டும். உங்களுக்கே திருப்தி ஏற்படும் வரை பலமுறை அடித்துத் திருத்தி எழுதுங்கள். எழுத்துக் கலை எளிதில்லை; கடினமான ஒன்று. கல்லைச் செதுக்கிச் சிலை வடிப்பதைப் போல, வாழ்க்கையின் உண்மைகளைச் சொல்லால் செதுக்கிச் செதுக்கிக் கற்பனையாக்க வேண்டும். கடினமான உழைப்பை மேற்கொண்டு உயர்ந்த கதைகளை உருவாக்குங்கள்."

தணிகாசலம் உற்றுக் கேட்டான். உமாவும் கண்களை அகலத் திறந்தபடி கவனித்தாள். இடையில் அவளுக்கொரு சந்தேகம் வந்து விட்டது. "அப்படியானால் மாமா இப்போது எழுதுகிற கதை உங்களுக்குப் பிடிக்கவில்லையா?" என்று கேட்டாள்.

"பிடிக்காவிட்டால் நான் பத்திரிகையில் போட்டிருப்பேனா?" என்று திருப்பிக் கேட்டார் கந்தசாமி. "குழந்தை வளர வேண்டுமென்று தாயார் ஆசைப்படுவதைப்போல நான் இந்த எழுத்துக் குழந்தை வளர வேண்டுமென்று நினைக்

# ஜல தோஷத்தையும் சீதளத்தையும் நிறுத்த

# பெப்ஸ்

## உபயோகியுங்கள்

ஜலதோஷம், சீதளம், இருமல், தொண்டைப் புண், இன்ப்ளுயன்ஸா, ப்ராங்கைடிஸ் இவை ஏற்படும் ஆரம்பத்திலேயே பெப்ஸ் உட்கொள்ளுங்கள். பெப்ஸிலுள்ள குணமளிக்கும், மருந்து சத்துகள். ஈரல், சுவாசப்பை இவற்றுள் ஊடுருவிச் சென்று, தீங்கிழைக்கும் கிருமிகளை உடனே நாசம் செய்கின்றன. ரணங்களுக்கு நிவாரணமளிப்பதுடன், எரிச்சலை சமனப்படுத்துகிறது. டாக்டர்கள் பெப்ஸை சிபாரிசு செய்கின்றனர். குழந்தைகளும், வயோதிகர்களும் உபயோகிக்கலாம், தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதிலில்லை.



# PEPS

பெப்ஸ் தொண்டை மார்பு உபாதைகளுக்கு சமனமூட்டும் வில்லைகள்.

FPY-41-TAM

சோல் ஏஜெண்டுகள் :

**தாதா அண்டு கம்பெனி**

86, வணியப்ப நாயக் தெரு, சென்னை-3



## கூந்தல் மற்றும் மூளை அபிவிருத்திக்கான தைலம்

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபக சக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

| | |
|---|---|
| பெரிய பாட்டில் | ரூ. 4/- |
| சிறிய பாட்டில் | ரூ. 2/- |

எங்கும் கிடைக்கும்




**ராம்தீர்த் யோகாஷ்ரமம்**

பம்பாய்-14. (C. Rly)

ஆரோக்கியமாகவும், திடமாகவும் இருக்க யோகாசனங்களை விளக்கும் எங்கள் அழகான ஆசனப் படத்திற்கு எழுதுங்கள். தபால் செலவு உள்பட ரூ. 2. மணியார்டரில் தொகை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். வீட்டிலேயே ஆசனங்களைச் சுலபமாகப் பழகலாம்.

சென்னை டெப்போ :

4/441, தங்கசாலைத் தெரு, சென்னை

கிறேன். வயது வளர வளர, அநுபவம் முதிர-முதிர, அறிவு பெருகப் பெருகத் தான் சிறந்த கதைகள் எழுத முடியும். வாழ்க்கையின் அநுபவ வெளியீடுதானே எழுத்து? கலையின் வெற்றிக்குத் துணைக் கருவிகளாக ஓரளவு பழந்தமிழ் இலக்கியத்தையும், பிறநாட்டு இலக்கியங்களையும் கற்றுக் கொள்ளவேண்டும். உயர்ந்த நோக்கமும், அகந்தையற்ற மனமும், எளிய வாழ்வில் பற்றுதலும் எழுத்தாளனுக்கு வேண்டும்.''

தணிகாசலத்தின் கண்களில் மின்னல் பளிச்சிட்டது. மூச்சுப் பேச்சற்று அவன் உட்கார்ந்து விட்டான். அதுவரையில் அவனுக்குப் புலப்படாமல் கிடந்த ஒன்றை அவன் அன்றைக்குக் கண்டு கொண்டான். அதற்காக ஆசைப்பட்டான்; 'இன்னும், இன்னும், இன்னும் சிறந்த எழுத்து; இன்னும் உயர்ந்த எழுத்து; காலத்தைத் தாண்டி நிற்கக் கூடிய எழுத்து! அது முடியுமா? முடியாவிட்டால் போகிறது; ஆசைப்படுவதில் ஒன்றும் தப்பில்லையே?'

தணிகாசலத்திடமிருந்து விடைபெற்றுக் கொண்டார் கந்தசாமி. கல்யாணி அம்மாளையும் கௌரியையும் விசாரித்து விட்டு, உமாவைப் பார்த்து, ''உங்களுக்கு இவள் என்ன உறவு?'' என்று கேட்டார். தணிகாசலத்தை முந்திக் கொண்டு, ''நான் கௌரியின் தங்கை'' என்று சொல்லிக் கொண்டாள் உமா.

போகும்போது விளையாட்டாக உமாவிடம், ''உனக்கு இவர் எழுதிய எந்தக் கதை அதிகமாய்ப் பிடித்திருக்கிறது?'' என்று கேட்டார்.

''எதுதான் பிடிக்கவில்லை?''

ஆசிரியர் அயர்ந்து போனார்; ''வாய் அதிகம்!'' என்று அதட்டி வைத்தான் தணிகாசலம். கந்தசாமி சிரித்தபடியே, ''இவள் பொல்லாத ரசிகை! இவளிடம் நீங்கள் கவனமாய்ப் பழக வேண்டும்'' என்று கூறிவிட்டுக் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

அருவிக்கரைப் பயணம் தொடங்கியது. பத்திரமாய்ப் போய்வரச் சொல்லி அனுப்பிவைத்தாள் கல்யாணி அம்மாள். ஐந்தாறு மைல்களுக்குமேல் நடந்து வருவது என்ற ஏற்பாடு.

வேனிற் காலத்துக் குற்றாலம் விந்தை நிறைந்த உலகம். கூட்டங் கூட்டமாக அருவிக்குள் தலை கொடுத்துக் கொண்டிருந்தார்கள் மனிதர்கள். முற்பகல் இளவெய்யில் பளிச்சென்று வீசியது; ஆனால் உடம்பில் உறைக்கவில்லை. சூரியனும் தன் தலையை அருவிக்குள் கொடுத்துச் சந்திரனாக மாறி விட்டான். அருவிக்கு எதிரில் கிடந்த பாறைத் திட்டுக்களில் வேடிக்கை பார்க்கும் மக்கள் கூட்டம் பரவி யிருந்தது.

ஐந்தருவிக்குச் செல்லும் பாதையில் உமாவுக்கு ரசிகமணி சிதம்பரநாதரின் வீட்டைச் சுட்டிக் காட்டினான். ''வாருங்கள், போய்ப் பார்த்துவிட்டு வரலாம்'' என்று திரும்பினாள் உமா.

''பேசாமல் வந்து தொலை! அவர் இலக்கியத்தில் எதையாவது கேட்டு வைப்பார். எனக்கோ ஒன்றும் தெரியாது; விழிக்க வேண்டி வரும்—வா!''

''நான் பதில் சொல்கிறேன்'' என்றாள் உமா. ''அவரைக் கேள்வி கேட்டு நான் திணற வைக்கிறேன், பாருங்கள்.''

அவள் கன்னத்தில் ஓங்கி அறைய வேண்டும் போலிருந்தது தணிகாசலத்துக்கு. ''படித்த பெரிய மனிதர்களிடம் சற்று ஒதுங்கிப் பழக வேண்டும், உமா; ஒதுங்கிப் பழக வேண்டும்!''



''சரி, உங்களிடம் நான் ஒதுங்கிப் பழகப் போகிறேன்! —கௌரி, இங்கே வா, நாம் மாமாவோடு போக வேண்டாம். அவர் பெரிய மனிதர்; தனியாகப் போகட்டும்.''

உமாவை ஊமைப் பெண்ணாக்காமல் விட்டுவிட்ட கடவுளை அவன் மனத்துக்குள் நொந்து கொண்டான்.

காட்டு வழியாக ஒற்றையடிப் பாதைகளில் அவர்களை அழைத்துக் கொண்டு சென்றான் தணிகாசலம். புதர்களுக்குள் அரவம் கேட்டுப் பலமுறை உமா பயந்து கூச்சலிட்டாள். கௌரி சிரித்தாள். அந்த மலைச்சாரல் கௌரிக்கும் தணிகாசலத்துக்கும் பழக்கமான இடம். வண்டுகளின் ரீங்காரம், காட்டுக் கோழிகளின் சலசலப்பு, அருவிகளின் கிளுகிளுப்பு, குரங்குகளின் குதியாட்டம்,

மலைப் பாம்புகளைப் போன்ற கொடிகளின் பயமுறுத்தல்-இவற்றுக்கெல்லாம் அவர்கள் புதியவர்களல்ல. வனமூலிகைகளின் மணத்தைச் சுமந்து கொண்டு வந்து வீசிய ஈரக்காற்று அவர்களுடைய நடைக் களைப்பை மாற்றியது.

தேனருவிக்கு அவர்கள் வந்தார்கள். பயங்கரமானதொரு காட்டுக்குள் பாதுகாப்பாக வைக்கப்பட்ட கன்னிப் பெண்ணு அந்த அருவி!

அக்கம் பக்கத்து மரங்களில் பெரிய பெரிய தேன் கூடுகள் தொங்கின. ''ஙொய்!'' என்று சத்தமிட்டுச் சுற்றிச் சுழலும் தேனீக்கள்.



''மாமா! மாமா! தேன் கூட்டைப் பார்த்தீர்களா? எனக்கும் அந்தத் தேனீயைப் போல் பறக்க ஆசையாக இருக்கிறது, மாமா!''

தணிகாசலத்தின் மனம் அங்கே இல்லை. அது கற்பனை வானத்தில் சிறகடித்துப் பறக்கத் தொடங்கியது.

''என்ன மாமா, வாய் திறந்து பேச மாட்டேன் என்கிறீர்கள்?''

''உமா! வாழ்க்கை எனக்குப் பிடித்திருக்கிறது'' என்று துள்ளிக் குதித்தான் தணிகாசலம், காணாத ஒன்றைக் கண்டு விட்டதுபோல். ''சிறுகச் சிறுகச் சேகரித்து இப்படி அழகழகான கூடுகள் கட்ட வேண்டும். தேனைப்போல் தித்திப்பாக, தேனைப்போல் மருந்தாக, தேனைப் போல் உயர்ந்த கதைகள்......''

சொற்களை அவன் முடிக்கவில்லை.

''ஓரத்தில் நின்று கொண்டிருக்கிறீர்கள்; விழுந்து விடாதீர்கள்!'' என்று அவன் கையைப் பிடித்து இழுத்தான் கௌரி. ''உமா! உன் மாமாவுக்கு இந்தமாதிரி இடங்களுக்கு வந்தால் தடுமாற்றம் வந்து விடுகிறது; ஏதேதோ பேசுகிறார்'' என்றாள்.

''மாமாவின் உளறல் எனக்குப் புரிகிறது, கௌரி!'' என்றாள் உமா. பிறகு அவனைப் பார்த்து, ''ஏன் மாமா நீங்கள் கவிதை எழுதுவதில்லை?'' என்று வியப்புடன் கேட்டாள்.

செங்கமலத்துக்காகக் கவிதை எழுதிக் கிழித்துப் போட்டதை நினைத்துக் கொண்டான் தணிகாசலம். ''அது என்னை ஏமாற்றி விட்டது; நான் அதற்குத் தகுதியும் இல்லை'' என்றான்.

'என்ன பொருளில் இதைச் சொன்னோம்' என்று அவனுக்கே விளங்கவில்லை. ஒருவேளை செங்கமலத்தைக் கைப் பிடித்திருந்தால் பாட்டெழுதும் பைத்தியமும் கைகூடி யிருக்கலாம்.

கீழே இறங்கி வந்து அவர்கள் இட்டிலிப்பொட்டலத்தைஅவிழ்த்துக் கொண்டு உட்கார்ந்தார்கள். குரங்குப் பட்டாளமும் விருந்துக்கு வந்தது. உமா அந்தக் காட்சியைப் புகைப்படம் பிடித்தாள். அரை இட்டிலிகூட அவன் வயிற்றுக்குள் போகவில்லை. 'காற்றைத் தின்று கொண்டு காற்றில் பறக்க வேண்டிய பிராணி' என்று முணு முணுத்தாள் தணிகாசலம்.

''லீவுக்கு லீவு நீ இங்கே வந்துவிடு, உமா; எனக்கு நன்றாய்ப் பொழுது போகும்'' என்றாள் கௌரி.

''என்னால்தான் எழுத முடியாது'' என்றான் தணிகாசலம்.

''நான் என்ன, எழுத வேண்டாமென்று உங்கள் கையையா பிடித்துத் தடுத்து நிறுத்திக் கொள்ளுகிறேன்?'' என்று சிணுங்கினாள் உமா.

மாலை மயங்கி இரவாக உருமாறப் போகும் வேளையில் அவர்கள் திரும்பி வந்து, கோயிலுக்கு எதிரில் நின்று கொண்டு, பெரிய அருவியை வேடிக்கை பார்த்தார்கள். நேரமாகி விட்டதென்று வீட்டுக்குப் போவதற்காகத் துடித்தாள் கௌரி. தணிகாசலம் அருவிக்குமேலே நீல வானத்தில் எழும்பியிருந்த பிறைச் சந்திரனை உற்றுப் பார்த்தான்.

"சிவபெருமானைப் பற்றிய கற்பனை உருவம் முதலில் கலைஞனுக்கு இந்த இடத்தில்தான் தோன்றியிருக்க வேண்டும்" என்றான் தணிகாசலம். "அதோ, வான முகட்டில் பிறை நிலா! இதோ மணிமுடியிலிருந்து அருவிக் கங்கை! இந்தக் குன்றைக் கூர்ந்து பார்க்கும் போது உங்களுக்குக் கொவ்வைச் செவ்வாயும் அதன் குமிண் சிரிப்பும் தெரியவில்லையா? — கொட்டும் அருவிதான் வாழ்க்கை; குளிர் நிலவு லட்சியம்."

"இந்த ஆண்களே பொல்லாதவர்கள்!" என்றாள் உமா.

"எதற்காகச் சிவபெருமானுக்கு இரண்டு மனைவிமார்கள்? ஒழுங்காக அவர் ஒருத்தியுடன் மட்டும் குடும்பம் நடத்தினால் போதாதா?"

கௌரி கலீரென்று சிரித்தாள்.

தணிகாசலம் சிரிக்கவில்லை; சந்திரனைப் பார்த்துக் கொண்டே, "எனக்கும் இரண்டு மனைவிகள்!" என்றான்.

"என்ன?" என்று பதறினாள் கௌரி.

"என்ன!" என்று ஒதுங்கினாள் உமா.

தணிகாசலம் புன்முறுவலுடன் கௌரியின் கழுத்தில் கரத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டான். "நீ என் வாழ்க்கைக்கு மனைவி; அவள் என் லட்சியத்துக்கு மனைவி. நீ என் உண்மைக் காதலி; அவள் என் கற்பனைக் காதலி. அவளை நான் விவரம் தெரியாப் பருவத்திலேயே திருமணம் செய்துகொண்டு விட்டேன்."

"அப்பாடா!" என்று ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள் உமா. "அவள் எங்கே இருக்கிறாள்?"

"அதோ, அந்த நிலவுக்குப் பக்கத்தில் நீல வானத்தில் இருந்து என்னைப் பார்த்துக் கண் சிமிட்டுகிறாள்!"

இரண்டு பெண்களும் அவனைத் தரை உலகத்துக்கு இழுத்துப் பிடித்து வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

இரண்டு வாரங்கள் சென்றன.

உமாவும் அவள் தந்தையும் ஊருக்குப் புறப்படும் நாள் வந்தது. அந்த இரண்டு வாரங்களுக்குள் உமா கௌரியின் தங்கையாகவே மாறி விட்டாள். தணிகாசலத்திடம் விடைபெற்றுக் கொண்டு போவதற்காக வந்த உமாவின் கண்கள் கலங்கியிருந்தன. அவனுக்கு எதிரில் உட்கார்ந்த வண்ணம், கன்னத்தில் கை வைத்துக் கொண்டே, "நான்



போய் வருகிறேன், மாமா!'' என்று தழு தழுத்த குரலில் கூறினள்.

கூறிவிட்டு அவள் எழுந்து போகவில்லை. ஐந்து - பத்து நிமிஷங்கள் அங்கேயே உட்கார்ந்து கொண்டிருந்தாள். பிறகு, ''எனக்கு இங்கிருந்து போகவே பிடிக்க வில்லை, மாமா! விவரம்தெரிந்த நாளாய் நான் இவ்வளவு சந்தோஷமாக அங்கே இருந்ததில்லை. கௌரியையும் அத்தை யையும் மறக்க முடியாது'' என்றாள்.

விளையாட்டுப் பெண்ணிடம் கூட வேதனை நிறைந்த மனம் ஒன்று உண்டு என்பதை அன்றைக்குக் கண்டான் தணிகாசலம். அவளுடைய சின்னஞ் சிறு நீண்ட விழிகளின் பெரிய பெரிய கருமணிகள் நீருக்குள் மூழ்கித் தத் தளித்தன. அதைக் கண்ட அவன் மனமும் தழுதழுத்தது.

''மாமா!'' என்று மெல்ல அழைத் தாள் உமா. ''நீங்கள் என்னைத் தப்பாக



நினைக்கக் கூடாது. உங்களையும் நான் மறக்க மாட்டேன். நீங்கள் என்னைப் பொறுத்தவரையில் பெரிய மனிதர்.''

''முட்டாள்!'' என்று செல்லமாய்த் திட்டினன் தணிகாசலம். ''நான் இன் னும் மனிதனே ஆகவில்லை; அதற்குள் என்னைப் பெரியவனாக்குகிறாயே! உலகத் தில் பெரிய மனிதர்கள் குறைவு. யார் பெரியவர்களாக இருந்தாலும் இல்லா விட்டாலும் கட்டாயம் நான் பெரிய வன் இல்லை. நீ போய்விட்டு வா.''

''அத்தை எனக்கு நீங்கள் பிறந்ததி லிருந்து கதை சொன்னர்கள்.''

''உன் அத்தைக்கும், உனக்கும், ஏன்- எனக்குமே தெரியாத எவ்வளவோ இருக் கிறது. போய் வா, உமா!''

''ஏன்? எழுதுங்களேன்!''

''காலம் வரும்போது எழுதுகிறேன்; எழுதத்தான் போகிறேன், நீ படிக்க லாம். படிப்பதோடு நிறுத்திக்கொள்.''

கண்களைத் துடைத்துக் கொண்டு உமா எழுந்து சென்றாள். 'சின்னஞ்சிறு வயதில் சந்திப்பும், பழக்கமும், பிரிவும் மலை யைப் போல் பெரிதாகத் தோன்றும். நாளைக்கோ, அடுத்த மாதமோ சென்னை நகரத்தின் அசுர வேகத்தில் குற்றாலத்துக் குளுமையை மறந்து விடுவாள்' என்று நினைத்துக் கொண்டான் தணிகாசலம். 'மறக்கா விட்டால் அவள் மண்டு!'

தணிகாசலத்துக்கு யார் - யார் எந்த- எந்த வேளைகளில் எதிரில் நிற்கிறார் களோ அவர்களுடைய நினைவுதான் அப்போது வருவதுண்டு. பள்ளிக்கூடம் போனல் பிள்ளைகளைக் கவனிப்பான். மாணிக்கவாசகத்தைக் கண்டால் மதிப் புச் செலுத்துவான். படிப்பதற்குப் புத்த கங்களைக் கையில் எடுத்தால் இடி விழுந் தாலும் தெரியாது. எழுதுவதற்கு உட் கார்ந்தாலோ கௌரியே மனத்தைவிட்டு மறைந்து விடுவாள். இப்படிப்பட்ட இளைஞனுக்கு உமாவைப் பற்றிக் கவலைப் படத்தானு நேரம்? அப்படியும் அவள் ஒன்றும் அனுதாபத்தை எதிர்பார்க்கும் நிலையில் இல்லை. ஆண் பிள்ளையைப் போன்று செல்லத்தில் வளரும் பெண்.

ஆனல் வாழ்க்கையின் போக்கு வேறு விதமாக இருந்தது. அதை விதி என்று சொல்வதா? சூழ்நிலை என்று சொல் வதா? கலை வாழ்வில் பற்றுக் கொண்ட வர்களுக்கு அடிக்கடி ஏற்படும் சோதனை என்று சொல்வதா?

எப்படிச் சொன்னல் என்ன? காலம் யாருக்காகவும் காத்திருக்கவில்லை.

தணிகாசலத்தின் வாழ்க்கையின் மறு பகுதி உமாவைப் பற்றிச் சுழலப் போகிறது என்பதோ, அவனுடைய லட்சியக் கனவில் அவள் பங்குகொள்ளத் துடித்தாள் என்பதோ, மற்ற எந்தப் பெண்ணும் வாழாத ஒரு கற்பனை வாழ்க் கையை அவள் மேற்கொள்ள விழைந் தாள் என்பதோ அவனுக்கே கூடக் குற்றாலத்தில் அவன் இருக்கும் வரையில் தெரியாது. அவன் புரிந்து கொள்ள முடியாத ஒரு புதிர் என்பதை, விளங்கிக் கொள்ள முடியாத விந்தைப் பெண் என்பதை, விலகிக் கொள்ளவும்-விலக்கி விடவும் முடியாத அன்புத்தளை என்ப தையும் அவன் கண்டு கொள்வதற்குப் பல ஆண்டுகள் சென்றன.

தணிகாசலம் அதுவரையில் வாழ்க் கையைத் தன் பக்கத்துக்கு வளைக்கப் பார்த்தான்; வாழ்க்கை அவனைத் தன் பக்கத்துக்கு வளைத்து நொறுக்கப் பார்த் தது. இந்த ஓயாத போராட்டத்தின் நிழல்களாகவே அவனது வாழ்க்கை நாளின் மறு ஏடு புரண்டது. (தொடரும்)




**காந்தன்**

**ப**லாப்பழம் நன்றாய்ப் பழுத்து நறுமணம் வீசுகிறது; மரத்திலிருந்து நழுவி விழுகிறது. அதை யெடுத்து, பருமனான அதன் தோலை நீக்கி, பிசின் ஒட்டாமல் இருக்கக் கையில் எண்ணெய் தடவிக் கொண்டு பிசினை அகற்றிப் பிறகு சடைகளைக் களைந்து உள்ளேயிருக்கும் சுவையுள்ள சுளைகளைக் கண்டதும் நம் நாவில் நீர் சுரக்கிறது. ஆனால் அவ்வளவு சிரமப் பட்டும் பலாப் பழத்தினுள்ளே சுளைகளே இல்லாமற் போனால் நம் மனம் என்ன பாடு படுமோ, அத்தகைய உணர்ச்சி தான் "மகாதேவி" படத்தைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்டது.

இந்தப் படத்தில் கத்திச் சண்டையிருக்கிறது; காதல் இருக்கிறது; காதலின் பலனாகக் கடிமணம் இருக்கிறது - ஒன்றுக்கு இரண்டாகவே இருக்கிறது. கற்பின் பெருமையிருக்கிறது. ஏராளமாகக் கண்ணீர் இருக்கிறது. சோகம் இருக்கிறது; மோகம் இருக்கிறது. கோபம் இருக்கிறது; கொடுமை இருக்கிறது. சிறைச் சாலை இருக்கிறது; அழகு அழகான வசனங்கள் இருக்கின்றன. நல்ல நடிகர்கள் இருக்கிறார்கள்; அருமையான பாடல்கள் இருக்கின்றன. கோட்டை கொத்தளங்களும், குதிரை சவாரியும் இருக்கின்றன. ஆனால் நல்ல டைரக்ஷன் இல்லை. என்னத்தைச் செய்ய? அதன் காரணமாக எம். ஜி. ராமச்சந்திரனுக்காகவே படம் பார்க்க வந்தவர்கள்கூட முடிவில் சலிப்புடன் வீடு திரும்பியதை நான் பார்த்தேன்.

என்னுடைய நண்பர் ஒருவர் ஒரு வீட்டில் வெகு காலமாகக் குடியிருந்தார்; அந்த வீட்டைப் பற்றி அடிக்கடி குறை கூறி வந்தார். வேறு நல்ல வீடாகப் பார்த்துக் கொண்டு குடிபுகப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தார். என்னிடமும் அவர் வீடு பார்க்கச் சொல்லியிருந்தாராதலால், நான் அவ்வப்போது கிடைத்த வீட்டு விலாசங்களை அவருக்குத் தெரிவித்து வந்தேன். ஆனால் அவர் அவ்வீட்டை விட்டு நகருகிற வழியாயில்லை.

"ஏன், ஸார்! சில மாதங்களுக்கு முன்பு மிகவும் தீவிரமாக வீடு தேடினீர்கள்; இப்பொழுது வீடு தேவையில்லையா?" என்று ஒரு நாள் அவரைக் கேட்டேன்.

"இல்லை, ஸார்! என் பெயரும் விலாசமும் அச்சடித்த 'லெட்டர் பேப்ப'ருக்கு முன்பு ஆர்டர் கொடுத்திருந்தேன். அது ஐந்நூறு அச்சாகி வந்துவிட்டது. அவைகள் செலவாகிற வரையில் இந்த வீட்டில்தான் இருந்தாக வேண்டும்!" என்றார் என் நண்பர்.

விலாசமிட்ட லெட்டர்பேப்பருக்காக என் நண்பர் தமக்கு ஏற்படுத்திக் கொண்டிருக்கும் நிர்ப்பந்தம் அப்பொழுது எனக்கு விநோதமாகப் பட்டது. ஆனால் "மகாதேவி" படம் பார்த்ததும் அது மாறிவிட்டது.

ஒவ்வொரு நடிகரிடமுள்ள ஒரு திறமையை மனசில் வைத்துக் கொண்டு திரைக் கதையைத் தயார் செய்திருக்கிறார்கள்.

**ம**காதேவி ஒரு நாட்டு அரசிளங்குமரி. அவள் தந்தை இன்னொரு அரசனிடம் சிறைப் படுகிறார். வெற்றி பெற்ற அரசனின் தளபதிகளான வல்லபனும் கருணாகரனும் வாட் போரில் போட்டியிடுகின்றனர். வல்லபன் வெல்கிறான். மகாதேவியின் கரம் பற்றுகிறான். தோல்வியுற்ற கருணாகரனின் உள்ளத்தில் பொறாமைத் தீ பற்றி எரிகிறது; இளவரசனைப் பாம்பு கடிக்கச் செய்து அந்தப் பழியை மகாதேவியின் மேல் சுமத்தி அவளைச் சிறை



செய்கிறான்; அவனது பச்சிளம் குழந்தையைக் கூடக் கொல்லத் துணிகிறான். ஆனால் கருணாகரனின் மனைவி மங்கம்மா தன் குழந்தையைத் தியாகம் செய்து மகாதேவியின் குழந்தையைக் காப்பாற்றுகிறாள். கடைசிக் காலத்தில் கருணாகரன் தன் குற்றங்களுக்காக வருந்தித் தற்கொலை புரிந்து கொள்கிறான்.

படம் 'இடைவேளை' வரையில் ஒன்றிலும் பிடிப்பில்லாமல் செல்லுகிறது!

தளபதி வல்லபனாக எம்.ஜி. ராமச்சந்திரன் திறமையுடன் நடிக்கிறார். கத்திச் சண்டை போடவும், காதலிக்கவும், எதிரிகளைத் துரத்தவும், பாம்புக் கடியினால் இறந்த இளவரசனை உயிர்ப்பிக்கவும், கண்களை இழந்ததுபோல் தவிக்கவும், இழந்த பார்வையைப் பெறவும் சந்தர்ப்பங்கள் வாய்க்கின்றன. சிறு வயதில், நாடகக் கம்பெனியில் நடித்துக்கொண்டிருந்த காலத்திலிருந்தே எம். ஜி. ராமச்சந்திரன் பலவிதமான வேஷங்கள் போடுவதில் சதுரர். இப்பொழுது இந்தப் படத்தில் பிச்சைக்காரனாக வந்து தாயத்து விற்கும்போது அவர் வேஷம் பிரமாதமாகப் பலித்திருக்கிறது. அப்பொழுது அவர் பாடும் பாட்டும் சௌந்திரராஜன் குரலில் நன்கு ஒலிக்கிறது.

எம். ஜி. ராமச்சந்திரன் என்ற பெயரை வெள்ளித் திரையில் பார்த்ததுமே கரகோஷ ஆரவாரம் செய்யும் அன்பர்கள் கூட்டம் இருக்கிறவரையில் அவர் தம் வெற்றியைப் பற்றிச் சிறிதும் யோசிக்க வேண்டியதில்லை!

நல்லவர்களுக்கு ஓயாமல் துன்பம் விளைவித்தால்தான் படத்தில் உருக்கம் ஏற்படும் என்று சில படாதிபதிகள் நினைக்கிறார்கள்.

கருணாகரன் கொடுமையின் உருவமாகச் சித்திரிக்கப் படுகிறான். மகாதேவியைக் கொடுமைப் படுத்துவதைத் தவிர அவனுக்கு வேறு வேலையேயில்லை! அது அளவுக்கு மிஞ்சிப் படம் பார்ப்பவர்கள் அலுத்துக் கொள்ளும் வரையில் போய் விடுகிறது. 17,461 அடி நீளம் படம் இருக்க வேண்டும் என்பதற்காக இத்தனை அழும்புகளையும் ஒரு வில்லன் செய்யத்தான் வேண்டுமா? அவைகளை நாம் பொறுத்துக் கொண்டிருக்கத்தான் வேண்டுமா? ஒழிக இந்தக் கொடுமை!

''மகாதேவி''யில் சந்திரபாபு—கருணாநிதி தமாஷ் கதை (ஆபாசக் கதை) விட்டு விட்டுத் தொடர்கிறது. கதை மோசமானது என்றாலும் அதில் ஜின்ஜினியாக நடிக்கும் பி. சுசீலாவுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது.

சந்திரபாபு ஒரு சிறந்த நடிகர். நடிப்புக் கலை அவருடன் பிறந்து வளர்கிறது. ''புதையல்'' படம் எப்படி யெல்லாமோ இருந்தது. ஆனால் அதில் நடித்த சந்திரபாபுவின் காதல் சேஷ்டைகளை என்னால் மறக்கவே முடியவில்லை. நடிப்பில் மட்டும் அல்லாமல், பாட்டையும் சொந்தக் குரலிலேயே பாடி நடிப்பின் சிகரத்தையே எட்டிப் பிடித்து விடுகிறார்.

''மகாதேவி''யாக நடிக்கும் சாவித்திரி நன்றாய் நடித்திருக்கிறார். அவருக்குக் கண் கலங்குவதும், காதலிப்பதும், தீமையைக் கண்டு சீறிப் பாய்வதும் புதியவை அல்ல.

பி. எஸ். வீரப்பா கருணாகரன் பாகத்தை ஏற்று நன்றாய் நடித்திருக்கிறார்.

மங்கம்மா ஆரம்பத்தில் அனாவசியமான பாத்திரமாகத் தோன்றினாள். கல்யாண காலங்களில் உபயோகமாக இருக்குமென்று சில குடும்பங்களில் பெரிய பாத்திரங்களாக வாங்கி வைத்திருப்பார்கள். அதுமாதிரி மங்கம்மா பாத்திரமும் முதலில் பயன்படாவிட்டாலும், பட முடிவில் ரொம்ப ரொம்ப உபயோகப்படுகிறது. முடியுமா என்றிருந்த திரைக் கதையை முடித்துவைக்க மங்கம்மா மட்டும் இல்லை யென்றால் நம் கதி......!

மங்கம்மாவாக எம். என். ராஜம் நடிக்கிறார். சிறைச்சாலையில் அவர் கதறும் கட்டம் மிகவும் அதிகம்; சிறையில் பாட்டுப் பாடி, கதை சொல்லும் அளவுக்கு, சோறு கொண்டு வருபவனுக்கு அவகாசம் கிடைக்குமா என்ற சந்தேகம் எல்லோரையும் போல் எனக்கும் தோன்றியது.

சிறையில் மங்கம்மாவின் பாட்டு நீளமாக இருந்தாலும் நன்றா யிருக்கிறது. ''மானம் ஒன்றே பெரிதெனக் கொண்டு வாழ்வது தமது சமுதாயம்......'' என்று தொடங்கும் அந்தப் பாட்டு டி. எஸ். பகவதியின் குரலில் உருக்கமாக வெளியாகிறது.

இளவரசனாக நடிக்கும் மாஸ்டர் முரளி மிகவும் நன்றாய் நடித்திருக்கிறான்.

''மகாதேவி'' பொறுமையைச் சோதிக்கும் மகத்தான படம்!

# பற்களைச் சுத்தம் செய்ய உங்கள் டூத்பிரஷ் மிகவும் முக்கியமானது

## டெக்

உபயோகியுங்கள்

—டூத்பிரஷில்

சிறந்தது!



- பிரத்யேகமாக அமைப்பெற்ற தலைப்பாகம்
- நீடித்து உழைக்கும் நைலான் முடிகள்
- உங்கள் பிடிக்கு அடக்கமான பிளாஸ்டிக் கைப்பிடி

சிறந்த டூத்பிரஷ் வேண்டுமென்றால், வாங்குங்கள்!

# டெக்

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் (கிரேட் பிரிட்டன்) லிமிடெட்

# சத்தியம்

காரிலிருந்து இறங்கிக் கதவை மூடுவதற்குள், ஒளிந்திருந்த தேள் ஓடி வந்தா கடிக்க வேண்டும், அப்பா உருவத்தில்! பல்லைக் கடித்துக் கொண்டு வாசற்படியில் ஏறி, முன் கூடத்தையும் அனாயாசமாகக் கடந்துவிடத் தான் நினைத்தான் கன்னியப்பன்.

"ராவு பகலுங்கற சொரணை இல்லாமலே எந்த பிஸினஸைப் புரட்டிவிட்டு வாரே?"

கன்னியப்பனின் பூட்ஸ் கால்கள் மேலே செல்ல மறுத்தன. அப்பா பூஜை அறையில் ஜெபமாலையைப் பிடித்துக் கொண்டு தூங்கியவாறு இருப்பார். ஓசைப்படாத கரடியாய் மாடிக்கு ஓடிவிடலாம் என்று சாயங்காலம் ஓர் அசட்டுக் கற்பனை செய்து விரட்டியிரா விட்டால், வழக்கம்போல் பிளானைக் கொல்லை வழியாக வைத்துக் கொண்டிருக்கலாம். இப்பொழுது நேரடியாக வலைக்குள் வந்து விழுந்தாகி விட்டது!

"ஏண்டா பேசாமல் நிற்கிறே? எங்கே போனே?" ராவ் சாஹிப் அறம் வளர்த்தா பிள்ளை, மூக்கிலிருந்த கண்ணாடியைக் கழற்றிக் கையில் சுழற்றிக் கொண்டே அவன் பக்கம் வந்தபொழுது அவனுக்கு ஒன்று நிச்சயமாகத் தெரிந்தது: 'விஷயம் ஏனோதானோவென்று முடிந்துவிடாது' என்று......

"ராவ்பகதூர் ராகவன் பிள்ளை ரொம்ப நாட்களாகச் சிரமப்படுத்திக் கொண்டிருந்தான். மாட்டேன் என்றேன் ... ... விடாப் பிடியாய்......சினிமாவுக்கு......" கன்னியப்பனுக்கு வார்த்தைகள் உதவிக்கு வர மறுத்தன.

"ராவ்பகதூர் வீட்டுப் பிள்ளையோடே போனதாகச் சொன்னா சினிமா இந்திரலோகமாயிடுமா? யாரைக் கேட்டுப் போனே?"

"இது சின்ன விஷயம். அதுனாலே...."

"சின்ன விஷயம் இல்லை. பெரிய விஷயம்! என் கண் முன் நீ தோன்றினபடி நடந்து கொள்ளக் கூடாது."

கன்னியப்பனுக்கு அவர் கோபத்தில் அர்த்தம் இருப்பதாகத் தோன்றவில்லை. அவனுக்கும் கோபம் அப்பாவைப்போல் பொத்து வந்தது. "பெரிய விஷயம்தானே? அப்போது சந்தோஷப்படுங்க. எனக்கு ஒரு டீ பார்ட்டி வேண்டுமானாலும் வையுங்க. எனக்குக் கோபம் வருகிறதா பாருங்க."

கன்னியப்பனின் பூட்ஸ் கால்கள் அறம் வளர்த்தா பிள்ளையின் மனத்தில் உறைத்தனவா! நாகரிகம் சொடுக்கிய சாட்டை பழைமையில் 'தரீக்' என்று பட்டபோது அதன் ஆற்றாமையால் ஆத்திரம் சீறியது. "நீ எங்கே போனே என்று கேட்டது தப்புத் தான். காரை ஏன் எடுத்துப் போனே?"



# பிழைத்தது

"நல்லா இருக்கப்பா நீங்க கேட்கிறது? ஒரு ராவ்சாகிப்பின் பிள்ளை பஸ்ஸிலே போனால் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகிறது யாரு?"

வேறொரு சமயமாக இருந்திருந்தால், அந்தச் சமயத்தில் அவருக்குக் குஷியும் இருந்தால், 'பட்டம் கட்டிவிட்ட வெள்ளைக்காரன் தான்' என்று சொல்லியிருப்பார். இப்போது தலைக்கு மேலே பிள்ளையாண்டான் வெள்ளமாக ஓடுகிறான். பிள்ளைவாள் எல்லைமீறிக் கிறீச்சிட்டார். "பரம்பரையாகக் கார் ஏறின வம்சம். இப்போ மதிப்புக் குறைஞ்சு போய் விடும். போடா, பிச்சைக்காரப் பயல் மகனே!" என்று கத்தினார்.

பெரிய மனிதர்கள் வீட்டுப்பிள்ளைகள் பாதி ஜாமத்தில் கையும் களவுமாகப் பிடிபடும் போது தலையைக் குனிந்து கொள்வதன் மூலம் ஓடி வருகிற பிரளயத்தை உள்ளுக் குள்வாங்கி விடுகிறார்கள். அதே காரியத்தைக் கன்னியப்பனும் செய்திருக்கலாம். ஆனால் அவன் செய்யவில்லை. அவன் வீரத் தமிழன். சமர் வந்த காலத்தில் சலிப்பது கோழைத்தனம் என்று மேடைகள் முழங்குவதை அவன் கேட்டிருக்கிறான். அப்போது அவன் அவரை எதிர்த்துப் பார்த்தான்.

"போடா வெளியிலே!"

"நான் ஏன் போகணும்? இந்த வீட்டிலே உங்களுக்கு இருக்கிற உரிமை எனக்கும் இருக்கிறது. தெரியுமா!"

"எந்தக் காட்டிலோ பிறந்த பயலுக்கு இந்த வீட்டிலே என்ன உரிமை இருக்கிறது? உதிரத்திலே ஒட்டின பிள்ளையாக இருந்தால் இப்படித் தாக்கி எறிந்து பேசுமா?"

"என்ன!" கன்னியப்பன் அலறினான். அந்த அலறல் அவனை முழுதுமாக மூடிவிட்டது. இருபது வருஷங்களாக அவனுக்குப் போட்டிருந்த மூடி கழற்றி எறியப்பட்ட பின்பு, வேறொரு மூடி இயல்பாகப் போய் அவனை மறைக்க ஓடுகிறது. அந்த இரண்டு நிகழ்ச்சிகளின் அலைகளில் தத்தளித்து, நுரையில் வெடித்து, ஆழத்தில் குளித்து, கரையில் ஒதுங்கி மீண்டும் வந்த இடத்துக்கே திரும்பி அலையாய், நுரையாய், ஆழமாய், கன்னியப்பன் ஒரு முறை உதறிக் கொள்ள அசைந்தான். ஆனால் உடல் அசையவில்லை. உடல் அனைத்தும் நெஞ்சக் குழியில் விழுந்து ஓலமிட்டது. அறம் வளர்த்தா பிள்ளை உணர்ச்சியின் உயர்ந்த கிளையில் வெறியுடன் ஆடுகிறாரா? அவர் கண்ணுக்குப் பூமியில்லை. பூமியில் இருக்கிற உயிர் எழுச்சிகள் இல்லை. ஈர நெஞ்சத்தின் சிறு காம்புகூட இல்லை. கன்னியப்பனை முறைத்துப் பார்த்தார். அவனும் எதிர்த்து முறைக்காமல் வெடித்துத் தீர்ந்த வாணத்தைப் போலப் பேசாமல் போனது அவர் செய்கையைக் கேலி செய்வது போல் இருந்தது.

"அப்பா!"

"அப்படி இனிக் கூப்பிடாதே!"

"போய் வருகிறேன்."

"வராதே. போ!"

கன்னியப்பன் சற்று நேரத்துக்கு முன்பு நிமிர்ந்த தலையோடு வந்தான். இப்பொழுது குனிந்த தலையோடு போகிறான்.

அறம் வளர்த்தா பிள்ளைக்கு இன்னும் ஆசுவாசம் ஏற்படவில்லை. உணர்ச்சிக் கிளையும் முறிந்து விழவில்லை. கொஞ்சம் சொல்ல வேண்டியதையும் சொல்லாமல் விட்டுவிட மனம் இல்லை. "ஊர்ப் பயல்களுக்கெல்லாம் செலவழிக்க வேண்டும் என்று இருந்திருக்கு. எல்லாம் பூர்வ ஜன்மத்துக் கடன்."

கன்னியப்பன் திரும்பினான். சொன்னான்: "நீங்கள் செலவழித்த பணத்தை எப்படியோ கொடுத்து விடுகிறேன். அதுவரையில் உங்கள் முகத்திலே விழிக்க மாட்டேன். இது சத்தியம்" என்று சொல்லி விட்டு நடந்தான். வெளியே இருள் நீட்டிப் படுத்திருந்தது.



அங்கு ஒலித்த கடைசிப் பேச்சைப் பாதித் தூக்கத்தில் கேட்டுப் பதறி ஓடி வந்த வள்ளியம்மா, ''கன்னியப்பா! கன்னியப்பா!'' என்று பதறினாள்.

பிள்ளைவாள் அவளைத் தடுத்து நிறுத்தினார். வள்ளியம்மாள் தலையில் அடித்துக் கொண்டு கதறியழுதாள்.

''கழுதைக்குப் போக்கிடம் எங்கே? திரும்பி வந்து விடும்'' என்று முனகினார் பிள்ளை.

★

மறுநாள். அந்தி விழுந்து இருள் விழுந்தது. 'வள்ளி விலா'வில் சோகத் திரை ஒன்று நீண்டு இருளுக்குப் போர்வையாக அமைந்தது. ஆறு மணியானதும் ஒளிவெள்ளம் புரண்டோடும் அந்தப் பங்களாவில் இருளைப் பிரிக்க எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ளப் படவில்லை. பூஜை அறையிலிருந்து நறுமணம் கமழ்ந்து வரும் ஊதுபத்தியின் கங்கு காலிக் கிடந்தது. தேவாரமும் திருவாசகம் மிழற்றும் பக்திக் கிளியின் குரல் தேய்ந்து ஓய்ந்தது.

இத்தனைக்கும் மூல புருஷரான அறம் வளர்த்தா பிள்ளை, சாய்வு நாற்காலியில் உடலைச் சரித்துக்கொண்டு, பாரமாகக் கனத்த தலையை அழுத்தி விட்டவாறு இருந்தார். எண்ணி எண்ணித் தொலையாத நினைவு அலைகள் அவர் மனத்தைக் குடைந்து ஆழமாக்கி விட்டிருந்தன.

ஏதோ எண்ணியவராய், நீண்ட நேரம் அசைவற்றுக் கிடந்த உடலைப் புரட்டி எழுந்தார். சமையற்கட்டை நோக்கி விரைந்தார். அங்கே வள்ளியம்மாள் உடம்பைச் சுருட்டிக் கொண்டு படுத்திருந்தாள். பிள்ளை குனிந்தார். அவள் முகத்தைப் பார்த்தார். அவள் கன்னத்தில் கண்ணீர் காய்ந்து கம்பி இழுத்திருந்தது. அவள் மூடியிருந்த இமைகளில் ஏது தூசியாகப் புகுந்து. நீர் ஊற்றுக் கொண்டிருந்தது?

பிள்ளையின் கண்களும் கசிந்தன. உதடுகள் குழைந்தன. ''வள்ளி'' என்றார் அவர் நடுக்கத்தோடு.

வள்ளியம்மாள் பசக்கென்று எழுந்தாள். ''கன்னியப்பன் வந்து விட்டானா?'' என்று ஆவலுடன் கேட்டாள்.

''ஊஹூம்!''

''அவன் வரமாட்டான். ஏன் உங்கள் வீட்டுக்கு வருகிறான்? இருபது வருஷங்களாக வளர்த்த கொடியை ஒரே நொடியிலே வெட்டி வீழ்த்திட்டீங்க'' என்று வள்ளியம்மாள் சொல்லி விட்டு முகத்தை மூடிக் கொண்டு கேவினாள்.

''அவன் கொஞ்சம் தாழ்ந்து போயிருந்தால் இத்தனை தூரத்துக்கு வருமா?'' அவருக்காகவோ அவனுக்காகவோ அவர் வருந்தினார்.

''நீங்களே தாழ்ந்து போகவில்லை. அவன் சின்னப் பிள்ளை. என்ன கண்டான்? பிறந்த மகன்னு பெருமை காட்டினான். அதை அருமை குலைய அடிச்சிட்டீங்க.''

பிள்ளைவாள் குழைந்த மனத்தோடு இருந்தார். மனம் செய்த காரியத்துக்காக அழுதது. வள்ளியம்மாள் இரண்டு அறை கொடுத்தால்தான் தாம் செய்த கொடுமைக்குப் பிராயச்சித்தம் கிடைக்கும் போல் இருந்தது. அடிக்கச் சொல்ல முடியவில்லை. அவரையே அவர் அடித்துக் கொண்டு உள்ளுக்குள் கதறினார்.

''பெற்றவங்க முகம் தெரியாத பருவத்திலே அவனைக் கொண்டு வந்து வளர்த்தோம். அவனுக்கும், ஊருக்கும் 'பெற்ற பிள்ளை'ன்னு சொல்லி நம்ப வைத்தோம். பிள்ளைக் கலி தீர்க்க வந்த பெருமான் நம்ம வீட்டுக்கு வந்தவுடனே, நாம் கோபுரமாக வளர்ந்தோம். 'அவன் வந்த வேளை'யின்னு நீங்களே சொல்லுவீங்க. கடைசியிலே 'ஊரார் வீட்டுப் பிள்ளை'ன்னு சொல்லி, இருபது வருஷமா மறைத்து வைத்திருந்த உண்மையை உடைத்து, அவனை வெளியிலே துரத்திட்டீங்க. இப்போது உங்களுக்குச் சந்தோஷம்தானே? நீங்களே உங்க சொத்தைக் கட்டிக் கொண்டு அழுங்க. வள்ளியம்மாள் நெருப்புப் பொறி போல அவர் இதயத்தைச் சுட்டாள்.

பிள்ளை விம்மினார். ஆண்மைக் கரை உடைந்து அழுகை வெள்ளம் புரண்டு வந்தது.

''இப்பொழுது அழுது என்ன பிரயோசனம்? அவன் மானி. அவனுக்குச் செலவழிச்சப் பணத்தைக் கேட்டீங்களல்லவா? அதை எப்படியாவது அனுப்புவான். முடிந்து வைத்துக் கொள்ள மஞ்சள் துணியைத் தயாராக்குங்க. அதோடு எனக்குக் கடைசியாகப் போட ஒரு கெஜத்திலே கோடித் துணியும் எடுத்திடுங்க; அவன் இல்லாத வீடு இனிமேல் எனக்குச் சுடுகாடுதான்.'' ஆவேசம் வந்தவளாகக் கத்தினாள் வள்ளியம்மாள்.

அறம் வளர்த்தா பிள்ளை 'ஓ'வென்று அலறி யழுதார்.

★

ஒரு வாரம், ஒரு மாதம், ஒரு வருஷமும் போயிற்று.

இன்று நடந்தது நாளை இல்லை என்ற ரீதியில் ஒன்று போய் ஒன்று வந்து. இப்படி உருண்டோடிக் கொண்டிருந்த காலச் சுழலில், 'வள்ளி விலாஸ்' பங்களாச் சுவரிலிருந்த வெள்ளைகூட உதிர்ந்து போய் விட்டது. ஆனால் அன்று வாய்க் கோளாறால் கொடுமையை விதைத்து விட்ட நிகழ்ச்சி மட்டும் இன்னும் கொஞ்சமும் மாறவில்லை.



# எச்சரிக்கை!

## உங்கள் குழந்தையின்

# ஜலதோஷம்

## அபாயகரமாகக் கூடும்!

வியாதி ஆரம்பிக்கு முன்னரே,
அவன் சளித்தொந்திரவுகளை இந்த நல்ல,
சக்திவாய்ந்த ஆயின்மென்டால் ஒழியுங்கள்!

2 விதங்களில் ஜலதோஷத்திலிருந்து
நிம்மதி தருகிறது.





**1**
மூக்கின் வழியாக வேலை செய்கிறது.

உங்கள் குழந்தை விக்ஸ் வேபோரப்பின் சக்தி வாய்ந்த ஔஷத ஆவிகளை சுவாசிப்பதால், அவன் மூக்கிலும், தொண்டையிலும் உள்ள சளி உபாதை அகல்கிறது.



**2**
சருமத்தின் வழியாக வேலை செய்கிறது.

வேபோரப்பின் சுகம் தரும் உஷ்ணம் சருமத் தினூடே சென்று உங்கள் குழந்தையின் மார் கபத்தை உடைத்தெறிகிறது.

# விக்ஸ்
வேபோரப்

மார்பிலும், முதுகிலும்,
தொண்டையிலும் தேய்த்தாலே போதும்!




325 A TM

---



பித்தளை மற்றும் தாமிர சாமான்களை பாலிஷ் செய்ய பிராஸோவிற்கு நிகர் ஒன்றுமில்லை. பிராஸோ சுத்தம் செய்வதுடன் பளபளப்பாகவும் செய்கிறது — அதுவும் விரைவாக, எளிதாக, மிருதுவாக.

## "பிராஸோ கொண்டு பாலிஷ் செய்வதற்கு முன்னால், பித்தளை இவ்வளவு பளபளப்பாக இருக்கும் என்று எனக்குத் தெரியாது"






திரவம் அல்லது பசை

# பிராஸோ

மெட்டல் பாலிஷ்

உங்கள் வீட்டிற்குப் பிரகாசத்தைக்
கொண்டுவருகிறது

அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப் பெற்றது)

# போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உபயோகிக்கும் லட்சோபலட்சம் மக்களுடன் நீங்களும் சேரவேண்டும் என்பதற்கான முக்கிய காரணங்கள்

**1 உங்கள் ஈறுகள் :** ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து போர்ஹான்ஸ் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும். ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணுள்ளதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாக தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப் படுத்திய பல் நோய்களிலிருந்து பாதுகாப்பு அளிக்கும் விசேஷ துவர்ப்புப் பொருள்கள் சேர்ந்துள்ளன.

**2 உங்கள் ஆரோக்கியம் :** ஈறு சம்பந்தமான நோய்கள், உங்கள் ஆரோக்கியத்தைக் குலைக்கும் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். ஈறுகளில் சீழ்வடிய ஆரம்பித்தால் அது ரத்தவோட்டத்தில் கலந்து அதை கெடுத்துவிடும். ஆகவே வீண் அவதிக்குள்ளாகாதீர்கள். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உபயோகித்து இந்த கொடிய நோய்கள் உங்கள் ஈறுகளை அண்டவிடாமலும், மற்றும் உங்கள் ஆரோக்கியத்திற்குப் பாதுகாப்பு தேடிக் கொள்ளுங்கள்.

**3 வாய்க்கு நறுமணம் :** வாயின் துர்நாற்றத்திலும் நண்பர்களின் அருவருப்பிற்கு ஆளாகாதீர்கள். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் வாய் நாற்றத்தை அகற்றி உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய்க்கு நறுமணமூட்ட, உங்கள் நாக்கும், மேல்வாயும், சுத்தமாக இருக்கவேண்டும் என்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின்மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் தடவி, ஒரு டூத்பிரஷ் அல்லது விரலினால் மிருதுவாய் குழப்பவும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உணவுத்துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.

**4 உங்கள் நகையழகு :** வனப்பையும் ஆரோக்கியத்துடனும் விளங்கும் பிரகாசமான வெண்ணிற பற்களின் வரிசை ஒரு தனி மதிப்பைக் குறிக்கும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உங்கள் பற்களை வனப்புடனும், ஆரோக்கியத்துடனும் வைக்கும். ஏனெனில் அதில் கிருமிகளை அழிக்கவும், பல் சொத்தையை அகற்றவும் செய்யும் விசேஷ சேர்க்கைப் பொருள் அடங்கியுள்ளது. போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் பற்களின் எனாமல் சிதைய விடாமல், பற்களை, அவைகளின் இயற்கை நிலையில் வைப்பதுபோல், சுத்திகரிக்கும் குணம்வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்டாகும்.

**போர்ஹான்ஸ்**
**டூத்பேஸ்ட்**



ஒரு பல் வைத்தியரால் தயாரிக்கப்பட்டது

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

H-112



கன்னியப்பன் போனவன்தான்; பிறகு திரும்பவில்லை.

வள்ளியம்மாள் தொடங்கிய அழுகைதான்; ஓயவில்லை.

பின்னைக்கு வெளியுலகத் தொடர்பில் ஏனோ ஒரு வெறுப்பு; கூடத்தை அடுத்த சுவாமி அறையில் அல்லும் பகலும் திருவாசகமும் கையுமாக இருப்பார். அன்று திக்திக்கும் திருவாசகத்தில் அவர் மனம் வாயூறி நிற்கவில்லை. மனம் தியானவெளியை விட்டுக் கலைந்து சுற்றியது. திருவாசகத்தை மூடினார். ஈஸிசேரில் வந்து அமர்ந்தார். மனம் வயிக்கா விட்டாலும் பழக்கத்தால் திருவாசகத்தில் ஓர் அடி அவர் வாயைக் கிளறியது.

" நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே "

'ஒரு நிலை போய்விட்ட மாணிக்கவாசகர் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கலாம்; எல்லா ஆசாபாசங்களையும் மனத்தில் வைத்துக் கொண்டிருப்பவன் எங்கோ இருக்கும் ஓர் அதீத சக்தியை நம்பிக் கொண்டிருக்க முடியுமா?' அறம் வளர்த்தா பிள்ளை விரக்தியுடன் சிரித்தார். ஒரு வருஷத்துக்கு முன்பு கால் அங்குல விளம்பரத்தின் மூலம், வளர்த்த மகனை மீட்டுக் கொண்டு விடலாம் என்று நினைத்தார். முடிந்ததா?

முடியாத நிலையில்தான் அவருக்கு ஜீவன் அழுக்குத் துணியைப் போலப் பிசுபிசுத்தது. அந்த அழுக்கைப் போக்கும் உபாயம் பங்களாவிலோ பணத்திலோ இல்லை. ஆதி பரம் பொருள் என்ற அரிய பெரிய கருணை வெள்ளத்திலே ஜீவனை அலசும்போது பிறப்பில் சேர்கிற அழுக்குக் கறையைப் போல ஓர் உணர்வு ஒளிர்ந்தது. பரம்பொருளில் கலந்து விடத்தான் ஓடுகிறார். பாசம், பந்தம் இரு கரணைச் சுருள்களாகக் காலில் விழுந்து அவரை, பிரித்து சென்ற அழுக்குக் குழிக்கே மீண்டும் வந்து சேர்த்து விடுகிறது:

அவர் மனம் என்னவோ பற்றற்ற நிலையில் இருக்கத்தான் விரும்புகிறது. ஆனால் பற்று அவரை விடவில்லையே! உறுதியாகப் பற்றிக் கொண்டிருக்கிறதே! அதை எப்படி உதற முடியும்?

'முருகா' என்று மனம் கசிந்து அழைத்தால்; ஆறுமுகமும், பன்னிரு கையுமாக அல்லவா அவன் வரவேண்டும்? பால முருகனாக வருகிறான், அதுவும் கன்னியப்பன் போல சூட்டும் கோட்டுமாக. இப்பொழுதும் பூஜை அறையினுள் புகுந்து அவரை வெளியே தள்ளிக் கொண்டு வந்தது கன்னியப்பனின் நினைவுதான்.

'முருகா' என்று கூறி எழுந்தார். அலமாரியண்டை சென்றார். திறந்தார். சற்றுப் பழுப்பேறிய பழைய செய்தித் தாளொன்றை எடுத்தார். அதிலேயா முருகன் இருக்கிறான்? அல்லது கன்னியப்பன் இருக்கிறானா? இல்லை என்பது அவருக்கும் தெரியும். ஆனால் கன்னியப்பனைக் கொண்டு வந்து சேர்க்க அவர் கொடுத்திருந்த விளம்பரம் அதிலே இருந்தது.

கண்மணியே கன்னியப்பா!

நான்தான் தவறு செய்தேன். மன்னித்து விடு. என்னோடு உன் அன்னையும் கலங்கி நிற்கிறாள். கண்ணீரைத் துடைக்க உடனே வா.
—அறம் வளர்த்தான்.

அறம் வளர்த்தா பிள்ளை செய்தித் தாளை மடித்தார். "அவமானம் தாங்காமல் ஆறு, குளங்களில் விழுந்திருப்பானோ?" பிள்ளை நினைவின் சூட்டால் நெஞ்சை அழுத்தி விட்டுக் கொண்டார்.

"ஐயா!"

சிலிர்ப்புடன் திரும்பிப் பார்த்தார் பிள்ளை.

வேலைக்காரன் அவர் கரத்தில் தபாலில் வந்த கவரைக் கொடுத்து விட்டுப் போனான். சுவாரஸ்யம் இல்லாமல் கவரை உடைத்துக் கடிதத்தை எடுத்துப் படித்தார். எங்கிருந்தோ தடைபட்டுப் போயிருந்த சுவாரஸ்யம் கடித வரிகளிலே மிதந்தது.

"அப்பா அவர்கள் பாதார விந்தங்களுக்கு, கன்னியப்பன் வணக்கத்துடன் எழுதிக் கொண்டது. தாங்கள் பத்திரிகைகளில் கொடுத்திருந்த விளம்பரத்தை, நேற்றுத்தான் அதிர்ஷ்டவசமாகப் பார்க்கும் சந்தர்ப்பம் இருந்தது.

" நீங்கள் தவறு செய்ததாகப் பலரும் அறியும் வண்ணம் பத்திரிகையில் பிரஸ்தாபித்துக் கொண்டது சரியா? தவறு யாரிடத்தில் இருந்தாலும் சிறுவனிடத்தில் நீங்கள் மன்னிப்புக் கேட்டுக் கொண்டது சரியல்ல.

" அன்று நிகழ்ந்த சம்பவம் என்னை மனிதனாக்கி விட்டிருக்கிறது. 'எப்படியோ வாழ்ந்தால் போதும்' என்ற சோம்பேறித்தனமான செய்கையிலிருந்து நான் விடுபட, உங்கள் நிராகரிப்பு உதவி செய்தது. எனக்கு நீங்கள் தந்தையல்ல என்று கூறினீர்கள். என்றாலும் என்னுள் கவிந்திருந்த அறியாமையைப் போக்கும் நல்ல தந்தையாகவே நீங்கள் நடந்திருக்கிறீர்கள். இப்பொழுது நான் உலக அநுபவம் பெறும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது; உலகத்தைச் சுற்றி வருகிற வேலையில் நான் அமர்ந்திருப்பதால் இந்த அநுபவம் கிடைக்க வழி பிறக்கிறது. இத்தனை காலமும் பயிற்சி பெற்றேன். அடுத்த மாதம் முதல் சம்பளம் போடப் போவதாகச் சொல்கிறார்கள். ஆகவே

நான்பட்டிருக்கும் கடனில் சிறு சிறு தொகையாக மாதா மாதம் அனுப்புகிறேன். என் உத்தியோக விவரத்தைப் பின்பு தெரிவிக்கிறேன். நான் வரும்பொழுது உங்கள் கடனை அடைக்காமல் உங்களைப் பார்ப்பதில்லை என்று சொல்லி வந்தேன். அம்மாவின் கண்ணீர் என் சொல்லை மீற வைக்கிறது. அடுத்த வாரம் திங்கட்கிழமை விமானத்தில் சென்னைக்கு வந்து, அன்றே ரயிலில் புறப்பட்டுச் செவ்வாய்க்கிழமை ஊர் வந்து சேருகிறேன் - கன்னியப்பன்.''

கடிதம் உவகையாகப் பிள்ளையின் நெஞ்சில் ஊற்றெடுத்தது. ''வள்ளியம்மா! தம்பி வருகிறான்'' என்று குதித்தார்.

செவ்வாய்க்கிழமை. ராவ்பகதூர் அறம் வளர்த்தா பிள்ளை ஒரு வருஷத்துக்கு முன்பு கழற்றி எறிந்த கோட்டை அணிந்துகொண்டு, குறுக்கும் நெடுக்குமாக நடை போட்டுக் கொண்டிருந்தார். ரயில் வர இரண்டு மணி நேரமிருந்தும் வள்ளியம்மாள் அவரை நச்சரித்துக் கொண்டிருந்தாள். கார் பெட்ரோல் போடச் சென்றிருந்தது. அதுவரையில் அவர் உள்ளம் வெடித்துவிடும் போல ஊறியது.

கார் வந்தது. ஏறப் போனார். அப்பொழுது தபால் ஒன்றை வேலைக்காரன் கொண்டு வந்து கொடுத்தான். படித்தார். ''ஐயோ, கன்னியப்பா'' என்று முகத்தில் அறைந்து கொண்டு கதறினார்.

விஷயம் புரியாமல் விழித்து நின்ற வள்ளியம்மாள், கவனிப்பாரற்றுப் பிள்ளையின் காலடியில் கிடந்த கடிதத்தை எடுத்துப் படித்தாள்:

''அன்புள்ள ஐயா! எங்கள் கம்பெனியில் 'ஜூனியர் பைலட்'டாக இருந்த உங்கள் மகன் கன்னியப்பன், எதிர்பாராமல் பசிபிக் பிராந்தியத்தில் நடந்த விமான விபத்தில் மாண்டு போனார் என்ற செய்தியை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். ஈடு செய்ய முடியாத இந்த இழப்புக்கு எங்கள் அனுதாபத் தொகையாக ரூபாய் பத்தாயிரத்துக்கான டிராப்டை இத்துடன் அனுப்பியிருக்கிறோம். — கிழக்கு ஆசியா விமான சர்வீஸ்.''

கடிதத்தை ஆத்திரத்துடன் கசக்கி எறிந்து விட்டு, வள்ளியம்மா ஓலமிடும் தன் கணவனைப் பார்த்தாள். ''கன்னியப்பன் சத்தியத்தைக் காப்பாற்றி விட்டான். உங்கள் கடன் தீர்ந்துவிட்டது. இனி பணத்தைக் கட்டிக்கொண்டு அழுங்க!'' என்று ஓலமிட்டாள். கண்ணீர் மட்டும் தீரவில்லை!

# அவன் வந்த வழி

அவன் ஏழை; மிக மிக ஏழை. அன்றாடம் வயிறு வளர்க்கப் பிறர் கையையே எதிர்பார்க்க வேண்டியிருந்தது. பிச்சைப் பிழைப்போ அவனுக்குப் பிடிக்கவில்லை. எனவே, நாள் முழுவதும் கூலி வேலை செய்வான். எத்தனைதான் முதுகு முறிய வேலை செய்தாலும், அரை வயிற்றுச் சோற்றுக்கே தாளம் போட வேண்டியிருந்தது. மனைவி மக்கள் படும் சிரமத்தையும் அவனால் காணச் சகிக்கவில்லை.

அவனுக்கு வாழ்வு கசந்தது. வாழ்வைக் கெடுத்த கடவுள் நினைவுக்கு வந்தார். யாருக்கும் கஷ்டகாலத்திலே கடவுள்தானே நினைவுக்கு வருவார்?

''பாழும் கடவுளே! உனக்கு ஈவு இரக்கம் கொஞ்சம் கூடக் கிடையாதா? உயிரைக் கொடுத்தாய்: பிறவியைக் கொடுத்தாய்; வாழ்வையும் கொடுத்தாய். உழைத்து உழைத்து ஓடாகிறேனே ஒழிய என்ன சுகத்தைக் கண்டேன்? என்னை நம்பியிருப்பவர்கள் தான் என்ன சுகத்தைக் கண்டார்கள்? ஏராள பணம் வேண்டாம், காசு வேண்டாம், உழைப்புக்குத் தகுந்த கூலியையாவது கொடுத்துத் தொலைக்கக் கூடாதா? உன் நெஞ்சு என்ன கல் நெஞ்சா? கருணையற்ற கடவுளே!'' என்று கடவுளை நொந்தான்.

கஷ்டம் அதிகரிக்க அதிகரிக்கக் கடவுளை நொந்து கொள்வதைத் தவிர அவனுக்கு வேறு வழி தோன்றவில்லை. கிராமத்தார்களும் அவன் கடவுள் நிந்தனையைக் கேட்டார்கள்.

உலகத்திலே குறையில்லாதவர்கள் யார்? அவரவருக்கும் ஏதாவது குறையிருக்கத்தானே செய்கிறது? அவன் பேச்சைக் கேட்டுக் கேட்டு அவர்களும் ஆண்டவனை நிந்திக்கத் தொடங்கி விட்டனர். கொட்டிக் கொட்டிக் குளவியாவது போல் கிராமமே தனக்கு எதிராகி விடவே, கடவுளுக்குக் காது புளித்துப் போய் விட்டது. மக்களின் நிந்தனைக்கு ஒரு முடிவு கட்டிவிட நினைத்தார்.

மறுநாள் காலை பார்த்தால் கிராமம் முழுவதுமே செல்வம் கொழித்ததாக மாறி விட்டது. வேலை கிடைக்காதவர்களுக்கு வேலை கிடைத்தது; கூலி கிடைக்காதவர்களுக்குக் கூலி கிடைத்தது. கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தவர்களின் கஷ்டம் தீர்ந்தது. அல்லல் பட்டுக் கொண்டிருந்தவர்களின் அல்லல், அவதிப்பட்டுக் கொண்டிருந்தவர்களின் அவதி எல்லாமே தீர்ந்து விட்டன.

காரணம், கிராமத்தில் ஒரு செம்புச் சுரங்கம் கிடைத்ததுதான்; செம்பு செம்பொன்னாக உரு மாறியதுதான்.

மக்கள் எல்லோருமே மகிழ்ச்சியுற்றனர். ஆண்டவன் நிம்மதியாக ஒரு நீண்ட மூச்சு விட்டான்.

ஆனால் அவன் மூச்சுவிட்டு முடிவதற்குள்ளாகவே மக்கள் மனம் மாறி, மகிழ்ச்சி குறைந்து கடவுளை நிந்திக்க ஆரம்பித்து விட்டனர்.

'' அட, பாழும் கடவுளே! எல்லோரையும் எதற்குப் பணக்காரர்களாக்கினாய்? இத்தனை பணம் இருந்தும் எங்கள் பணப் பெருமையைப் பிறரிடம் காட்டிக்கொள்ள முடியவில்லையே! உனக்குக் கண் இருக்கிறதா, கருணை இருக்கிறதா?'' என்று அங்கலாய்த்தனர்.

ஆண்டவன் என்ன செய்வான், பாவம்! கருணைக்கடலாயிருந்தும், சுயநலமிகளுக்குக் கல் நெஞ்சனாக, கருணையற்றவனாகத்தான் காட்சி அளிக்கிறான்! அவன் தலைவிதி அப்படி, வந்த வழி அப்படி!

— ரா. வீ.




Sole Distributors :

**PENMEN'S INDUSTRIAL SERVICES**

Kandivli, Bombay (S. D.)

---

உங்கள் அபிமான தமிழ்ப் பத்திரிகை

# குண்டூசி

## பொங்கல் புத்தாண்டு தினம்

வெளிவருகிறது

●

பிரபல எழுத்தாளர்களின் சிறு கதைகள், தொடர் நாவல், திரைக்கதை வசனம், இயற்கை வர்ணப் போட்டோக்கள், இன்னும் பல புதிய அம்சங்களுடன்.

●

தனிப் பிரதி 75 நயே பைசே

வருட சந்தா ரூ. 9-00

●

ஆசிரியர் :

**குண்டூசி ராதாகிருஷ்ணன்**

புரொப்ரைட்டர்ஸ் :

**நடராஜா பப்ளிகேஷன்ஸ்**

6, கான்ரன்ஸ்மித் ரோடு, சென்னை-6

ஸிடி ஏஜண்டு :

நேரு நியூஸ் மார்ட், லஸ், சென்னை-4

---

குழந்தைகளின் ஈரல், குலேக்கட்டி வியாதிகளுக்கு

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

**மாதாந்திர விஜயம்**

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கண்டு ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம் : குறிப்பு—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | | இடம் | தேதி | |
|---|---|---|---|---|---|
| தஞ்சாவூர் | 17 | காலை & மாலை | விருத்தாசலம் | 22 | மாலை |
| பட்டுக்கோட்டை | 18 | காலை | சிதம்பரம் | 23 | காலை & மாலை |
| திருத்துறைப்பூண்டி | 18 | மாலை | கடலூர் N. T. | 24 | காலை & மாலை |
| மன்னார்குடி | 19 | காலை | பாண்டிச்சேரி | 25 | காலை |
| திருவாரூர் | 19 | மாலை | திண்டிவனம் | 25 | மாலை |
| நாகப்பட்டினம் | 20 | காலை | விழுப்புரம் | 26 | காலை & மாலை |
| நன்னிலம் | 20 | மாலை | காஞ்சீபுரம் | 28 | காலை & மாலை |
| மாயவரம் டவுன் | 21 | காலை & மாலை | வேலூர் | 29 | காலை & மாலை |
| சீர்காழி | 22 | காலை | குடியாத்தம் | 30 | காலை |

ஜாம்ஷெட்பூர் : ஒவ்வொரு மாதக் கடைசி ஞாயிறு, காலை & மாலை சாக்சியிலுள்ள ஆந்திர நாட்டிய & தியேட்டர் சொஸைட்டி கட்டிடத்தில்

கரக்பூர்: 4; காலை & மாலை M/s. யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், N.T.E.155, ரயில்வே மார்க்கெட்

ஜபல்பூர் : 15; 8 to 12 முற்பகல் & 3 to 5 மாலை M/s. மாடர்ன் ஓட்டல். (அப்துல்லாபாய் & சன்ஸ், எதிரில்) அந்தர்தேசு போன் : நெ. 346

★

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்



# கடைசி ரகசியம்

பயிற்சியை முடித்துக் கொண்டு அவனிடம் ஆதவன் விடைபெற்றுக்கொண் டிருந்த வேளை யில் அவல சாகரத்தில் அமிழ்ந்து கிடந்த ஹஸன் நெற்றியை இறுகப் பிடித்துக்கொண்டு கூடத்தில் உட்கார்ந்திருந்தான். கடந்த பதினேழு வருஷ காலமாக அல்லும் பகலும் குருவுக்குப் பணி விடைகள் செவ்வையாகப் புரிந்து வந்தும் தன் இதயத்தில் ஆவிவிடும் அந்த ஒரேஒரு 'ஆசைக்கு'க் 'குதப்மினர்' போல் குருநாதர் குறுக்கே தடை யாக நிற்கிறாரென்று நினைக்கநினைக்கத் துயரத்தின் இடி முழக்கம் அந்த இளைஞனின் நெஞ்சைத் தாக் கியது. ஹிந்துஸ்தானி சாஸ்திரீய சங்கீதத்தி லுள்ள சகல வித்தைகளையும் ரகசியங்களையும் ஒளிவு மறைவின்றிக் கற்றுக் கொடுத்த உஸ்தாத், நேர்மையும் நாணயமும் கொண்ட சிஷ்யனுக்கு 'எதிரி'யாக மாறி விட்டாரே என்ற எண்ணம் ஹஸனின் மாசற்ற மனத்தில் குமிழியிட்டதும் அந்த வாலிபனின் மெய் சிலிர்த்தது. ஒருகால் சிஷ்யனின் முன்னேற்றம் தம்முடைய கீர்த்தியைப் பாதிக்கும் என்ற சுயநலத் தின் காரணமாகக் குருநாதர் இப்படி வதைக்கிறாரோ என்ற சந்தேகப் பொறி அவன் அறிவில் வட்டமிட்டதும், நெடு மூச்சும் காந்தலும் ஹஸனின் நெஞ்சக் கூட்டை உலுக்கிக் கொண்டு வெளிக் கிளம்பின.

"இனி இந்த இல்லத்தில் தன் நிழல் விழக் கூடாது. குருவும் அயலூருக்குச் சென்றிருக்கிறார். உடனே கிளம்பி விட

ஜமீலா

வேண்டும்' என்ற தீர்மானம் உள்ளத்தில் உருவானதை ஹஸனின் தோற்றத்தில் உண்டான மாறுதல் முழக்கியது. அவன் நெற்றி வியர்த்தது. சித்தம் தகித்தது. உடல் காந்தியது. தம்பூராவை எடுத்துக் கொண்டான். தந்திகளை மீட்டினான். அம்புலியைக் கண்டு ஆர்ப்பரித்தெழும் ஆர்கலியின் அலைகள் போல் அந்த ஆண்மகனின் நாவிலிருந்து பெருக்கெடுத்தோடியது, நாதவெள்ளம். குருவின் மனையில் தான் பாடுகின்ற 'கடைசிப் பாட்டு' அதுவேயாகும் என்று பறைசாற்றுவது போல் பதுங்கிப் பதுங்கி வந்து கொண்டிருந்த அந்திக் காலத்துக்கு ஏற்றாற்போல் 'பூரிய தனாசரி' ராகத்தைத் தொடங்கினான் ஹஸன். வையம் பகலை விழுந்தும், வானம் ஒளியை விழுந்தும் அந்தத் தெய்வீக கானத்தில் மதி மருண்ட வண்டுகள் மல்லிகையை வெண் சங்குகளாக மாற்றி ஊத மறந்து விட்டன......! இதயம் பாகாய் உருகி விடும்படி பாடினான் ஹஸன்......பண்ணெழுப்பிக் கூடுகளை நோக்கி விரைந்தோடி விடும் புள்ளினங்கள் அந்தச் சமயத்தில் கமலத்தடாகத்தை விட்டு அகல மறந்து விட்டன!...அப்படி உணர்ச்சியுடன் பாடினான் அவன். தன்னையும் தான் வீற்றிருந்த கூடத்தையும், இத் தரணியையும் அறவே மறந்து சங்கீத சாகரத்தில் மூழ்குளித்த வண்ணம் தன் இஷ்டம்போல் விளையாடிக் கொண்டிருந்தான், மனமொடிந்து போன இளம் வித்வான்.

குவாலியர் சமஸ்தானத்தின் ஆஸ்தான வித்வானாகக் கொலுவீற்றிருந்த 'சங்கீத சாம்ராட்' உஸ்தாத் அன்வர்கான் சங்கீதமே உருவெடுத்து உதித்தவர் என்று பாமர மக்களே பெருமையுடனும் பயபக்தியுடனும் பேசிவந்த காலம். அந்த சங்கீத மேதையிடம் ஹஸன் சிஷ்யனாக அமர்ந்த கதை தனி ஏடாகும். அன்வர்கானின் வீட்டு வாசலில் மூன்று வருஷங்கள் மனம் தளராது முற்றுகை போட்டு, பல்லாயிரம் தடவைகள் வாசற்படிகளில் ஏறி இறங்கிச் சோதனைகளையும் வேதனைகளையும் அனுபவித்த பிறகுதான் 'சங்கீத சிங்கத்தின்' முன்னால் உடல் ஒடுங்கி உட்காருவதற்கு அந்த 'ஆட்டுக் குட்டி'க்கு வாய்ப்புக் கிடைத்தது! பத்து வருஷக் கடினப் பயிற்சிக்குப் பிறகுதான் மேடையில் தன் குருவுக்கு முதுகுப்புறமாக ஒதுங்கி அமர்ந்து குருவுடன் சேர்ந்து பாடும்படியான சந்தர்ப்பம் ஹஸனுக்குக் கிட்டியது!



ராம்பூர் சமஸ்தானத்துக்கு ஹஸனை அழைத்துச் சென்றிருந்தார் அன்வர்கான். ஜகஜ்ஜோதியாய் விளங்கிய தர்பாரில், நவாப்புக்கு முன்னிலையில் பாடும்படி சிஷ்யனுக்குக் கட்டளை யிட்டார் குரு. அன்று அந்த இளம் வித்வான் பாடிய 'கயாலை'க் கேட்டு மெய்ம்மறந்த ஆஸ்தான வித்வான்கள், "வாரே வாஹ்!" என்று வாய் விட்டுப் புகழ்ந்து விட்டார்கள்!

மஹாராஜாவின் பிறந்த தினத்தன்று பரோடா சமஸ்தானத்துக்கு அன்வர்கான் விஜயம் செய்த போது ஹஸனுக்கு மற்றொரு பாக்கியம் வலுவில் கிடைத்தது. ஏற்கெனவே ஹஸனின் மேதையைக் கேள்விப்பட்டிருந்த மகாராஜா அந்த இளைஞனின் சங்கீதத்தை நேரில் கேட்க விரும்பினார். பத்து பதினைந்து சங்கீத ஜாம்பவான்கள் குழுமியிருந்த பளிங்கு மண்டபத்தில் ஹஸனின் கச்சேரியை நடத்த ஏற்பாடுகள் துரிதமாகச் செய்யப்பட்டன. அன்றைய நிகழ்ச்சியில் 'தும்ரி'யையும், 'தரானா'வையும் வெளுத்து வாங்கி விட்டான் ஹஸன். "அக்பர்கான் சாஹேப்! இத்தகைய மாணிக்கத்தைச் சிஷ்யனாகப் பெற்ற நீர் மகா பாக்கியசாலி" என்றுமிக்க உவகையுடன் ஆஸ்தான வித்வான் சங்கீத சாஸ்திரி மனோஹர் ஜோஷி அன்வர்கானிடம் மனம் விட்டுக் கூறி விட்டதும், ஹஸனின் உச்சி குளிர்ந்து விட்டது. சங்கீத சாஸ்திரியின் நாவிலிருந்து வெளிவந்த அந்தச் சில வார்த்தைகளைச் செவிமடுத்த ஹஸன் ஆனந்த வாரிதியில் அமிழ்ந்து விட்டான்.

ஜெய்ப்பூர் அரண்மனைக்குத் தம் சிஷ்யனுடன் உஸ்தாத் அன்வர்கான் சென்றபோது, பல்வேறு சமஸ்தானங்களிலிருந்து வந்த சங்கீத வல்லுநர்களின்

முன்னிலையில் கச்சேரி செய்யும்படியான வாய்ப்பு ஹஸனுக்குக் கிட்டியது. 'துருபத்' 'அலாப்' ஆகிய இவைகளை அவன் மணிக் கணக்காகப் பாடி முடித்ததுதான் தாமதம், தர்பார் மண்டபமே அதிர்ந்து விழும்படியாக எழுந்த ரஸிகர்களின் கரகோஷத்தைக் கேட்டு ஹஸன் சில நிமிஷங்கள் திக்பிரமையுடன் மேடையில் அமர்ந்துவிட்டான்!

இப்படியாக, புகழ் மேல் புகழ், சன்மானங்களுக்கு மேல் சன்மானங்கள் மண்டிக் கொண்டிருந்த வேளையில் ஹஸனின் இதயத்திலே மட்டும் களிப்புக்குப் பதிலாக ஏக்கமே குடி கொண்டது. எத்தனையோ சமஸ்தானங்களுக்குக் கூடவே அழைத்துச் சென்று ஒருசில பொறுக்கியெடுத்த வித்வான்களின் முன்னால் தன்னைப் பாடும்படி கூறும் தன் குருவின் மனப்போக்கு பிடிபடவில்லை. சங்கீத ஜாம்பவான்களும், சங்கீத சாஸ்திரிகளும், மகா வித்வான்களும் வானளாவப் புகழும்படி நிலையைத் தனக்கு அளித்தவர் பொது மேடையில்



வீற்றிருந்து பாமர மக்களுக்கு முன்னிலையில் தனிக் கச்சேரி செய்வதற்கு அனுமதி அளிக்க மறுக்கிறாரே. ஏன்? நான் பெறும் சகல கீர்த்தியும் அவரைத்தானே போய்ச் சேரப் போகிறது? இதை ஏன் அவர் புரிந்து கொள்ளத் தயங்குகிறார்? அவன் உள்ளம் ஓலமிட்டது. தன் நெஞ்சில் கொழுந்து விட்டெரியும் அந்தரங்க அவாவைச் சமயங்கள் கிடைத்தபோதெல்லாம் மறைமுகமாக ஹஸன் வெளியிட்ட போதிலும் அன்வர்கான் அவற்றைத் தம் செவிகளில் வாங்கிக்கொண்டதாகத் தெரியவில்லை. இந்தப் பெருத்த ஏமாற்றம்தான் அவனுக்குக் குருவின்வீட்டை விட்டு வெளியேறும்படியான வைராக்கியத்தைத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தது.

அந்த வேதனை வெள்ளத்தில் அல்லல்பட்டுக்கொண்டிருந்த ஹஸன் தன் இதயக் குமுறலைப் 'பூரிய தனாசரி' ராகத்தின் மூலம், அந்திப் பொழுது அவனியை அரவணைக்கும் வேளையில், மிக்க உணர்ச்சியுடன் பாடிக் கொண்டிருந்தான்;

பிரவாகமெடுத்தோடிய நாத வெள்ளம் ஒருவாறு முடிவடைந்த அதே தருணத்தில் வாசற் கதவைத் திறந்து கொண்டு வீட்டுக்குள் நுழைந்தார் உஸ்தாத் அன்வர்கான். தம் ஜாகீர் விஷயமாக கோர்ட் நடவடிக்கைகளை நேரில் கவனிக்க வெளியூருக்குச் சென்றிருந்த அவர் அன்றுதான் திரும்பினார். ஷேர்வானியையும், தலைப்பாகையையும் கழற்றிச் சுவர் ஆணிகளில் மாட்டி விட்டு மிக்க சோர்வுடன் சாய்வு நாற்காலியில் சாய்ந்தார்; வீட்டுக்குள் பரவி நின்ற புரிபடாத நிசப்தத்தைக் கண்டதும் அன்வர்கானுக்கு என்னமோ போலிருந்தது. "ஹஸன்...ஹஸன்" என்று அவர் கூப்பிட்டும் சிஷ்யனிடமிருந்து பதில் வரவில்லை. திகைப்பும் வியப்பும் மேலிடக் களைப்பையும் பொருட்படுத்தாமல் சட்டென்று எழுந்து நின்றார். துணைவியின் நினைவு பளிச்சிட்டது. "பேகம்...! பேகம்...!" என்று பரிவுடன் கூப்பிட்டுக் கொண்டே புழக்கடைப் பக்கம் நடையைத் திருப்பினார்; அடுக்களையில் கண்ட காட்சி அன்வர்கானை அதிர வைத்து விட்டது. புகை சூழ்ந்த மடவரையில் அவர் மனைவி திகைப்புடன் நின்று கொண்டிருந்தாள்.

"என்ன நடந்தது? சொல்லு, பேகம்... சொல்லு" என்று கம்மிய குரலில் கேட்டவாறே தமது வாழ்க்கைத் துணைவியின் தோளை அன்புடன் பற்றினார்.

"அந்தப் பையன் இருக்கிறானே..."— ரஜியா பேகமின் குரலில் நடுக்கம் ஊர்ந்தது;

"யாரைக் குறிப்பிடுகிறாய்?" - அன்வர்கானின் நெஞ்சில் பீதி புரையோடிற்று.

"உங்கள் சிஷ்யன் ஹஸன் நீங்கள் வருவதற்குச் சற்று முன்பு என்னதான் பாடினானோ! அந்தப் பாட்டில் எந்தச் சொக்குப் பொடியை வைத்து அப்படிப் பாடினானோ! நான் அப்படியே அசந்து விட்டேன். பாட்டைக் கேட்கக் கேட்க எனக்கு ஒரு வேலையும் ஓடவில்லை. பால் பொங்கி வழிந்து அடுப்பு அணைந்ததுகூடத் தெரியவில்லை. மயக்கம் வந்தது. அப்படியே சாய்ந்து விட்ட நான் உங்களைப் பார்த்த பிறகுதான் இந்த உலக நினைவுக்கு வந்திருக்கிறேன்!" என்றாள் ரஜியா பேகம்.

ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்ந்துவிட்ட உஸ்தாத் அன்வர்கான் மௌனமாக நின்றார். சுருக்கங்கள் பதிந்த அவர் வதனத்தில் படர்ந்திருந்த கவலை ரேகைகள் இலேசாக மறையலாயின. புரிபடாத மந்தகாசம் அவர் தடித்த அதரங்களில் ஊர்ந்து மறைந்தது. சிரங் கவிழ்த்தவண்ணம் அந்த மடவரையை விட்டு நேராக அகன்ற கூடத்துக்குச் சென்றார்.

நீலம் பாரித்த உதடுகளுடனும், நீராடிய இமைகளுடன் தம்பூராவின் மீது தலையைச் சாய்த்துக் கொண்டு மிக்க சோர்வுடன் அமர்ந்திருந்த ஹஸனின் மீது தமது மங்கிய பார்வை விழுந்ததும், அன்வர்கானின் நயனங்கள் கலங்கி விட்டன.

"என் அருமை சிஷ்யா! பல காலமாக உன் இதயத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்த லட்சியம் இன்று நிறைவேறி விட்டது. எழுந்திரு!" என்று பாசம் பொங்கப் பரிவுடன் அன்வர்கான் கூறினார். திடுக்கிட்டு எழுந்து நின்றான் ஹஸன். அந்த இளைஞனின் நெஞ்சு படக் படக்கென்று கௌளி அடித்துக் கொண்டது:

"ஹஸரத்! நான் என்னையுமறியாமல் ஏதாவது குற்றம் புரிந்து விட்டேனா?" என்றான் சிஷ்யன் ஒரே பீதியுடன்.

"ஹஸன்! உன் உள்ளமும் உன் குருவின் மனமும் ஒன்றாகப் பிணைந்து விட்ட பிறகு, உன் நெஞ்சில் இத்தனை காலமாக உருவாகிக் கொண்டிருந்த துயரப் பிழம்பை நான் அறியாமலா போவேன்?"

ஹஸனின் வாய் அடைத்து விட்டது. ஏதோ சொல்ல எத்தனித்தபோது நாக்குப் படுத்து விட்டது.

அன்வர்கான் தொடர்ந்தார்: "மன்னாதி மன்னர்களும், நவாபுகளும் கொலு வீற்றிருக்கும் தர்பார்களின் மேடைமீது உன்னை அமரச் செய்து உன் அருமையான சங்கீதத்தைக் கேட்டு நான் பெருமைப் பட்டேன். ஆனால் பாமர மக்களும், ரசிகர்களும் குழுமியுள்ள பொது மேடைகளில் தனியாகக் கச்சேரி செய்வதற்கு உன்னை நான் அனுமதிக்கவில்லை என்பதை நீ சுட்டிக் காட்டித்தான் நான் உணர வேண்டும் என்பதில்லை! நான் ஏன் தடையாக நின்றேன், தெரியுமா?" - சிஷ்யனை அன்போடு பார்த்தார் அன்வர்கான்.

"ஹஸரத், பொல்லாத என் மனம் என்னென்னமோ விபரீதங்களை விளைவித்து விட்டது. என்னை முதலில் மன்னியுங்கள்" என்று கெஞ்சினான் ஹஸன். மள மளவென்று பொங்கிய விழிநீர் அவன் கறுப்புக் கன்னங்களில் வழிந்தோடியது.

"ஹஸன், பதறாதே! வெகு நாட்களாக மூடி வைத்திருந்த என் இதயத்தை இன்று நான் உனக்குத் திறந்து காட்டப்போகிறேன்! சங்கீத சாஸ்திரிகள், சங்கீத விற்பன்னர்கள் உன்னைச் சிரத்தின்மேல் வைத்துக் கொண்டு ஜயகோஷம் போட்டு விட்ட காரணத்தினால் உன் சங்கீதம் பரிபூரணத்துவம் அடைந்து விட்டது என்று நீ எண்ணினால் அது மகா பேதைமையாகும்! சங்கீதத்தின் லக்ஷணம் அதுவல்ல!"

பிரமையுடன் குருவின் பேச்சைக் கேட்டுக் கொண்டு மௌனமாக நின்றான் ஹஸன்.

"இந்தச் சங்கீதக் கலையின் 'கடைசி ரகசியத்தை' உனக்கு நான் வெளிப்படுத்தத் தருணம் வந்து விட்டது. கேள். சங்கீதத்திலுள்ள நுட்பங்களையும், பாவங்களையும் லக்ஷணங்களையும் ஒன்றுமறியாத பாமர மக்களின் இதயத்தைக் கவ்விவிடும் நாதம்தான் உண்மையான சங்கீதம் என்பதை அறிந்து கொள்: அத்தகைய உன்னதமான சங்கீதத்தை நீ பாடவேண்டும் என்றுதான் இத்தனை வருஷங்களாக உதடுகளை இறுக்கிக் கொண்டு நான் காத்துக் கொண்டிருந்தேன், ஹஸன்! இன்று நான் என் அந்தரங்க ஆசை நிறைவேறியது. கல்வி என்றால் காக என்று கருதுபவளும், சங்கீதம் என்றால் முகத்தைத் தேவாங்கு போல் கோணிக் கொண்டு எள்ளி நகையாடும் ஒரு மாதரசியை—இந்த மனையில் மாட்சி செய்யும் என் துணைவியைத்தான் குறிப்பிடுகிறேன்—உன் சங்கீதத்தின் மூலம் மெய்ம் மறக்கச் செய்து அவள் மதி மருளும்படி ஜால வித்தை நீ புரிந்து விட்டாய். இதை அறிந்ததும் பல நாட்களாக நான் கண்டுவந்த கனவு பலித்து விட்டது. நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன்!" என்று மிக்க உணர்ச்சியுடன் கூறி வந்தவர் சிஷ்யனை இறுகத் தழுவிக் கொண்டு பொல பொலவென்று ஆனந்த பாஷ்பத்தைச் சொரிந்து விட்டார்.

முன்னொரு நாள் 'சங்கீத சாம்ராட்' என்ற விருதளித்தபோது ராம்பூர் நவாபு தம் காணிக்கையாகக் கொடுத்த பொன்னாடையை அலமாரியிலிருந்து எடுத்து வந்து அந்த இளைஞன் மீது அன்வர்கான் ஆசையுடன் போர்த்தியதும், ஹஸன் ஸ்தம்பித்து விட்டான். தம்பூராவை எடுத்துச் சிஷ்யனிடம் பேரன்புடன் தந்து, "என் அருமை ஹஸன், குடம் போன்ற உன் குருவின் குடிசையில் இனி உன் நாதத்தின் ஒளி சுடர்விடவேண்டியதில்லை. இத் தரணியில் எண் திசைகளில் கார் மேகம் போல் உன் சங்கீதம் முழங்க வேண்டும்" என்று மிக்க உணர்ச்சியுடன் நிதானமாகக் கூறி அன்வர்கான் விடை கொடுத்தார். ஹஸன் விந்திய மலைபோல் மலைத்து நின்று விட்டான். அவன் நயனங்கள் தடாகங்களாயின. நெஞ்சம் பாகாய் உருகியது: கால்கள் நிலை தடுமாறின. உடலை நன்றாக வளைத்துக் குனிந்து பணிவுடன் வணங்கினான் தன் குருநாதரை. நீர் நிறைந்த விழிகளால் தெய்விகம் இலங்கிய குருவின் வதனத்தைப் பார்த்த பொழுது உலகமே சங்கீத உருவம் பெற்றிருப்பது போலத் தோன்றியது ஹஸனுக்கு.

## குருதட்சிணை

மனித மனம் மிக விசித்திரமானது! தமது சிஷ்யனுக்கு வரும் புகழைக் கண்டு பொறாமைப் படுகின்ற குருவும் உண்டா? பொறாமை மிகுதியிலே தமது அருமை மகளின் ஆனந்த வாழ்க்கையைக் குலைப்பதற்குத் துணிந்து விடும் தகப்பனும் உண்டா?

பிரபல கதாசிரியை திருமதி அநுத்தமா எழுதியுள்ள 'குருதட்சிணை' என்னும் அருமையான நாடகத்தை அடுத்த 'கல்கி' இதழில் படியுங்கள்.



# பேராசிரியர் கல்கியின் நினைவு நாள்

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் பேராசிரியர் கல்கி நினைவு நாளும் பாரதி பதிப்பகத்தார் வெளியிட்டிருக்கும் கல்கியின் பார்த்திபன் கனவு மலிவும் பதிப்பு வெளியீட்டு விழாவும் சென்னை ராஜாஜி மண்டபத்தில் சிறப்பாக நடைபெற்றன. ராஜாஜி அவர்கள் விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். டிசம்பர் ஐந்தாம் தேதி நடைபெற்ற இந்த விழாவுக்குத் திரு ம. பொ. சி அவர்கள் தலைமை வகித்தார். திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரியார் வரவேற்புரை நிகழ்த்தினார். கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் 'பார்த்திபன் கனவு' நூலை வெளியிட்டார். திரு சி. சந்திரசேகரன், மாயூரம் திரு கோவிந்தசாமி, திரு பகீரதன், திரு இ. ராஜேந்திரன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். இந்த விழா காட்சிகளில் சிலவற்றை இப் பக்கத்தில் காணலாம். 1 திரு ம. பொ சி. தலைமையுரை நிகழ்த்துகிறார். 2 திரு சி. சுப்பிரமணியம் 'பார்த்திபன் கனவு' புத்தகத்தை அறிமுகப்படுத்துகிறார். 3. திரு வேங்கடாச்சாரியாரும், திரு இ. ராஜேந்திரனும். 4. திரு அழ. வள்ளியப்பா நன்றி கூறுகிறார்.







# வாழ்க



டாக்டர் வாசுதேவ முதலியார் அவர்களின் புதல்வி திருமதி சத்தியவதியை டாக்டர் விட்டல் ராவ் செப்டம்பர் 5-ந் தேதி விவாகம் செய்து கொண்டார்.



கொடுவாயில் திரு எ. ஆர். கிருஷ்ணன் அவர்களுக்கும், எழுத்தாளர் (ரத்னமாலா) சந்திரம்மாளுக்கும் திருமதி விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.



பம்பாய் நகரசபை ஓய்வு பெற்ற பிரதம கணக்காளர் ஸ்ரீ டி. வி. துரைசாமி அவர்களின் புதல்வி திருமதி மங்களாவுக்கும், திரு கே. ஆர். எஸ். கிருஷ்ணா அவர்களுக்கும் திருமணம் நடந்தேறியது.



பிரபல எழுத்தாளரும் 'கலைமகள்' துணை ஆசிரியருமான திரு கா. ஸ்ரீ. ஸ்ரீ அவர்களின் புதல்வி திருமதி வைதேகிக்கும், திரு சௌரிராஜனுக்கும் சென்னையில் திருமணம் நடந்தது.



மதுரை சம்ஸ்கிருதக் கல்லூரியின் ரிடையர்ட் பிரின்ஸிபால் திரு வி. சுப்பிரமணிய அய்யர் புதல்வி மீனாட்சியைத் திரு வைத்தீசுவரன் திருமணம் புரிந்து கொண்டார்.

# மணமக்கள்



கனி அன்டு சன்ஸ் கம்பெனியின் மானேஜர் திரு என். தண்டபாணியின் புதல்வி திருமதி ராஜலக்ஷ்மிக்கும், திரு பி. ஆர். சீனிவாசனுக்கும் நவம்பர் 10-ந் தேதி விவாகம் நடந்தது.



சரஸ்வதி டாக்கீஸ் மானேஜர் திரு பாட்சா முதலியார் புதல்வி திருமதி சரோஜாதேவிக்கும், திரு செல்வராஜுக்கும் நவம்பர் 1-ந்தேதி திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



பூமிதான ஊழியர் திரு இரா. கந்த சாமி திருமதி ராமலக்ஷ்மியை நவம்பர் நாலாந் தேதி மணம் புரிந்து கொண்டார்.



அட்வகேட் திரு பி. எஸ். சாரங்கபாணி அய்யங்கார் அவர்களின் புதல்வி திருமதி கல்யாணசுந்தரவல்லிக்கும், திரு ஆர். சீனிவாசராகவனுக்கும் கல்யாணம் நவம்பர் 4-ந் தேதி நடைபெற்றது.



தமிழ் எழுத்தாளர் திரு கொடுமுடி ராஜ கோபாலன் அவர்களின் மைத்துனர் திரு என். வி. ராகவனுக்கும், திருமதி பங்கஜ வல்லிக்கும் திருமணம் நடந்தேறியது.



1 பாரதப் பிரதமர் ஜவாஹர்லால் நேருவின் பிறந்த நாள் விழா சென்ற நவம்பர் 14ல். டில்லியில் குழந்தைகள் தினமாகக் கொண்டாடப் பட்டது. சென்னை ராஜ்யப் பள்ளிக்கூட மாணவர் சார்பில் சென்னை ராமகிருஷ்ண மிஷன் உயர் நிலைப் பள்ளி மாணவர்கள் கலந்து கொண்டனர். அம்மாணவர்களுடன் பிரதமர் நேருஜியைக் காணலாம். 2, பாரதத்தின் சுதந்திரத்தை 47ம் ஆண்டிலேயே கொடுத்து விட வேண்டும் என்று பிடிவாதமாக இருந்து கொடுத்த லார்டு பெதிக் லாரன்ஸ், தமது மனைவியாருடன் சுதந்திர பாரதத்தைப் பார்க்க வந்திருக்கிறார்.

3 டில்லியில் நடைபெற்ற காமன்வெல்த் பார்லிமென்டரி மகாநாட்டில் இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகாவும் கலந்து கொண்டார்.

4 சென்ற 24-11-57 அன்று திருச்சி நாடகக் கலைச் சங்கத்தின் ஆறாவது ஆண்டு விழா திரு டி. கே. சண்முகம் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.







# மறந்துவிட்டோம்



புலியைப்போல வேட்டை யாடப்
புரிந்து கொண்டோம் நாம்.

நரியைப்போல ஏய்த்து வாழ
அறிந்து கொண்டோம் நாம்.

நாயைப்போலச் சண்டை போடத்
தெரிந்து கொண்டோம் நாம்.

பருந்துபோலப் பிடுங்கித் தின்னப்
பழகிக் கொண்டோம் நாம்.

கழுதைபோல அடிமை செய்யக்
கற்றுக் கொண்டோம் நாம்.

ஓந்திபோல வேஷம் போட
உணர்ந்து கொண்டோம் நாம்.

பாம்புபோல வஞ்சங் கொள்ளப்
படித்துக் கொண்டோம் நாம்.

மனிதனைப்போல் வாழும் நெறியை
மறந்து விட்டோம் நாம்!



தங்கமணி


சித்திரத் தொடர் கதை
சோதிடப்புலி
அத்தியாயம் 12


சோதிடர் செல்வமே! இன்று என் பிறந்த நாள். நண்பர் ஒருவர் இந்தப் பானையில் எனக்கு ஒரு வெகுமதி அனுப்பியிருக்கிறார்!


போயும் போயும் இந்த மண் பானை யையா வெகுமதி யாக அனுப்ப வேண்டும்?


அவரவர் இஷ்டம் தானே? அவர் ஒரு நிபந்தனை விதித்திருக்கிறார். இதைத் திறக்காமலேயே இதற்குள் என்ன இருக்கிறது என்று சொல்ல வேண்டும்.


அந்தப் பொறுப்பு உங்களுக்கு. சரியாகச் சொல்லா விட்டால் சிரச் சேதம் செய்து விடுவேன் என்று சொல்லி யிருக்கிறார்!


நம் புத்தி ஏன் இப்படிப் போகவேண் டும்? இப்பொழுது இனித் தப்ப வழியில்லை! உண்மை யைச் சொல்லி மன்னிப்பு கேட்டுக் கொண்டால் என்ன? அது தான் சரி!


மண்டூகம் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அதுதான் நான்....
மண்டூகமா? மண்டூகம் என்றால் தவளைதானே? அது தான். இதற்குள் இருக்கிறது.




ஏன்டா சொக்கா? என்னமோ சொன்னியே! இப்பொழுதாவது இவர் ஜோதிடத்தை நம்புகிறாயா? செல்வம்! இவன் தான் உங்களுக்கு ஒரு சோதனை வைக்குமாறு சொன்னவன், உங்கள் சோதிடத்தில் நம்பிக்கை யில்லாதவன்.


அப்படியா இவன்.... இவன்தானே அந்த ரத்ன ஹாரம் திருடிய நாகுவின் கணவன்?


யார்? நாகுவா ரத்ன ஹாரம் திருடியவள்? கைது செய்யுங்கள், உடனே புருஷனும் பெண்சாதி இருவரையும்.
வேண்டாம். பிழைத்துப் போகிறார்கள். ஆண்டவன் அவர்களுக்குத் தண்டனை அளிப்பார்.


ஆகா! ஆகா! நம் சோதிடருக்குத் தான் என்ன தங்கமான குணம்! தாராள மனசு!


சோதிடப்புலி

## 37. பள்ளிக்கூடம் பறந்தது!

திருடர்கள் மால்கோஷ் வைத்த பவுன் நாணயங்களைச் சுவர் வெடிப்புகளிலிருந்தும், பூமியிலிருந்தும் எடுத்துக் கொண்டார்கள். மேலும் நிறையப் பவுன் நாணயங்கள் அகப்படும் என்ற நம்பிக்கையினால் வெகு நேரம் வரையிலும் சுவர்களை இடித்துப் பார்த்தார்கள். பூமியை வெகு ஆழம் தோண்டிப் பார்த்தார்கள். பவுன் அகப்படாமல் ஏமாந்தார்கள். "அந்த அயோக்கியன் நம்மை ஏமாற்றிவிட்டான். மறுபடி




யும் அவன் நம்மிடம் சிக்கிக் கொள்ளாமலா இருக்கப் போகிறான்!" என்று கூறிக்கொண்டே சென்றார்கள்.

திருடர்களுக்குத் தப்பி ஓடின மால்கோஷ் காலையிலே ஒரு இடத்தில் உட்கார்ந்து கொண்டு எதையோ யோசித்த வண்ணமாக இருந்தான். அந்தச் சமயத்திலே அங்கே ஒரு போலீஸ் வண்டி குறுக்கிட்டது. அந்த வண்டியில் போலீஸ் அதிகாரிகளும், போலீஸ் சேவகர்களும் இருந்தார்கள். "அதோ உட்கார்ந்திருக்கிறானே, அவன் தான் தப்பி ஓடினவன்" என்று தோட்டத்தில் முதலில் மால்கோஷைப் பிடித்த போலீஸ் சேவகன் கத்தினான். இனிமேல் அவன் தப்புவதற்கு ஒரு வழியும் இல்லை. போலீஸ் சேவகர்கள் மால்கோஷைப் பிடித்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனார்கள். "உனக்கு எப்படிப் பவுன் நாணயங்கள் கிடைக்கின்றன?" என்று போலீஸ் அதிகாரிகள் கேட்கவே, தனக்கு ஒரு கிழவர்தான் அதைக் கொடுத்து உதவியவர் என்று மால்கோஷ் மறுபடியும் சொன்னான்.

யார் வீட்டிலேயாவது தங்க நாணயங்கள் கெட்டுப் போயிருக்கின்றனவா என்றும், அப்படிக் காணாமல் போயிருந்தால் போலீஸ் இலாகாவுக்கு ஒரு வாரத்துக்குள் தகவல் தெரிவிக்கும்படியும் தண்டோரா மூலம் அறிவிக்கப்பட்டது. ஆனால் ஒருவராவது பவுன் நாணயம் காணாமற் போனதைப் பற்றிப் புகார் செய்யவில்லை. போலீஸார் மால்கோஷைச் சோதித்தார்கள். அவனிடத்தில் ஒரு பவுன் காசும் அகப்படவில்லை. மால்கோஷ் பவுன் நாணயங்களைத் திருடவில்லை என்று போலீஸ் அதிகாரிகள் முடிவுக்கு வந்தார்கள். ஆனால் அவன் போலீஸ் பாதுகாப்பிலிருந்து தப்பி ஓடியதால் அவனுக்கு ஒரு வாரம் சிறை வாசம் இருக்கும்படி உத்தரவு பிறந்தது.

மால்கோஷ் சிறைக் கதவு தாளிடப்பட்டவுடன் ஒரு மூலையில் நின்று கொண்டு தனது வலது சட்டைப்பையில் கைவிட்டான். ஆனால் அப்பொழுது வழக்கம் போல் பவுன் நாணயம் வரவில்லை. இரண்டு மூன்று முறை முயன்றும் பிரயோசனப்படவில்லை. அப்பொழுது அவனுக்கு ஏதோ மயக்கம் வருவதுபோல் தோன்றியது. தலை வேகமாகச் சுற்றியது. தொப்பென்று தரையில் விழுந்து விட்டான்.

* * *

பூச்சாண்டிக்குப் பயந்து கொண்டு கிழவர் பந்தை விட்டெறிந்து விட்டுப் போய் விட்டார் அல்லவா? அந்தப் பந்து 'விர்' என்று போய் ஒரு குப்பை மேட்டில் விழுந்தது.

அந்தப் பந்து ஒருநாள் பள்ளிக்கூடத்துப் பையன் ஒருவனின் கையில் அகப்பட்டது. அந்தப் பையன் மிகவும் சோம்பேறி. அவன் பாடங்களைச் சரியாகப் படிக்க மாட்டான். எப்பொழுதும் அவன் விளையாட்டிலேயே தன் கவனத்தைச் செலுத்



டிக் கொண்டிருப்பான். அவனுக்கு ஒரு புதிய பந்து கிடைத்தால் சந்தோஷத்துக்குக் கேட்பானேன்? தான் அந்தைக் குப்பைமேட்டிலிருந்து எடுத்ததை யாராவது கேட்கப் போகிறார்களே [illegible] பயந்து பந்[illegible] யில் கட்டி ஒளித்து வைத்துக் கொண்டான். பள்ளிக்கூடத்துக்குப் போக மனமில்லாமல் போய்க் கொண்டிருந்தான். முதல் மணி அடித்தது. பையன்களும், உபாத்தியாயர்களும் வெகு வேகமாகப் பள்ளிக்கூடத்தில் நுழைந்தார்கள்.

'இந்தப் பள்ளிக்கூடமே எனக்குப் பிடிக்கவில்லை. என் கையிலே நல்ல பந்து ஒன்று அகப்பட்டிருக்கிறது. இரண்டாவது மணி அடிப்பதற்குள் சற்று விளையாடப் போகிறேன்' என்று மடியில் [illegible] கையில் எடுத்தான். புஸ்த[illegible] கீழே வைத்தான் பையன். கை[illegible] பந்தைப் பார்த்த மற்றொரு சோம்பேறிப் பையன், "டேய், டேய்! என்னையும் விளையாட்டுக்குச் சேர்த்துக் கொள்ளடா" என்று கூறினான்.

"ஆமாண்டா. எல்லோரும் ஜோராக விளையாடலாம். இந்தப் பாழாய்ப் போன பள்ளிக்கூடத்தைக் கண்டால்தான் எனக்குப் பிடிக்க[illegible] இந்தப் பள்ளிக்கூடம் யாரும் [illegible] ஒரு காட்டிலே இருக்க வேணும்னு[illegible] என் ஆசை. அப்பொழுது நாம் ஒருவரும் பள்ளிக்கூடத்துக்குப் போக வேண்டாம் பாரு" என்று சொல்லிக் கொண்டே பந்தை இரண்டு மூன்று முறை கீழே போட்டுப் பிடித்தான். அவ்வளவுதான்; என்னவோ ஒரு பெரிய சத்தம் கேட்பதுபோல இருந்தது. என்ன ஆச்சரியம்! அந்தப் பெரிய பள்ளிக்கூடம் பூமியிலிருந்து ஆகாயத்துக்குக் கிளம்பியது.

பள்ளிக்கூடம் பறந்து கொண்டேதான் இருந்தது. அந்தப் பந்தைக் கண்டெடுத்த போக்கிரிப் பையன் மிகவும் பயமடைந்தான். "நான்தான் பள்ளிக்கூடம் காட்டுக்குச் சென்றால் தேவலை என்று சொன்னேன். அந்தச் சமயத்தில்தான் பந்தை ஆடிக் கொண்டிருந்தேன். இந்தப் பந்து ஏதாவது பூதத்தின் பந்தோ என்னமோ?" என்று பயந்து பந்தை மூலையில் ஒளித்து வைத்தான்.

பள்ளிக்கூடம் பல மைல்கள் பறந்து சென்றது. பிறகு ஒரு இடத்தில் பெரிய சத்தத்துடன் பூமிக்கு வந்து நின்றது. பள்ளிக்கூடம் வந்த இடம் ஒரு அடர்த்தியான காடு. பள்ளிக்கூடம் காட்டுக்கு வந்து மூன்று நான்கு நாட்கள் ஆகிவிட்டன. பையன்களெல்லாம் பசி, தாகம் என்று கத்தினார்கள். சில பையன்கள் தங்கள் தாயார், தகப்பனாரை நினைத்து அழுது கொண்டே இருந்தார்கள். சிறு பையன்களெல்லாம் பசியினால் வாடி எழுந்திருக்கச் சக்தியில்லாமல் படுத்துக் கொண்டே இருந்தார்கள். பள்ளிக்கூடத்துக்குப் பந்தைக் கொண்டு வந்த சிறுவனும் தான் பள்ளிக்கூடத்தைப் பற்றித் தவறாக நினைத்ததைப் பற்றி வருந்தி வெளியிலே சொல்ல முடியாமல் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தான். அப்பொழுது அவன் ஒளித்து வைத்திருந்த பந்து மற்றொரு பையன் கண்களுக்குத் தென்பட்டது. உடனே அவன் அந்தப் பந்தை எடுத்துத் தன் சிநேகிதர்களைக் கூப்பிட்டு, "இங்கே பாருங்கடா, இந்தப் பந்தை! பந்து புதுசா இருக்கு. இந்தப் பள்ளிக்கூடம் மாத்திரம் திரும்பி நம்ப ஊருக்கே போய் விட்டால் ரொம்ப நன்றாக இருக்கும். நாமும் சந்தோஷமாக இந்தப் பந்தை வைத்துக் கொண்டு விளையாடலாம். இங்கே விளையாடுவதற்கே பிடிக்கவில்லை" என்று பந்தை இரண்டு மூன்று முறை கீழே போட்டுப் பிடித்தான்.

எல்லோரும் மனம் குழம்பிக் கொண்டிருந்த சமயத்தில் பையன் பந்தாடியது



ஒரு உபாத்தியாயருக்குப் பிடிக்கவில்லை. அந்தப் பந்தை அவன் கையிலிருந்து பிடுங்கி வீசி எறிந்தார்.

அடுத்த நிமிஷம் பந்து ஆகாயத்தில் பறந்து செல்ல ஆரம்பித்தது. மறுபடியும் பள்ளிக்கூடம் ஆகாயத்தில் பறக்க ஆரம்பித்தவுடன் பள்ளிக்கூடத்திலிருந்த அனைவரும்பயத்தினல் நடுங்க ஆரம்பித்தார்கள்.

பள்ளிக்கூடம் முதலில் எங்கே இருந்ததோ அதே இடத்தில் திரும்பிப் போய்த் தொப்பென்று உட்கார்ந்தது. அதைப் பார்த்த பையன்களும், உபாத்தியாயர்களும் அவர்கள் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்த சிநேகிதர்களும், உறவினர்களும் சந்தோஷம் கொண்டார்கள்.

மந்திரவாதி கார்குருவின் வீட்டுக்கு வந்திருந்த மந்திரக் கிழவி ஒரு முக்கிய காரணத்துக்குத்தான் வந்திருந்தாள். சாதாரணமாக, கார்குர்தான் அடிக்கடி மந்திரக் கிழவியைத் தேடிப் போவானே தவிர மந்திரக்கிழவி கார்குருவின்வீட்டுக்குப் போவதில்லை. ஆனல் அவள் மால்கோஷின் மீதும், கலாவின் மீதும் அளவுகடந்த அன்பு வைத்திருந்தாள். அதற்குக் காரணம் அவர்கள் இருவருடைய புத்திசாலித்தனமும், அவர்களுடைய நடத்தையுமே தான். எப்படியாவது அவர்கள் இருவரும் சௌக்கியமாகத் தங்கள் வீடு திரும்ப வேண்டும் என்ற கவலைதான் அவளைக் கார்குருவின் வீட்டுக்கு வரவழைத்தது. மால்கோஷும் கலாவும் கார்குருவினல் ஏற்பட்ட விபத்துக்களைப் பற்றி மந்திரக் கிழவியிடம் சொல்லியிருக்கிறர்கள். மறுபடியும் அவர்கள் வீடு திரும்பும்பொழுது கார்குருவினல் தங்களுக்கு ஏதாவது ஆபத்து வருமோ என்று பயந்ததை மந்திரக் கிழவி ஞாபகத்தில் வைத்திருந்தாள். கார்குர் மால்கோஷின் மீது மிகவும் பகைமை கொண்டிருக்கிறன் என்பது அவளுக்குத் தெரியும். அதனல் அவன் பெண்ணுக்கும், பிள்ளைக்கும் தீங்கு இழைப்பதற்குச் சரியான சமயத்தைக் கார்குர் எதிர்பார்த்துக் கொண்டிருப்பான் என்று நினைத்தாள். ஆனல் கார்குர் மால்கோஷுக்குத் தீங்கு இழைத்து விட்டான் என்று அறிந்தவுடன் தனக்கும், மால்கோஷுக்கும், கலாவுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்பதைப் போலவே கார்குருவிடம் பேசிக் கொண்டிருந்தாள். அதனல் தான் கலா தனியாகக் கார்குருவின் வீட்டுக்கு வந்தபொழுது ஏதாவது விபரீதங்கள் ஏற்படப்போகின்றன என்று எண்ணிக் கலா தன்னைப் பார்ப்பதற்குள் தோட்டப் பக்கமாகக் கிழவி வெளியே சென்றுள்.

மறுநாள் காலை கலா திரும்பி மந்திர ஜமக்காளத்துடன் பறந்து சென்றவுடன் தான் கலாவுக்குக் கார்குர் ஒரு தீங்கும் இழைக்கவில்லை என்று அறிந்தாள். "ஆனல் கார்குர் கலாவுக்குத் தீங்கு இழைக்க நினைத்தது கடவுளின் செயலால் நடக்காமல் போயிற்று என்பது மந்திரக் கிழவிக்கு எப்படித் தெரியும்? கார்குர் மாத்திரம் அப்பொழுது கலாவுக்கு ஏதாவது தீங்கு செய்தான் என்றல் கட்டாயம் அது நடக்காதபடி மந்திரக் கிழவி கார்குருவிடம் தன் செல்வாக்கை உபயோகித்துச் செய்திருப்பாள். கார்குர் மால்கோஷுக்கு இழைத்த தீங்கைப் பற்றி மந்திரக் கிழவி கார்குருவின் வாயினலே கேட்டபொழுது, அவள் மனம் பதைபதைத்தது. கார்குர் மால்கோஷுக்குச் செய்த தீங்கு சாதாரணத் தீங்கு அல்லவே. ஒரு மந்திரவாதியும் எளிதில் நினைக்க முடியாத ஒரு பெரிய தீங்கை அல்லவா மால்கோஷுக்கு இழைத்து விட்டான்? கார்குர் முன்பின் யோசியாமல் அவசரப் புத்தியினல் ஏதாவது செய்து விடுவான். அவனுக்கு ஏற்றாற்போல மால்கோஷும் ஒன்றையும் யோசனை செய்யாமல் கழுதையின் நிழலை வரவழைத்தான். சிறுவனன மால்கோஷுக்கு எது நன்மை, எது தீமை என்று தெரிந்திருந்தால் இப்படிச் செய்திருப்பான? தெரியாமல் செய்ததனல் அல்லவா மால்கோஷ் ஒரு பெரிய தீங்கைச் சம்பாதித்துக் கொண்டான்?" என்று நினைத்தாள் கிழவி. (தொடரும்)



## ஒவ்வொருவருடைய கண்களுக்கும்.

**நியூ ஷொராக்** உயர்ந்த ரக பாப்லினால் தைக்கப்பட்ட சட்டை அணிந்திருக்கும்பொழுது நீங்கள் நேர்த்தியாக உடுத்திக்கொண்டிருக்கிறீர்கள்





Look for

**SANFORIZED**

on the label

தி நியூ ஷொராக் ஸ்பின்னிங் அண்ட் மான்யுபாக்சரிங் கம்பெனி லிட்., நடியாட்

SISTA'S-NS-30TAM

# மாலவல்லியின் தியாகம்

கி. ரா. கோபாலன்

அத்தியாயம் 23

## திருபுவனியின் திருமணம்

நூபுர நகரம் மிகவும் கோலாகலமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அந்த நகரத்துக் காவலரான பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தாரின் மாளிகை தேவேந்திர சபையைப்போல் தோற்றம் அளித்தது. வீதிகளெல்லாம் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டு நகரம் முழுவதும் மகிழ்ச்சியில் திளைத்தது.

இடங்காக்கப் பிறந்தாரின் அருமை மகள் திருபுவனிக்குத் திருமணம் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது என்னும் செய்தி நகர மக்களை யெல்லாம் ஆனந்தத்தில் ஆழ்த்தியது. பல வருஷங்களுக்கு முன்பு கள்வர்களால் அபகரிக்கப்பட்டு எங்கோ மறைவாக வைக்கப்பட்டிருந்த திருபுவனி இப்பொழுது தன் பிறந்த நாட்டுக்குத் திரும்பி வந்து விட்டாள் என்பதனால் மக்களுக்கு விசேஷ மகிழ்ச்சி உண்டாயிருந்தது.

பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தாரின் மாளிகையில் பல தேசத்துப் பிரமுகர்களும் வீரர்களும் ஏராளமாகக் குழுமியிருந்தனர். சேனைத் தலைவர்களும், குறுநில மன்னர்களும், பல ராஜ்யங்களிலிருந்து வந்திருந்த ராஜப் பிரதிநிதிகளும் அவரவர்களுக்கு அமைக்கப்பட்டிருந்த விடுதிகளில் சௌகரியமாகத் தங்கியிருந்தனர்.

பலவித மங்கள வாத்தியங்கள் ஒலிக்க விவாக முகூர்த்தம் ஆரம்பமாகியது. சுகேசி என்ற திருபுவனிக்கும் கங்கநாட்டு அரசன் பிருதிவீபதிக்கும் அமோகமாக விவாகம் நடந்தேறியது. விவாக மண்டபத்தில் மணத் தவிசுக்கருகில் நின்று மனப்பூர்வமாக ஆசி கூறியவர்களில் பூதுகன் முன்னணியில் இருந்தான். பட்டாடை புனைந்து பீதாம்பரம் போர்த்திக் கொண்டு பூதுகன் திவ்விய சுந்தர ரூபனாகத் திகழ்ந்தான்.

அழகொழுகும் அழகுத் தமிழில் இயற்றப்பட்ட திருமண வாழ்த்துக்கள் தங்கத் தகடுகளில் பொறிக்கப்பட்டு ஏராளமாக வந்து குவிந்திருந்தன.

முத்து விதானத்தில் விசேஷ அலங்காரங்களுடன் அமைக்கப்பட்ட மணத் தவிசில் சுகேசியும் பிருதிவீபதியும், இந்திராணியையும் தேவேந்திரனையும் போல்



அமர்ந்திருந்தனர். அங்கே ஒரு தனி ஆசனத்தில் ஜைன முனிவர் அரிஷ்ட நேமி அமர்ந்திருந்தார். இன்னொருபுறம் குடந்தைச் சோதிடர் சந்தகரும் காஞ்சி புரத்து விருந்தினர் விடுதிக்காவலனும் அமர்ந்திருந்தனர். கொடும்பாளூர் மன்னன் ஆதித்தனும் அவன் தம்பி பராந்தகனும் அமர்ந்திருந்தனர். கங்க நாட்டு மந்திரிமார்களும் படைத் தலைவர்களும் மரியாதைக்கு உரிய பெருந் தரத்து அதிகாரிகளும் வந்திருந்தனர்.

விதம் விதமான வண்ணச் சேலைகளை யணிந்து கொண்டு கூட்டம் கூட்டமாக அமர்ந்திருந்த பெண்கள் மணப் பந்தலில் வான வில்லின் வர்ண ஜாலங்களை எழுப்பினர். அவர்கள் கூந்தலை அலங்கரித்த வண்ண மலர்களின் நறுமணம் அகிற் புகையின் மணத்துடன் கலந்து கமழ்ந்தது.

பெண்கள் பகுதியில் வைகைமாலையும் சுதமதியும் புத்தாடையணிந்து மிகவும் உற்சாகத்துடன் அமர்ந்திருந்தனர். அவர்களுக்கு இடையில் பிக்ஷுணிக் கோலத்தில் மாலவல்லி அமர்ந்திருந்தாள்.



மலர் மாரி பொழிய மணவினை முடிந்ததும், இடங்காக்கப் பிறந்தாரின் மகன் பொற்கோமன் எழுந்திருந்துபேசலானான்:

"பெரியோர்களே! இந்த விவாகம் இவ்வளவு மகிழ்ச்சிக்கு இடையில் சுபமாக நடை பெறும் என்று நாங்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. வெற்றிவேற் பெருமான் அருளாலும் பெரியோர்களின் ஆசியாலும் நன்கு நடை பெற்றது. என் அருமைத் தங்கை திருபுவனியை நாங்கள் சின்னஞ் சிறு வயதில் உயிருடன் இழந்து விட்டது நம் நகர மக்களுக்கெல்லாம் தெரிந்ததுதான். ஆனால் அந்த இளம் வயதில், திருபுவனி எங்கே சென்றாள், எத்தகைய விபத்துக்குள்ளானாள், அவளைக் காப்பாற்றியது யார் என்னும் விவரங்களெல்லாம் யாருக்குமே தெரிந்திருக்க நியாயமில்லை. என் அருமைத் தங்கை திருபுவனியை, பயங்கரக் காபாலிகர்களிடமிருந்து காப்பாற்றித் தமது சொந்த மகளைப்போல் பேரன்புடன் வளர்த்த பெருந்தகையாளர் இதோ இங்கே வீற்றிருக்கிறார். இவரது திருநாமம் அரிஷ்டநேமி முனிவர். தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரான இம் முனிபுங்கவருக்கு என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். என் தங்கை திருபுவனிக்கு முனிவர் இட்ட பெயர் கங்கேசி. இனி அந்தப் பெயரும் இவளுக்கு உகந்த பெயராக விளங்கும். என் தங்கை பூர்வ ஜன்ம வினைக்கேடாகச் சில ஆண்டுகள் பெற்றோரையும் உற்றாரையும் விட்டுப் பிரிந்து கானகத்தில் வாழ நேர்ந்தாலும் முருகப் பெருமான் அருள் அவளுக்குப் பூரணமாக இருந்திருக்கிறது. இல்லையென்றால் ஜைனமுனிவரின் பாதுகாப்பில் வளர்ந்த அவளைக் கங்கநாட்டு இளவரசர் பிருதிவிபதி சந்தித்திருக்க மாட்டார். அப்படி அவர் சந்தித்திருந்தாலும் அவரிடம் அவளை ஒப்புவிக்கும் எண்ணம் இந்த ஜைன முனிவருக்கு ஒருகாலும் ஏற்பட்டிராது. பாத்திரமறிந்து அவர் செய்த அந்தக் காரியம் இன்று மங்கள மணவினையாகப் பரிணமித்து விட்டது...!" என்று கூறிப் பொற்கோமன் சிறிது நிறுத்தினான்.

இதுவரையில் மௌனமாக யாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த பூதுகன், "ஐயா! தயவு செய்து, உங்கள் தங்கை திருபுவனியைத் தேடி மீட்டுவரச் சென்ற இடத்தில் நிகழ்ந்த முக்கியமான நிகழ்ச்சிகளையும் அப்பொழுது எதிர்பாராத விதத்தில் பூம்புகார் புத்த சேதியத்தில் நேர்ந்து விட்ட ரவிதாஸன் கொலையைப் பற்றிய விவரங்களையும் எடுத்துச் சொல்லுங்கள். முக்கியமாக, வைகை மாலையின் உயிர்த் தோழியான மாலவல்லியின் மனம் நிம்மதியடையும்......!" என்று கூறி விட்டுப் பூதுகன் சற்றுத் தூரத்தில் அடக்கமே உருவாக அமர்ந்திருந்த மாலவல்லியையும், மற்றொரு புறம் குதூகலத்துடன் அகல விரிந்த நயனங்களினால் விழுங்க முயன்று கொண்டிருந்த வைகை மாலையையும் பார்த்தான்.

சபையில் பரிபூரண மௌனம் நிலவியது. சபையிலுள்ள பிரமுகர்களும், அயல் நாட்டுத் தூதர்களும், நகர மக்களும் மிகவும் ஆர்வத்துடன் பொற்கோமன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். எல்லோரையும் விட மாலவல்லியின் முகத்தில் பொங்கிய ஆர்வம் கட்டுக்கு அடங்காததாக இருந்தது.

"சபையோர்களே! நண்பர் பூதுகர் கேட்ட விஷயம் மிகவும் முக்கியமானது. நான் என் தங்கை திருபுவனியைத் தேடிக் கொண்டு ஊரூராக அலைந்தேன். அச்சமயம் பூம்புகார் புத்த சேதியத்தில் என் தங்கையைக் கொஞ்சமும் எதிர்பாராத விதத்தில் பார்த்தேன்.

பிக்ஷுணி உடையில் அவள் இருந்தாலும் அவளை நான் எளிதில் கண்டு கொண்டேன். உடனே அவளைத் தூக்கிக் கொண்டு செல்ல முற்பட்ட எனக்கு ஒரு பிக்ஷுவுடன் கடும் போர் புரிய நேரிட்டது. அவன் புலன்களை யடக்கி, புனித மூர்த்தியான புத்தர் பிரானின் அடியவன் மட்டுமல்ல, போர் முறைகளை நன்கு அறிந்த திடனுங்கூட என்பது அவனுடன் போரிட ஆரம்பித்த சிறிது நேரத்தில் விளங்கி விட்டது. கடைசியில் வேறு வழியில்லாமல் அவனைக் கொல்ல நேரிட்டது. அவன்தான் ரவிதாசன். நான் என் தங்கையெனக் கருதிக் கொண்டு போன பெண்தான் மாலவல்லி. மாலவல்லிக்கும் திருடவளிக்கும் விதிவசத்தால் ஏற்பட்ட உருவ ஒற்றுமையினால் நேர்ந்த விபரீதம் அது.

"மாலவல்லி நந்திபுர நகரத்துக்குக் கொண்டு வரப்பட்டு அரண்மனையில் பாதுகாப்பில் வைக்கப்பட்டு விடவே, அவளுக்கும் அந்தக் கொலைக்கும் தொடர்பு கற்பிக்கச் சௌகரியமாகப் போய் விட்டது. நிரபராதியாகிய அவளைச் சிறைப்படுத்திக் கொடுமைப் படுத்த நேர்ந்ததற்கு அவளிடம் இந்த மாபெரும் சபையில் மனப்பூர்வமாக மன்னிப்புக் கோருகிறேன்" என்று பொற்கோமன் உணர்ச்சியோடு பேசி முடித்ததும், சபையோர் அளவு கடந்த ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தார்கள்.

இதுகாறும் புகையுண்ட ஓவியம் போலவும், தடாகத்திலிருந்து பறித்து எறியப்பட்ட தாமரையைப் போலவும் பொலிவிழந்து கிடந்த மாலவல்லியின் முகத்தில் ஒரு புத்துணர்ச்சி உண்டாயிற்று. மாசு நீங்கிய மதியைப் போல் பிரகாசித்தாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் பிரவாகமெடுத்தது. உடனே வைகைமாலை எழுந்து ஓடிச் சென்று மாலவல்லியைத் தழுவிக் கொண்டாள்.

சபையிலுள்ளோர் மந்திர அட்சதை தூவி ஆசிகூற, பிருதிவிபதிக்கும் சுகேசிக்கும் திருமணம் பூர்த்தியாயிற்று.

ஆசிகூறிய பெருமக்கள் வரிசையில் தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளிகொண்டார், மதுரை அமைச்சர் அருண்மொழியார் முதலியவர்களும், பல்லவசேனாபதி உதயசந்திரனும், புலிப்பள்ளியார் மகன் கோளாந்தகன் முதலியோரும் அமர்ந்திருந்தனர்.

அரசவைக்குரிய ஆடம்பரங்களுடன் வீற்றிருந்த பிரமுகர்களையெல்லாம் மிகவும் மரியாதையுடன் வரவேற்றுப் பெருந்தக்க இடங்காக்கட்பிறந்தார் உபசரித்துக் கொண்டிருந்தார்.

பெண்கள் அமர்ந்திருந்த பகுதியில் இளம் பெண்களின் கிண்கிணிச் சிரிப்பொலியும், இன்பப் பேச்சும் கேட்டுக் கொண்டிருந்தன. அவர்களுக்கு இடையில் அழகின் பிரதிபிம்பமாகத் தேன்மொழியாள் அமர்ந்திருந்தாள். நொடிக்கொருதரம் பூதுகனது கம்பீரமான தோற்றத்தைக் கடைக்கண்ணால் பார்த்துப் புளகாங்கித மடைந்தவண்ணம் இருந்த அவளுக்கு இந்த உலகத்து நினைப்பே இல்லை.

ஜைன முனிவர் அரிஷ்டநேமி எழுந்து எல்லோருக்கும் ஆசி கூறினார். அருக பரமேஷ்டியின் திவ்ய நாமங்களைக் கூறிப் பிருதிவிபதியையும், அவன் அருகில் பூங்கொடி போல் துவண்டு பூரிப்புடன் இருந்த மணப் பெண் சுகேசியையும் ஆசீர்வாதம் செய்தார்.

"மகாஜனங்களே! மன்னர்களே! இன்று மணக் கோலத்தில் வீற்றிருக்கும் சுகேசி என் தவ வாழ்க்கையில் சஞ்சலத்தை ஏற்படுத்தி விட்டாள்.

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர்
அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு."—

என்ற வான்புகழ் வள்ளுவர் வாசகத்தை இப்பேதைப் பெண் தவமே பெரிதென நினைத்து வாழ்ந்த என் உள்ளத்தில் அழுத்தமாகச் செதுக்கி வைத்தான்.

“சுகேசிக்கு வயது வளர்ந்தது. வனப்பும் போட்டியிட்டுக் கொண்டு வளர்ந்தது; என் கவலையும் கூடவே வளர்ந்தது.

“தற்செயலாக நான் வசிக்கும் பிறதேசத்துக்கு வர நேர்ந்த பிருதிவிபதி இவளைப் பிடித்துச் செல்ல முயன்ற கன்னபிக்ஷு” கலங்கமாலரையரிடமிருந்தும், நந்திபுர நகரத்து வீரர்களிடமிருந்தும் இவளைக் காப்பாற்றி என்னிடம் ஒப்படைத்தான். பிருதிவிபதி தன்னைக் கங்கநாட்டு அதிபதியென்று உண்மையாக அறிமுகம் செய்துகொள்ளாவிட்டாலும் நான். அவனது கம்பீரமான தோற்றத்திலிருந்தும் பயமற்ற பேச்சிலிருந்தும் அவன் ஒரு நாட்டுக்கு அதிபதி என்பதைத் தீர்மானித்து விட்டேன். அது மட்டுமல்ல; சுகேசிக்கும் அவன்தான் அதிபதி என்று மனத்துக்குள் நிச்சயம் செய்து விட்டேன். இதன் பிறகு சில காலம் பிருதிவிபதியைச் சந்திக்க முடியாமல் பலவிதமான குழப்பங்கள் நேர்ந்தன. அந்தச் சமயத்தில்தான் நான் இருந்த ஆசிரமத்துக்கு மாலவல்லி வந்து சேர்ந்தாள். இளவரசர் பொற்கோமன் வந்து இருவரையும் அழைத்துச் சென்றார். இனிமேல் என் பொறுப்பு முடிந்தது. மணமக்கள் அன்பும் அஹிம்சையும் உள்ளமட்டும் வாழ்ந்திருக்கட்டும்!” என்று கூறிவிட்டு அரிஷ்டநேமி தம் இடத்தில் அமர்ந்தார்.

சுகேசியும் பிருதிவிபதியும் அரிஷ்டநேமி முனிவரின் பாதங்களில் தலை குனிந்து வணங்கினர்.

சுகேசியின் கரிய பெரிய விழிகளிலிருந்து பொலபொலவென்று கண்ணீர்த் துளிகள் சிந்தின.

அறிவிலும் அன்பிலும் சிறந்த அரிஷ்டநேமி அவளைக் கனிவோடு பார்த்தார். அவரது விழிக்கடைகளிலும் கண்ணீர்த் துளிகள் கடலில் பிறந்த நன்முத்துப் போல் சுடர்விட்டன. இந்த அரிய காட்சியைக் கண்ட சபையோர் அனைவரும் மனம் உருகி விட்டனர்.

“குழந்தாய் சுகேசி! நீ புத்திசாலி. உனக்கு நான் புதிதாக எதுவும் சொல்லப் போவதில்லை. ஒரு கன்னிகை கண் நிறைந்த கணவனை அடைவதுதான் பாக்கியம். கணவன்தான் அவளுக்கு உலகம், உற்றார், உறவினர் எல்லாம்” என்று கூறி எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து வெளியேறினார் முனிவர் அரிஷ்டநேமி.

கல்யாண விருந்து முடிந்து விருந்தினர் எல்லாரும் உல்லாசமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தனர்.

பால் நிலவு இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தது. அந்த இரவையும், இன்ப நிலவையும், மெல்லென வீசும் மந்தமாருதத்தையும், நகரம் முழுவதும் அமர்க்களமாக்கிக் கொண்டிருந்த திருமண வைபவத்தையும் மறந்து, இடங்காக்கப் பிறந்தார் மாளிகையின் வேயா மாடத்தில் சுகேசியும் பிருதிவிபதியும் அமர்ந்திருந்தனர்.

“சுகேசி! உன்னை நினைத்தால் என் மனம் கலங்குகிறது. உனக்கு ஏற்ற மணவாளன் நான் அல்ல. கள்ளமறியாத உள்ளம் படைத்த கனகமணி விளக்கு நீ; கைகூடாத காதல் என்னும் புயலில் சிக்கி, வழிதெரியாமல் அலையும் அதிர்ஷ்ட



ஹீனன் நான்” என்று பிருதிவிபதி கனிவும் கசிவும் கலந்த குரலில் சொன்னான்.

“பிரபூ! நான் மகா பாவி. இதயம் ஒன்றிய காதலர்களுக்குக் குறுக்கே முளைத்த காளான். மாலவல்லி உண்மையை என்னிடம் அப்பொழுதே மறைக்காமல் இருந்திருந்தால், இந்தத் தவறு நேர்ந்திருக்காது. கன்னிப் பருவத்தில் நான் முதன்முதல் கண்ட கட்டழகர் தாங்கள்தான். கானக வாழ்வில் வானுலகையே கண்டு வஞ்சமறியாது வாழ்ந்தவள் நான். என்னைப் பெற்றவர்கள் யாரென்று தெரியாமல் முனிவர் ஆசிரமத்தில் வாழ்ந்தேன். பிறகு தாங்கள் என் உள்ளத்தில் புகுந்து சலனம் விளைவித்தீர்கள். அந்த இன்ப அனுபவத்தின் எல்லையில் நான் அரச வம்சத்தைச்

சேர்ந்தவன் என்னும் உண்மை தெரிய வந்ததும், மிதமிஞ்சிய மகிழ்ச்சியில் ஆழ்ந்தேன். கடைசியில் நான் தங்களுக்கு உரிமைப் பொருளாகப் போகிறேன் என்று தெரிந்ததும் என் உள்ளம் கரைகடந்த உற்சாகத்தில் மிதந்தது.

"தங்களை முதன்முதல் கண்டதுமல்லாமல், என்னைப் பிடித்துக்கொண்டு போக வந்திருந்த முரட்டு மனிதர்களிடமிருந்து என்னை மீட்க வந்த தங்களது அன்புக் கர ஸ்பரிசமும் கிடைக்கப் பெற்றேன். அருணனைக் கண்ட அரவிந்த மலர் போல் இனம் தெரியாத இன்பத்தில் மலர்ந்தேன். அப்பொழுதுமுதல் என்னை மறந்தேன். பார்க்கும் பொருள்களிலெல்லாம் தங்களையே பார்த்தேன்; கனவிலும் உங்களையே கண்டேன்..." என்று கூறும் போதே சுகேசிக்குத் தொண்டையை அடைத்தது.



பிருதிவிபதி சுகேசியை அன்போடு அணைத்துக் கொண்டு, "சுகேசி! வருந்தாதே. உன் உள்ளம் என்னை நாடியதில் ஒரு தவறும் இல்லை. மாலவல்லியின் இன்ப வாழ்வில் உனக்கு உண்மையாகவே அக்கறை இருக்கிறதா, சுகேசி?" என்று கேட்டான்.

"பிரபூ, ஆணையிட்டுச் சொல்ல வேண்டுமா? இவ்வடியாள் பொய்சொல்லி அறியாதவள். மாலவல்லியின் வாழ்வுமலருவதற்காக நான் எத்தகைய தியாகத்தையும் செய்யச் சித்தமாயிருக்கிறேன். என் இன்ப வாழ்வையே துறக்க வேண்டுமென்றாலும் சரிதான்!" என்று சுகேசி தலைநிமிர்ந்து சொன்னாள்.

அவளுடைய தேகமெல்லாம் புளகம் உண்டாகிப் பூரித்தது. முழுமதியை நிகர்த்த அவள் வதனம் முழுச் சோபையுடன் பிரகாசித்தது. விசாலமான அவளது நயனங்கள் பிருதிவிபதியின் கம்பீரமான வதனத்தில் மயங்கி நின்றன.

"பிரபூ! தாங்கள் என் கணவர்; கடவுள்; அரசர். இப்பொழுது அரசராக இருந்து, மாலவல்லிக்காக நான் என்ன செய்ய வேண்டும் என்று கட்டளையிடுங்கள். தங்கள் கட்டளையை நான் நிறைவேற்றத் தவறினால் என்னைத் தங்கள் கைவாளுக்கு..." என்று சுகேசி சொல்லிக் கொண்டிருக்கும் போதே பிருதிவிபதி மாதுளை மலரை நிகர்த்த அவளது வாயைப் பொத்தினான்.

"அன்பே, சுகேசி! உன் அன்பின் ஆழத்தைச் சோதித்தேன். உன் வாள் விழிகள் என் கை வாளை எப்பொழுதோ மழுங்கச் செய்து விட்டன. உனக்குக் கட்டளையிடும் சக்தி எனக்கு இல்லை. நீ மாசற்ற மாணிக்கம்! உன்னை மனைவியாக அடைந்த நான் உண்மையில் பாக்கியசாலி!"

"பிரபூ, மாலவல்லிக்காக நான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தாங்கள் சொல்லவில்லையே?"

"சுகேசி! நீ அவளுக்காக எதையும் செய்யச் சித்தமாயிருக்கிறேன் என்று சொல்லி விட்டாய். அதைத்தான் நான் உன்னிடம் எதிர்பார்த்தேன். நாளை உனக்கு ஓர் அதிசயச் செய்தி காத்திருக்கும். இப்பொழுதே அதைப்பற்றிப் பேசி, இந்த இன்பம் நிறைந்த வேளையை வீணாக்க வேண்டாம்."

"பிரபூ! என்னிடம் தங்களுக்கு நம்பிக்கையில்லையா? ஏதோ புதிர் போடுகிற மாதிரி பேசுகிறீர்களே! இந்த வெண்மதியும் அதன் தண்ணிலவும், உங்களுக்கே அடிமையாகி விட்ட அடியாளும் எங்கே போய்விடப் போகிறோம்? மாலவல்லியின் வாழ்வை மலரச் செய்வதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்?"

"சுகேசி! இரவும், 'இளந் தென்றலும், இளமதியும், இன்ப உணர்ச்சியும் எங்கும் போய்விட மாட்டா என்றாலும், அவை எப்பொழுதும் யாரையும் இறங்க வைப்பதில்லை. வானத்தில் கூடும் கார் மேகம் எப்பொழுதும் மழையைப் பொழிவதில்லை. நாம் வேண்டுமென்று விரும்பிய போதெல்லாம் தென்றலை வரவழைத்துக் கொள்ள முடியாது...!"

பிருதிவிபதி இப்படிக் கூறி முடித்ததும் வானவீதியில் வெண்முகிற் கூட்டங்கள் சந்திரனை இலேசாக மறைத்தன.

நிலா மலர்ந்த அன்றைய இரவு அவர்கள் இருவருக்கும் வீணாகப் போய்விடவில்லை. (அடுத்த இதழ் முடியும்)

இந்தக் கதையில் வரும் ஒரு சம்பவத்தைத்தான் இந்த இதழ் அட்டையில் வண்ண ஓவியமாக வழங்கியிருக்கிறார் நமது ஓவியர் விநு.



# மோட்டார் ஓட்டும் வாய்ப்பு என்னுடையது

...ஆனால் இப்பொழுதில்லை. நான் பெரியவனானவுடன், என் தகப்பனாரைப்போல், ஒரு பெரிய டிரக்கை ஓட்டுவேன். கார் ஓட்டும் ஆசனத்தில் அமர்ந்து, என் டிரக்கில் கனத்த பளுவை ஏற்றிச் செல்லுவதில் பெருமிதம் அடைவேன். என் வேலை மிகவும் முக்கியமானது. ஏனெனில் நான் அன்றாடம் மக்களுக்குத் தேவையான உணவு மற்றும் ' பொருள்களை ஏற்றிச் செல்லுவேன்.

என் தகப்பனார் எப்பொழுதும் செல்லும் பர்மா-ஷெல் ஸர்வீஸ் ஸ்டேஷனில் என் டிரக்கிற்குத் தேவையான எண்ணெயை நிரப்புவேன். எல்லா டிரைவர்களும் செல்லும் சிறிய கடைக்குச் சென்று தேநீர் அருந்துவேன். நான் பெரியவனானவுடன், என் தகப்பனாரைப்போல் ஒரு டிரக் வாங்குவேன், அப்பொழுது எனக்கு மோட்டார் ஓட்டும் வாய்ப்பு உண்மையில் கிடைக்கும். ரஸ்தாக்களில் செல்லும் அநேக ஹெவி டியூடி டிரக்குகளும், பர்மா-ஷெல் வழங்கும் ஹைஸ்பீட் டீஸல் ஆயில் கொண்டு இயங்குகின்றன. இது மட்டுமின்றி, ஷெல் ரொட்டல்லா ரக எண்ணெய்கள் எவ்வித டீஸல் எஞ்சின்களுக்கும் சிறந்த லூப்ரிகேஷன் அளிக்கும்.

இந்நாட்டின் டீஸல் பவர் அபிவிருத்திக்கும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றிக்கும் முக்கிய அடிப்படையான சிக்கனமான போக்குவரத்து வளர்ச்சிக்கும் ஹைஸ்பீட் டீஸல் மற்றும் ரொட்டல்லா எண்ணெய்கள் உதவுகின்றன. எச். எஸ். டி. மற்றும் ரொட்டல்லா எண்ணெய்கள் எப்பொழுதும் நம்பகமானவை. மற்றும் அவைகள் நாடெங்கும் பரவியுள்ள எமது ஸர்வீஸ் மற்றும் விநியோக ஸ்தலங்களில் எப்போதும் கிடைக்கின்றன

**பர்மா-ஷெல் . . . பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**



# மழமழப்பான சுகமான க்ஷவரத்திற்கு...

வாழ்வில் வெற்றி கண்டவர்கள் வேறெந்த தயாரிப்பையும் நாடாமல்

## பாமாலிவ்

ஷேவிங் கிரீமைத்தான் உபயோகிக்கிறார்கள்







நுரையுடனோ அல்லது பிரஷ் இல்லாமலோ சிக்கனே தேர்ந்தெடுங்கள்

பாமாலிவ் என்றாலே உயர்ந்த ரகம்!

---

# உலகிலேயே அதிக விற்பனையுள்ள ஸைகிள்கள்



பகலும் இரவும், ஒவ்வொரு நிமிஷமும்
ராலே வகையறா ஸைகிள்கள்
இரண்டுக்குக் குறையாமல்
உலகில் எங்கோ விற்பனையாகின்றன.
இந்த வர்க்கத்தில் மிக்க விரும்
பப் படும் இரண்டு வகைகள்
ராலே, ராபின் ஹூட் ஆகும்—
அழகிய தேசறறம் கொண்டு,
சவாரிக்கு சௌகர்யமாகவும்
வைத்துப் பராமரிக்கச் சிக்கன
மாகவும் உள்ளன.




# ராலே ராபின்ஹூட்

SRC-48 T



# மீனுவின் உயில்

ஸ்ரீப்ரியா

விடுமுறைக்குப் பிறகு பள்ளிக்கூடம் திறந்ததும் உபாத்தியாயினிகள் அனைவரும் பேசுவதற்குப் பல விஷயங்கள் இருந்தன.

அது ஒரு ஏழைப் பெண்கள் பள்ளிக்கூடம்; ஆனால் ஒரு மானேஜ்மெண்டின் கீழ் நடப்பது. அந்தப் பள்ளிக்கூடத்தின் நடுக்கூடத்தில் ஏழெட்டு உபாத்தியாயினிகள் ஒரு பெரிய மேஜையைச் சுற்றி உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

ஆம், உபாத்தியாயினி மீனுவைப் பற்றித் தான் அவர்கள் பேசிக் கொண்டிருந்தனர். காலை அவளைப் பற்றிக் கேள்விப்பட்ட செய்தி!

மீனு அன்று காலையில் இறந்து விட்டாள்! இது முதல் அதிர்ச்சி. அதைவிட அவர்களுக்கு மிகவும் அதிசயமானது இறந்தவள் தனது கணக்கில் சேர்ந்திருக்கும் சேமிப்பு நிதி, தவிர தன் சொற்ப உடைமை, சொத்துக்கள் யாவற்றையும் பள்ளி நிர்வாகத்துக்கே எழுதி வைத்து விட்டாள். இருபது வருஷ சேவையில் குருவி மூக்கால் கொத்துவதுபோல் பைசா பைசாவாகச் சேர்த்த பணமல்லவா அது? இது அவர்கள் சம்பாஷணையில் முக்கியத்துவம் பெற்றது.

பள்ளிக்கூடச் சேவகன் ஒரு அறிக்கையைக் கொண்டு வரவே அவர்கள் பேச்சு சற்றுத் தடைப்பட்டது. உபாத்தியாயினி மீனுவின் மரணத்தை ஒட்டி அன்று பிற்பகல் வகுப்புகள் இடையாதென்றும், யாவரும் அவளது அந்திம ஊர்வலத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்றும் மானேஜர் உத்தரவுடன் தலைமை உபாத்தியாயினி அனுப்பிய அறிக்கையைக் கண்ட ஒவ்வொருவர் முகத்திலும் துயரம் தோய அங்கு சற்று அமைதி நிலவியது.

ஆனால் வாயாடி ராஜத்தால் வெகுநேரம் சும்மாயிருக்க முடியவில்லை. புதிதாக இந்த வருஷம்தான் பரீட்சையில் தேறிவிட்டு வேலை பெற்றுக் கொண்டிருந்த அவள் தன் கலகலப்பான குணத்தாலும், இனிய குரலாலும், வேலையில் ஊக்கத்தாலும் எல்லோரையும் கவர்ந்திருந்தாள். "என்னங்க, சாவித்திரி அம்மா, சுமார் நாலாயிரம் ரூபாய் இருக்குமாமே? தாராள மனசு பாவம் மீனுவுக்கு" என்றாள். அவள் பேச்சில்தான் என்ன குத்தல்!

"ஆமாம், பாவம்! அவளும் படிப்பு முடித்தது முதலே இந்தப் பள்ளிக்கூடத்தில் நுழைந்தாள். அவளுக்கு நிழல் தந்த இடமல்லவா இது? அதனால் இந்த ஸ்தாபன வளர்ச்சியில் தனி நன்றி அவளுக்கு..."

"பெரிய நன்றியைக் கண்டு விட்டாய்! திடுதிப்பென்று இப்படி ஒருத்தி தூக்கிக் கொடுக்க ஏதாவது விஷயம் இராமற் போகாது. அதுவும் மீனு டீச்சரா? அப்பப்பா! படுகஞ்சம், அவள்! தனக்கும் வயிறு நிறையச் சாப்பிடமாட்டாள்; பிறருக்கும் கொடுக்க மாட்டாளே! எச்சிற் கையால் காக்காய் ஓட்டாதவள் எழுதிவைத்து விட்டாளாம்! ஆச்சரியமாகத்தான் இருக்கிறது!"

இப்படி ஒவ்வொரு உபாத்தியாயினியும் மீனுவைப் பற்றி இல்லாதது பொல்லாததையெல்லாம் சொல்லத் தொடங்கவே அங்கே ஒரே சந்தை இரைச்சலாகி விட்டது.

அப்பொழுது "என்ன ஒரே இரைச்சல்!" என்று ஒரு குரல் கேட்கவே, உபாத்தியாயினிகள் அனைவரும் 'டக்'கென்று தங்கள் பேச்சை நிறுத்தினர்.

தலைமை உபாத்தியாயினி ஹெலன்ரோஸ் வந்து கொண்டிருந்தார்.

"இது என்ன வம்புமடமா? பள்ளிக்கூடமா? அவரவர் வேலையைப் பாருங்கள்." வந்த வேகத்தில் திரும்பினாள் அவள். "வைரத்துக்கும் கண்ணாடிக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள்! பழம் பெருச்சாளிகளுக்கு மீனுவை எப்படிப் புரியும்?" என்று அவள் முணுமுணுத்தது மற்றவர்களைவிட அதிகம் வம்பு பேசிய கமலாக்ஷிக்குச் சுருக்கென்றது.

படபடவென்று கத்திவிட்டாலும் இடத்தில் வந்து அமர்ந்த தலைமை உபாத்தியாயினிக்கு மன அமைதியில்லை. உலகம்தான் எத்தனை விசித்திரமானது? நல்லதை நல்ல மனத்துடன் எடைபோடவே மறந்து விடுகிறதே! தன்னுடைய செய்கைக்கு இப்படி ஒரு மாசு கற்பிக்கப்படுவது தெரிந்தால் மீனுவின் ஆத்மா சாந்தி பெறுமா?

தலைமை உபாத்தியாயினிக்கு முதல் நாள் இரவு நடந்ததும், தான் கேட்ட மீனுவின் கதையும் நினைவுக்கு வந்தன.



முதல் நாள் இரவு மணி எட்டிருக்கும்: ஹெலன் ஏதோ பள்ளிக்கூட வேலையில் ஈடுபட்டிருந்தபோது, வேலைக்கார அந்தோணி ஒரு சிறுமி கொடுத்ததாக ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தான்.





"மரணப் படுக்கையில் இருக்கிறேன். உடனே வரவும்—மீனு" என்று அதில் கண்டிருந்தது. ஹெலன் ஒரு கணம் திடுக்கிட்டாள். ஒரு பெண் மரணத்துடன் போராடும் போது, அவள் வீட்டுக்கு அகாலத்தில் செல்ல முதலில் தயக்கமா யிருந்தாலும், காலனைத் தான் முந்திக் கொள்ள வேண்டும் என்ற பரபரப்பில் அந்தோணியுடன் புறப்பட்டாள்.

கண்ணை மூடிக்கொண்டு கட்டிலில் கிடந்த மீனு தலைமை உபாத்தியாயினி ஹெலனின் வரவை உணர்ந்து விழித்துக் கொண்டாள்: "வந்து விட்டீர்களா? அதற்குள் போய்விடுவேனோ என்று பயந்தேன்." தாய்மையான மீனுவின் முகத்தில் சோகமும், விரக்தியும் பரவியிருந்ததாக ஹெலன் எண்ணினாள்.

"அதெல்லாம் ஒன்றும் ஆகாது. இதோ நாலு நாட்களில் குணமாகி இன்ஸ்பெக்ஷனுக்குள் வழக்கம்போல எனக்கு உதவி செய்ய வந்து விடுவாய்." பெரிய டீச்சரின் ஆறுதல் மொழி ஒரு வறட்டுச் சிரிப்பை மீனுவின் முகத்தில் வரவழைத்தது.

"வேண்டாம், டீச்சர்! அவதியின்றிப் போனால்போதும். நான் இருந்து என்ன பயன்? ஆனால் போகும்முன் ஒரு ஆசை..." மீனு சற்று நிறுத்தி அடுத்த வீட்டு வக்கீலை வரச் சொன்னாள். பின் தொடர்ந்தாள்: "எனது ஜீவியச் சேமிப்பை நமது பள்ளிக்கூட வளர்ச்சிக்கு எழுதி வைக்க விரும்புகிறேன். அவை என் சொந்த சம்பாத்தியம். வேறு யாருக்கும் உரிமை இல்லை!" அச் சமயத்தில் வக்கீல் வரவே மீனு சற்று நிறுத்தினாள்;

"இதென்ன மீனு, பெரிய விஷயமாகப் பேசுகிறாயே! உனக்கு என்ன வந்து விட்டது இப்போது?" என்று ஹெலன் அன்புடன் அவளைக் கடிந்து கொண்டாள்.

ஆனால் மீனு அதற்கு ஒரு மறுமொழியும் கூறாமல், வக்கீலிடம் தன் ஆசையைக் கூறி, நகல் எடுக்கச் சொல்லி, நடுங்கும் தன் கரங்களால் கையெழுத்தும் இட்டாள். இயந்திரம் போல் ஹெலனும் சாட்சிக் கையெழுத்து

போட்ட பின்பே மீனா மற்றவர்களை வாய் திறக்க விட்டாள்.

"இதெல்லாம் என்னம்மா, மீனா? இதற்கா என்னைக் கூப்பிட்டாய்?" வக்கீலின் குரல் தழுதழுத்தது.

"இல்லை ஸார்! நாம் முன்ஜாக்கிரதையாக இருப்பது எதற்கும் நல்லதல்லவா? சரி, நீங்கள் போங்கள். காலையில் இருந்தால் பார்க்கலாம்." மீனா வக்கீலுக்கு மேற்கொண்டு பேச இடம் அளிக்கவில்லை.

அவர் போனபின்தான் மிஸஸ் ஹெலன் ரோஸ் பக்கம் திரும்பினாள் மீனா. "என்ன பிரமித்து விட்டீர்கள்? இது என் வெகு நாளையத் தீர்மானம். நல்ல வேளை! கடைசி வரையில் நினைவுடனேயே இதைச் செய்ய முடிந்ததில் எனக்கு ரொம்பத் திருப்தி. இல்லாவிட்டால் தேனை ஈ மொய்ப்பது போல் பணத்துக்கு மட்டும் பங்கு கொள்ள வந்து விடுவார்கள் உறவினர்கள்."

"உனக்கு அப்படி மனிதர்கள்கூட இருக்கிறார்களா, மீனா? பின், பேசாமல் கடைசிக் காலத்தைப் பணத்துடன் அவர்களிடம் போய்






அமைதியாய்க் கழிப்பதுதானே?" என்றாள் ஹெலன்.

"உறவினர்களா? உண்மையில் அப்படிப்பட்டவர்கள் எனக்கு யாரும் இல்லை, டீச்சர். தவிர இந்தப் பணம் நம் ஸ்தாபனத்தைச் சேர வேண்டியதே. இதைக் கொண்டு சுகமாக வாழ எனக்கு உரிமை இல்லை......" மீனா ஏதோ சொல்லத் தயங்கினாள்.

ஹெலன் ரோஸ் அவளது முகத்தையே நோக்கிக் கொண்டிருந்தாள். "மீனா! ஏதாவது சொல்வதானால் தைரியமாகச் சொல்லம்மா. நான் உனது சகோதரிபோல. இருவரும் ஒரே நிலையில் இப்பள்ளியில் புகுந்தவர்கள்" என்று தழுதழுத்த குரலில் கூறினாள்.

மீனா ஒரு கணம் கண்களை இறுக மூடிக் கொண்டாள். "டீச்சர்! இன்று நான் சொல்லப் போவதைக் கேட்டால் நீங்கள் என் மீது உள்ள மரியாதையை இழந்து விடலாம். ஆனால் எனக்கும் அதை யாரிடமாவது சொன்னால்தான் மனம் ஆறும். தவிர இப்படி ஒரு பெருந்தொகையை நம் ஸ்தாபனத்துக்குத் தர நான் முன் வருவானேன் என்றும் நீங்கள் நினைக்கலாம். என் கதையைக் கேட்டு விட்டால் உங்களுக்கு விஷயம் புரிந்துவிடும்." தலையணையைச் சரி செய்து சற்றுச் சாய்ந்தாற் போல் நிமிர்ந்து உட்கார்ந்தாள் மீனா. அவள் முகத்தில் ஒரு தெளிவு ஏற்பட்டது.

★

மரணத்தை நெருங்கும் சகோதரனின் கடைசி தரிசனத்துக்குச் சென்றபோது தன்னை இப்படி ஒரு பந்தம் தொத்திக் கொள்ளும் என்று சீதம்மாள் நினைத்திருக்க மாட்டாள். ஆனால் மீனா அவளுடன் ஒட்ட வைக்கப் பட்டாள். ஆம், பிறந்த பத்து நாட்களுக்குள் தாயை இழந்தாள். எட்டாம் வயதில் தந்தையையும் இழந்துவிட்டாள். அவள் தந்தைக்கு இளையாளாக வந்திருந்த ஜயம் தன் குழந்தைகளுடன் பிறந்தகம் புறப்பட்டபோது மீனாவை ஏற்கத் தயாராயில்லை. தவிர, அவளுடன் சென்றால் மீனாவுக்குப் பிற்காலம் எப்படி அமையும் என்பதை, அக்கம் பக்கத்தினர் கூறிய கதைகள் மூலம் ஓரளவு புரிந்து கொண்டு விட்ட அத்தையின் மனமும் சிறிது அக்குழந்தையின்பால் இளகியது. போதாததற்குத் தம்பியே வேறு சாகும்போது, "என் பெண்ணை உன் பிள்ளைக்குப் பண்ணிக் கொண்டு விடு, சீதா. அவளைப் பற்றித் தான் என் கவலையெல்லாம்" என்று மனைவியின் காது கேளாதபடி கூறியதின் உள் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளக் கூடிய அனுபவமில்லையா அவளுக்கு? எப்படியோ சீதம்மாள் ஊர் திரும்பும்போது மீனா அவள் கையைப் பிடித்துக் கொண்டு விடுதலையை நோக்கிப் பறக்கும் கிளிபோல் சிறகடித்தாள்.

தாயுடன் தனக்கு ஒரு தோழியும் வந்தது கண்டு உண்மையாகவே ஆனந்தப்பட்டான் அத்தான் பாலு. மறுநாள் முதலே அவனுடன் பள்ளி செல்லலானாள் மீனா. இதுவரையில் பாத்திரம் துலக்குவதிலும், குழந்தைகள் சுமப்பதிலும் காலம் கடத்திய மீனாவுக்குத் தன் வயதுக்குக் குறைந்த வகுப்பில் படிப்பதற்கு வெட்கமாய்த் தானிருந்தது. அவளை ஊக்குவித்தவன் பாலுதான்.

வருடங்கள் எட்டு ஓடின. சீதம்மாள் ஓய்ந்து போனாள். எத்தனை நாட்கள் அவள் ஒண்டிக் காரியாய்க் கையாலானதைச் செய்து உழைத்துச் சம்பாதிக்க முடியும்? மூன்று உயிர்கள் இதுவரையில் அவள் உழைப்பில்தான் காலந் தள்ளின. சீதம்மாள் தளர்ந்து திகைத்த போதுதான் மணியான யோசனை ஒன்று

## 1956ல் 104,600,000,000 கோப்பைகளுக்கு மேற்பட்ட இந்தியத் தேநீர் உலக முழுவதும் அருந்தப்பட்டது.

சென்ற ஆண்டுக் இந்தியத் தேயிலை நம் நாட்டிற்கு அபரிமிதமான அந்நியச் செலாவணியை தேடிக் கொடுத்தது — இந்தியா 52.3 கோடி ராத்தல்கள் தேயிலையை வெளிநாடுகளில் விற்று 142 கோடி ரூபாய்களுக்கு மேல் பெற்றிருக்கிறது.

ஒரு ராத்தல் தேயிலை (அதிலிருந்து நல்லமுறையில் தேநீர் தயாரிக்கப்பட்டால்) சுமார் 200 கோப்பைகள் தேநீர் கொடுக்கும். ஆகவே 52·3 கோடி ராத்தல்கள் தேயிலை 104,60 கோடி கோப்பைகள் தேநீர் கொடுக்கும்.

நீருக்கு அடுத்தபடியாக உலக மக்களின் ஆதரவைப் பெற்ற பானம் தேநீராகும். அது சோர்வை போக்கி புத்துணர் வளிக்கிறது. மேலும் அதை எந்நேரத்திலும் பிறருக்கு அருந்தக் கொடுக்கலாம். உங்கள் நண்பர்கள் உங்கள் வீட்டிற்கு வந்தால், அவர்களுக்கு புத்துணர்வளிக்கும் தேநீர் கொடுத்து ஏன் பழைய இன்ப நினைவுகளை மறுமுறை நினைவுபடுத்திக் கொள்ளக் கூடாது?






**நான்தான் டீ — நட்பின் சின்னம்**

கூறினாள் மீனா. எட்டாவது முடித்துவிட்ட அவள் வெறுமனே மேல் படிப்பு படிப்பதையோ, அல்லது வீட்டோடு இருப்பதையோ விரும்பவில்லை. அவள் ஆசிரியைப் பயிற்சியில் சேர்வதற்குத் துடித்தாள். அதில் வெற்றியும் கண்டாள்.

மீனாவுக்கு அதிர்ஷ்டம்; பாஸ் செய்த வருடமே சென்னையின் சுற்றுப்புறமான சேத்துப்பட்டில் ஆரம்பித்த பள்ளியில் வேலையும் கிடைத்தது; முதல் சம்பளத்தை அத்தையின் கையில் வைத்தபோது அவள் மனம் பூரித்ததை விட, சீதம்மாவுக்கு ஏற்பட்ட சந்தோஷம் தான் அளவற்றது.

✶

பதினைந்து நாட்களாகப் பாலுவுக்குக் கடுமையான ஜுரம். டாக்டர் மருந்து எழுதிக் கொடுத்திருந்தார். அப்பப்பா! அதன் விலை......! பாலு ஜுர வேகத்தில் பிதற்றத் தொடங்கவே, அத்தை, "மீனா, நான் என்னடீ பண்ணுவேன்?" என்று அலறி விட்டாள். அது அவள் இதயத்தைத் துளைத்தது. இந்தச் சமயத்தில் தன்னால் உதவி யில்லாவிடில் இத்தனை நாட்கள் தன்னை வளர்த்தவளுக்குப் பலன், சுகம் ஏது? மீனாவுக்கு மனம் இருந்தது; மார்க்கம்தான் புரியவில்லை. அவளை நம்பி யார் கடன் தருவார்கள்?

ஐம்பது ரூபாய்!

மணி எங்கோ ஒன்பது அடித்தது; பரபரப்புடன் எழுந்தாள் மீனா. பள்ளிக்கு வேறு ஓட வேண்டும். மனம் பணத்துக்கு ஜபம் செய்ய, கரங்கள் இயந்திர கதியில் இதர அலுவல்களை யெல்லாம் முடித்தன.

பள்ளிக்கான நோட்ஸ்களை எடுத்துக் கொண்டு புறப்பட்டவளின் கையிலிருந்து நழுவியது ஒரு டப்பா. அதிலிருந்து தெறித்து விழுந்தது ஒரு கவர். மீனா பரபரப்புடன் அதைக் கையில் எடுத்தாள். அதன் ஸ்பர்சம்... அதில் அடக்கம்? மீனாவின் உடல் மின்சாரத் தாக்குதல்போல் நடுங்கியது. மூளையில் ஏதோ பொறி தட்டியது. கவருக்குள் கையை விட்டவள் மூன்று முறை தயங்கினாள். அவள் மனம் அலைமோதியது.

மீனா சற்று அமர்ந்தாள். அவள் எதிரே படபடத்தது டாக்டரின் சீட்டு. மணி ஒன்பதரை அடித்தது. மீனா மனத்தில் ஒரு தீர்மானம் உருவாகியது. இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு நகர்ந்தாள் அவள். அத்தையின் கலங்கிய முகமும், பாலுவின் துவண்ட நிலையும் இன்னும் சிறிது நேரம்தான். பின்? அவன் பிழைத்து விடுவான். அத்தையின் முகமும் மலரும்; அதற்காக அவள் என்னதான் செய்யக் கூடாது?

"அத்தை! இன்று பிற்பகல் பள்ளிக்கூடம் வருவதாக ஒரு பெண் மூலம் கடிதம் அனுப்பி விட்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள் மீனா. அவள் கையில் அந்தக் கவர்! வழியில் பாங்குக் கட்டடத்தைக் கடக்கும் போது அவள் இதயம் ஒருமுறை குலுங்கியது; கையிலிருந்த கவரை யாரோ பறிப்பது போல் இறுகப் பற்றியபடி நடையை எட்டிப் போட்டாள். மருந்துக் கடை வந்த பின்தான் அவள் வேகம் நின்றது.

பிற்பகல் மீனா பள்ளிக்கூடத்துக்கு வந்ததும் ஒரே பரபரப்பு. "மீனா டீச்சர் வழக்கம் போல் நம்ப ஸ்கூல் பணத்தைப் பாங்கியில் கட்டப் போனபோது எவனோ 'பிக்பாக்கெட்' செய்து விட்டானாம்..." இதே பேச்சு.

ஸ்தாபனப் பணம் ஐம்பது ரூபாய் தொலைந்ததற்கு மீனா இப்படி ஒடுங்கி விட்டாளே என்று எல்லோருமாக வியந்தபோது மீனாவின் உடல் இன்னும் கூசியது.

திருட்டுப் போனாலும், அஜாக்கிரதையின் விளைவாகத் தொலைந்ததில் பாதிப் பணத்தை மாதம் ஐந்து ரூபாயாக அவள் சம்பளத்தில் பிடித்துக் கொள்வதாக மானேஜர் கூறிய போது முழுத் தொகையையும் பிடித்துக் கொண்டால் நல்லது என்று மீனா நினைத்தாள்; அவள் எதிர்பார்த்த தண்டனைதானே இது.

மனச்சாட்சியைக் கொன்று கடமையையும், பாசத்தையும் முக்கியமாக்கி, செயலாற்றியவளுக்குச் செயல் முடிந்ததும் துணிவு பறந்து



விட்டது; ஆனால் இந்த நிலையில் அவளுக்கு ஆறுதல் தந்தது அத்தையின் நன்றிப் பெருக்கு ஒன்றுதான். தாய்க்குத் தலைப்பிள்ளையை உயிர்ப்பித்தவளல்லவா அவள்!

★

பாலு தெளிந்து தேறி எழுந்ததுமே பூனாவில் அவனுக்கு ஒரு வேலை கிடைத்தது. அத்தை முதலில் தூரதேசம் அனுப்பத் தயங்கினாலும், வேலையில் கைநிறையச் சம்பளமும், மேன்மேலும் கிடைக்கப் போகும் பிரமோஷனும் அவளைச் சமாதானப்படுத்த உதவின. மீனாவின் மனம்தான் தவித்தது.

பாலு சென்று மாதங்கள் ஆறு ஓடின; பள்ளிக்கூடச் சம்பளத்தில் அவள் பிடிப்பும் முடிந்து விட்டது. ஆனால் அதன் கனவுமட்டும் அவள் மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. மறுபேச்சின்றித் தான் சொன்னதை நம்பி, சொற்பத் தண்டனையுடன் தன்னை




மன்னித்த பழைய தலைமை உபாத்தியாயினி ஜிஜிபாய்க்குத் தான் கடமைப்பட்டவள் என்ற நினைவு அவளுக்கு ஒரு நாளுமே மறக்கவில்லை.

பாலு ஒழுங்காகக் கடிதம் எழுதினன். ஆனல் அவை வெறும் க்ஷேமக் கடிதங்களே. அத்தை அவன் திருமணத்தைப் பற்றிப் பன்முறை எழுதியும், அவன் அதுபற்றிப் பதிலளிக்கவே இல்லை. மீனுவின் மனமும் தினமும் தபால்காரனை எதிர் பார்த்துத் தவித்தது: என்ருவது ஒருநாள் தன் வாழ்வை வளுக்கப் போகும் ஒரு பொன்மொழி அவனிடமிருந்து வரத்தான் போகிறது என்று அவள் நம்பியிருந்தாள். கடைசியில் எதிர்பார்த்த கடிதமும் வந்தது......

ஆம், பாலுவிடமிருந்து தான் கடிதம் வந்திருந்தது. கனத்த கவரைக் கண்ட மீனு பரபரப்புடன் பிரித்தாள். அத்தைக்கு எழுதப் பட்டிருந்தாலும் செய்தி அறியும் ஆவலில் அவள் கண்கள் கடிதத்தைத் துழாவின:

'ஐயோ...அத்தை...' மீனுவின் திடீர் அலறல் அவளை இவ்வுலகுக்கு இழுத்து வந்தது. மறு கணம் மீனு துவண்டு விழுந்தாள்.

சிதம்மாள் பதறினள். "ஐயோ! என்ன சமாசாரமடீ? என் வயிற்றைப் பிசைகிறதே" என்ற அவள் அலறல் மீனுவைக் கண் விழிக்கச் செய்தது. எழுந்து உட்கார்ந்தவள் விம்மி விம்மி அழுதாள். "அத்தை! என் பாசமும், ஆசையும் மட்டுமா போயின? என் நேர்மையும் பறி போயிற்றே..." அத்தையின் முன்பாக மீனு முதன் முதலாகத் தன் தவறு பற்றி வாய்விட்டு அலறினள்.

அவளைச் சமாதானப்படுத்தி விஷயத்தைச் சிதம்மாள் கிரகிப்பதற்குள் போதும் போதும் என்ருகி விட்டது. "அத்தை! உங்களுக்கு மருமகள் வந்து விட்டாளாம்; பேரனும் பிறக்கப் போகிருனும்!"

ஆனல் இந்தச் சுபச் செய்தி அந்தத் தாய் மனத்தைக் குதூகலிக்கச் செய்யவில்லை. திகைப் பாய்ந்தது. "என்ன மீனு!" கடிதத்தின் வாசகத்தைப் பத்தாம் முறையாகத் தனக்குள் படித்து ஜீர்ஜிதம் செய்து கொண்டு கூறினள் மீனு.

"அத்தை! அவர் தமது ஆபீஸில் மேலதிகாரியாயிருக்கும் ஒருவர் பெண்ணை ரிஜிஸ்தர் மணம் புரிந்து கொண்டு விட்டாராம். அந்தத் திருமணத்தால் அவருக்குப் பலவிதத்தில் லாபமுண்டாம். திரண்ட செல்வத்துக்கு ஒரே வாரிசு. காரியாலயத்தில் பெருகப் போகும் செல்வாக்கு. இதைத்தவிர, அப்பெண்ணின் அழகும் குணமும் நாகரிகமும் தென்னிந்தியப் பெண்களுக்கு வராதாம். மேலும் என்னிடம் என்றும் அவர் மனத்தில் காதல் உண்டானதில்லையாம். எனக்கு நல்ல இடமாகப் பார்த்துச் சீக்கிரமே மணம் முடித்து வைக்கிறாராம். அது அவர் கடமையாம். அத்தை இவரை நம்பி நான் என்னையே மாசுபடுத்திக் கொண்டேனே!" என்று மீனு மறுபடியும் விசித்தாள்.

எதிர்பாராத் திடீர் அதிர்ச்சியால் மனம் உடைந்து விட்ட சிதம்மாள் மீனுவின் கடைசிச் சொல்லிலும் ஏதோ அர்த்தம் தொனிப்பதை இப்போதுதான் புரிந்து கொண்டாள். அதையும் கேட்டறிந்த போது அவள் மனம் பொங்கியது. "மீனு! என்ன துணிச்சல், அவனிடம் எத்தகைய ஆழ்ந்த அன்பு இருந்தால் நீ அப்படிச் செய்திருப்பாய்? அவனுக்காக என்னிடம்கூடச் சொல்லாமல், நீ செய்த தியாகங்களை உணரா மூடனாகி விட்டேனே, பாவி!" என்று பலவாறு அலறினள் அத்தை. மீனுவும் சொல்வதறியாது பிரமித்திருந்தாள்.

எவன் ஒருவனுக்காகத் தனது நேர்மையை இழந்து, மீனு மனமறியத் திருடினளோ, அதற்குத் தகுந்த தண்டனை அவன் மூலமே கிடைத்து விட்டது! அதைத் தொடர்ந்து மனத்தில் ஒரு உறுதி பிறந்தது.

தான் பெறும் சம்பளம் ஒவ்வொரு காசும் எந்த ஸ்தாபனத்தை அவள் வஞ்சித்தாளோ அதைச் சேர்ந்தது. ஆகவே, கூடியவரையில் உயிர் உடலில் தங்கியிருக்கத் தேவையான அளவுக்கு மட்டும் அதைச் செலவழித்துக் கொண்டு மீதியை அந்த ஸ்தாபன நலனுக்கு உபயோகித்தால்தான் அவளது கடன் அடைந்து அவளுடைய ஆத்மா சாந்தி பெறும். அப்படிச் சேமிக்கப்பட்டதுதான் இந்தத் தொகை."

கதை முடிந்தது:

மீனு கேட்டாள்: "மிஸஸ் ஹெலன்! நீங்களே சொல்லுங்கள். எனது இன்றைய முடிவு சரியா, தவறு? நான் பாவி. ஆனல் தவறை உணர்ந்து உருகி உருகிச் சாகிறேன். என் குற்ற மனப்பான்மை என்னைத் தீய்க்கும் அளவுக்கு, என் வாழ்வில் கண்ட ஏமாற்றமும் என் இதயத்தைக் குடைந்து விட்டது. இன்று எனது கடைசி ஆசையையும் இறுதி நேரத்தில் பூர்த்தி செய்து கொண்டு விட்டேன். எனது பிழையை நீங்கள் மன்னித்ததாகச் சொல்லுங்கள். தெய்வமும் என்னை மன்னிக்கும்......" மீனு தழுதழுக்கும் கரங்களுடன் தலைமை உபாத்தியாயினியின் கைகளைப் பற்றினள். மறுபடியும் நெஞ்சு வலி கண்டது.

"மீனு! அலட்டிக் கொள்ளாதே. தன் பாவத்தை நினைத்து உருகுபவனுக்குக் கர்த்தர் என்றும் மன்னிப்பு அளிப்பார். அதிலும் நீ அதற்குரிய தண்டனையையும் அநுபவித்து விட்டவள். கட்டாயம் உனக்குச் சாந்தி கிடைக்கும், அம்மா...!" ஹெலன் தன் கரங்களைக் கூப்பியபடி கர்த்தரை ஒரு கணம் வேண்டினள். மீனுவின் முகத்தில் அணையும் தீபத்தின் சுடரொளி பரவியது.

# இருமலின்
# மூலகாரணத்தை
# அகற்றுங்கள்

OF IMITATION

SIROLIN

'ROCHE'

For COUGHS COLDS

# ஸிரோலின்
# சாப்பிடுங்கள்

குடும்பத்தினர்
யாவருக்கும்
ஏற்ற
ஔஷதம்

ஸிரோலின் இருமலை நிறுத்து
வதோடு இருமலுக்குக் காரண
மான நீக்கிவைக்கும் கிருமி
களைக் கொல்லவும் செய்கிறது.

ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்
வால்டாஸ் லிமிடெட்




டி.கே.சண்முகம்-புத்தனேரி சுப்பிரமணியம்

நாலாபுறமும் மலைவளம் சூழ்ந்த நகரம் கோலாலம்பூர். அதிகாலை நேரத்தின் வனப்பை நோக்கினால் நிலமடந்தை மரகதப் புடவை உடுத்திக் கொண்டு பசுமையான காட்சி தருகிறாளோ என்றுதான் எண்ணத் தோன்றும்.

"பச்சைப் பசேலென்ற
வண்ணம்—எங்கு
பார்த்தாலும் பரவசம்
மிகவுண்டு பண்ணும்"

இந்த நகரம் தோன்றிச் சரியாக நூறு ஆண்டுகளே ஆகின்றன. மலேரியாக் காய்ச்சலின் கொடுமை சூழ்ந்த அடர்ந்த காட்டுப் பிரதேசமாக இருந்த ஓர் இடம் மலேயாக் கூட்டரசின் தலைநகரமாகத் தோன்றியிருக்கிறதென்றால் இது மனித சக்தியின் மகத்தான வெற்றி என்றுதானே சொல்ல வேண்டும்?

1857-ல் எண்பத்தேழு சீனர்கள் கிள்ளான் நதிக்கரை வழியாக அடர்ந்த காட்டுக்குள் நுழைந்து 'ஆம்பாங்' என்ற இடத்தில் ஓர் ஈயச் சுரங்கத்தை ஆரம்பித்தார்கள். ஒரு மாத காலத்துக்குள் அந்த எண்பத்தேழு சீனர்களும் பதினெட்டுப் பேர்களாகக் குறைந்து விட்டார்கள். அறுபத்தொன்பது பேர்கள் மலேரியாக் காய்ச்சலுக்குப் பலியாகி விட்டார்கள்.

எனினும் சீனர்கள் தளர்ச்சியடையவில்லை. மேலும் பலர் வந்து ஆம்பாங் பகுதியில் குடியேறினார்கள். ஈயச் சுரங்கத்தின் மதிப்பு உயர்ந்தது. சீன வர்த்தகர்கள் பலர் ஈய ஏற்றுமதியில் கவனம் செலுத்தினார்கள். குடியேறிய மக்கள் மலேரியாக் காய்ச்சலோடு போராடி வென்றதன் காரணமாக, ஈயச் சுரங்கம் உள்ள பகுதி ஒரு சிறந்த கிராமமாக விளங்கியது. கிராமத் தலைவர் 'காப்டன் சீனு' என்று அழைக்கப்பட்டார்.

இந்தப் பகுதியின் பெயர் 'கோலாலம்பூர்' என்று எப்படி மாறியது என்பதைத் தெரிந்து கொள்வதற்குப் போதிய ஆதாரமில்லை. 'கோலா' என்ற மலாய் வார்த்தைக்குச் 'சங்கமம்' என்று பொருள். சிறிய நதியொன்று பெரிய நதியோடு 'சங்கமம்' ஆகும் இடத்தை மலாய்க்காரர்கள் 'குவாலா' அல்லது 'கோலா' என்று அழைப்பார்களாம். 'லம்பூர்' என்ற மலாய்ச் சொல் 'மண்' அல்லது 'வண்டல் மண்' என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறதாம். இந்த நகரம் 'கோம்பக்' என்னும் சிறிய ஆறு 'கிள்ளான்' என்னும் பெரிய ஆற்றுடன் சங்கமம் ஆகும் இடத்தில் உண்டானதாலும், சங்கம பூமி வண்டல் வளம் உடையதாக விளங்குவதாலும், 'கோலாலம்பூர்' என்று பெயர் பெற்றிருக்கலாம் என்பதாகச் சிலர் கருதுகின்றனர்.

1880-ம் ஆண்டிலேதான் ஆங்கிலேயர்கள் மாகாணத் தலைநகரத்தைக் கிள்ளான் என்ற ஊரிலிருந்து கோலாலம்பூருக்கு மாற்றினார்கள். அந்தச் சமயம் கோலாலம்பூரில் ஐயாயிரம் மக்கள் வசித்தார்கள். சுமார் பத்து ஆண்டுகளுக்குள் நகர மக்களின் எண்ணிக்கை இருபத்தையாயிரமாக உயர்ந்து விட்டது. 1895ல் கோலாலம்பூர் மலேயாக் கூட்டரசின் தலைநகரம் என்ற சிறப்பை ஏற்றது. தலைநகரமானதன் காரணமாக நகரத்தின் வரம்பும் வனப்பும் மிக வேகமாய்ப் பரவின. இப்போது கோலாலம்பூரில் சுமார் மூன்று லட்சம் மக்களுக்கு மேல் வாழ்கிறார்கள்.

அரசாங்கத் தலைமை நிலைய மாளிகை, சிலாங்கூர் கூட்டுறவு மாளிகை முதலிய உயரமான பல எழில் மாளிகைகள் கோலாலம்பூருக்குச் சிறப்பளிக்கின்றன.

தலைநகரத்தில் வேகமாகப் பெருகி வரும் மக்களுக்குப் புகலிடம் தரவும், இடநெருக்கடியைத் தவிர்க்கவும் ஆறு மைல் தொலைவில் 'பெடாலிங் ஜெயா' என்ற புத்தம் புதிய நகரம் ஒன்று எல்லா வசதிகளோடும் உருவாக்கப்பட்டுள்ளது. ஏறக்குறைய எழுபதாயிரம் மக்கள் வசதியாக வாழ்வதற்கு ஏற்றவண்ணம் புதிய நகரம் அமைந்துள்ளது.

சென்னை மாநகர் மக்களுக்கு வனப்புமிக்க கடற்கரை ஒரு வரப்பிரசாதமாக இருப்பது போல் கோலாலம்பூர் மக்களுக்குப் 'பூமலை' என்ற தோட்டம் பயன்படுகிறது. இந்தப் பூமலை ஒரு செயற்கைப் பூந்தோட்டமல்ல! இயற்கையாகவே பூங்காவைப் போன்ற பொலிவுடன் மிளிர்கின்றது. பூமலைப் பகுதியில் உள்ள அழகான புல்வெளி பல மைல் தூரங்களுக்குப் பரவி, எத்தனை லட்சம் மக்கள் வந்தாலும் ஏற்று இடம் கொடுக்கும்









முறையில் அமைந்துள்ளது: பூமலைப் புல்வெளிக்கு ஊடாக மிக அருமையான சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. அந்தச் சாலைகளின் வழியே நடந்து சென்றாலும் சரி, காரிலே சவாரி செய்தாலும் சரி, ஓர் அலாதியான இன்ப உணர்ச்சி உள்ளத்தைக் கிள்ளும்.

பசுமையான பெரு நிலமாகப் பரந்து விரிந்த பூமலைப் பகுதியைச் சரியான முறையில் பயன்படுத்த வேண்டும் என்ற ஆவல் மலேயாவின் முதலமைச்சர் கனம் துங்கு அப்துல் ரஹ்மான் அவர்களுக்கு ஏற்பட்டது. மாநிலம் வியக்கும் மகத்தான கலை விழா ஒன்றைப் பூமலையிலே நடத்துவதற்கு அவர் ஆணை பிறப்பித்தார். அரசாங்கத் தகவல் இலாகாவினர் முன்னின்று நடத்திய இந்தக் கலைவிழா 1956ம் ஆண்டு ஜூலை மாதம் நிகழ்ந்தது. இவ்விழாவுக்குப் 'பெஸ்டா' என்று பெயர்.

நாங்கள் கோலாலம்பூரில் தங்கியிருந்தபோது, 'பெஸ்டா' விழாவின் சிறப்பைப் பற்றி நண்பர்கள் பலர் மனமார, வாயார வாழ்த்தினார்கள். விழாவைப் பற்றிய செய்திப் படத்தைத் தகவல் இலாக்காவினர் எங்களுக்காகத் தனியே திரையிடச் செய்தார்கள்.

"காணுங்கள், மலேயா வளர்க்கும் கலை வளத்தை!" என்று சொல்வது போல் பெஸ்டா விழா அமைந்திருந்ததைத் திரையிலே கண்டோம்.

மலாய் நாட்டுக்கே உரித்தான கலைநிகழ்ச்சிகள் மட்டுமில்லாமல் சீனர்களின் கலை நிகழ்ச்சிகளும், தமிழர்களின் கலை நிகழ்ச்சிகளும் கலை விழாவிலே இடம் பெற்றிருந்தன.

கலை விழாவுக்காகப் பூமலைப் பகுதியில் பதினொரு கலை மேடைகள் தனித்தனியே அமைக்கப்பட்டிருந்தன என்று அறிந்ததும் எங்களுக்குச் சிலப்பதிகார வரியொன்று நினைவுக்கு வந்தது.

"பதினொ ராடலும்
பாட்டும் கொட்டும்"

---

1. பூமலையின் ஏரியில் அலங்காரப் படகிலே அழைத்து வரப்படுகிறார் மலேயா முதல் அமைச்சர் துங்கு அப்துல் ரஹ்மான். 2. கலை விழாவில் நடைபெற்ற "சிற்பியின் கனவு" என்ற நாட்டிய நாடகத்தின் ஒரு காட்சி. 3. அறுபது அடி நீளமுள்ள கடல் நாக உருவத்தைச் சீன யுவர்கள் கழிகளிலே ஏந்தி ஆடும் ஒரு நடனம். 4. மூங்கில் குழாய்களை மரக்கட்டையிலே தட்டி இசை எழுப்பும் பழங்குடிப் பெண்கள்.

என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டதற்கு இணங்கப் பதினொரு அரங்குகளை அமைக்கும் எண்ணம் மலேயா அரசினர்க்கு எப்படி ஏற்பட்டது என்று வியந்தோம்.

"பலதேசக் கலைவாசம்
தலைதூக்கும் நிலைகண்டும்
மலையாமல் புதுநேசம்
வரவேற்கும் ஒருதேசம்"

என்ற புகழுக்குரியது மலேயா. பல்வேறு நாட்டு நாகரிகங்கள் மலேயாவில் வந்து இணைந்து பிணைந்துள்ளன. ஆயினும் கலாசாரங்களெல்லாம் ஒன்றோடொன்று மோதிக் கொள்ளாமல், இணக்கமாகப் பரிணமிக்கும் நீர்மையைப் பெற்றுள்ளன. பல வர்ணங்கள் சேர்ந்து அழகு பரப்பும் வானவில்லைப் போன்ற பல கலாசாரங்களின் சந்திப்பாக மிளிர்கின்றது மலேயா.

எனவே, மலேயாவில் வாழும் பல்வேறு இனத்தவரின் கலை நிகழ்ச்சிகளுக்கும் பெஸ்டா விழாவில் உரிய இடம் தந்து போற்றிய சிறப்பை மக்கள் கண்டு அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள்.

கலை விழாவைத் திறந்து வைப்பதற்காக முதலமைச்சர் திரு துங்கு அப்துல் ரஹ்மான் அவர்களை அலங்காரப் படகு ஒன்றிலே பூமலை ஏரியின் வழியே, முதல் அரங்குக்கு அழைத்துச் சென்ற கோலாகலமான காட்சியை ஏராளமான மக்கள் கண்டு மகிழ்ந்தார்கள்.

மலேயாவின் பழங்குடி மக்கள் நடத்திய கலை நிகழ்ச்சிகள் பெஸ்டாவின் மிகச் சிறந்த அம்சங்களாகும்.

மலேயாவின் பழங்குடிப் பெண்கள் பலர் வரிசையாக அமர்ந்திருக்கிறார்கள். ஒவ்வொருவருடைய கையிலும் குட்டையும் நெட்டையுமான மூங்கிற் குழாய்கள் உள்ளன. அவர்களுக்கு முன்னால் ஒரு பெரிய மரக்கட்டை இருக்கிறது. மூங்கில் குழாய்களைத் தாளத்தோடு மரக்கட்டையிலே தட்டுவதன் மூலம் இனிய நாதம் எழுப்புகின்றனர். பெண்கள் மூங்கிலால் இசைக்கும் தாளத்துக்கு ஏற்றவாறு ஆண்கள் கிராமிய நடனம் ஆடுகிறார்கள். பூர்வீகக் குடிகளின் இந்தப் பழமையான நிகழ்ச்சி நகர மக்களுக்குப் புதுமையாக இருந்ததில் வியப்பில்லையே!

நம்முடைய இசைவாணர்கள் புல்லாங்குழலை உதட்டிலே வைத்து இசை எழுப்புகின்றனர். ஆனால் 'சக்காய்கள்' என்று சொல்லப்படும் மலேயாவின் பூர்வீகக் குடிகள் சிறிய மூங்கில் குழல்களை மூக்கிலே வைத்துப் புதுமையான நாதம் எழுப்புகின்றனர்.

இவைகளைப் போலவே பழங்குடி மக்களின் நிகழ்ச்சிகள் அனைத்தும் உள்ளத்தைக் கவர்வனவாகவே இருந்தன என்பதில் ஐயமில்லை.

மலாய்க்காரர்கள் மிக ஆவலோடு ஆடும் நடனம் ரோங்கெங். பழங்காலத்தில் அரசவைகளிலே மட்டுமே நிகழ்ந்து வந்த ரோங்கெங் நடனம் இப்போது நாடெங்கும் பரவி, இது இல்லாத கலைக்கூடமே இக்லை என்ற அளவுக்கு மலேயாவில் பரவியுள்ளது. இந்த நடனத்தின் அடிப்படைத் தத்துவம் ஊடல் அல்லது பசப்புக் காதல் புரிதல் என்று சொல்லலாம்.

ஆணும் பெண்ணும் பங்கு கொள்ளும் இந்த நடனத்தில், ஆண் தன்னை நெருங்க விடாமல் பெண்ணானவள் விலகி விலகிச் செல்லும் ஊடல் நிறைந்த தன்மையான ஆடலைக் காணலாம். நடனத்தில் கலந்து கொள்ளும் ஆணும் பெண்ணும் ஒருவரை யொருவர் தொடக்கூடாது என்பது முக்கிய நிபந்தனை. இந்த நடனத்துக்கு ஏற்ற இசை எழுப்புவதற்கு ஒரு வகையான முரசு வாத்தியம் பயன்படுத்தப் படுகிறது. டொண்டாங்



1. கலை விழாவின் முகப்பு வாசல். "சங்குத்தான்" ஊதும் சக்காய்க்காரர். 2. பழங்குடி மக்களின் நடனம். 3. சக்காய்க்காரர் வாத்தியம். மூக்கினால் ஊதி இசை எழுப்புகின்றனர்.

சயாங், மாக்இனங், சங்காம் முதலிய பல வகைகள் ரோங்கிங் நடனத்தில் அடங்கியுள்ளன.

'தாரி பீரிங்' என்பது மலாய்க்காரர்களின் மற்றொரு நடன வகை. இந்த நடன முறை பல ஆண்டுகளுக்கு முன்பு சுமத்ராவிலிருந்து இறக்குமதியாகியிருக்கும் என்று சொல்லப்படுகிறது. இளம் பெண்கள் மட்டுமே இந்த நடனத்தில் பங்கு கொள்வார்கள்.

இந்த நடனமாடும் இளநங்கையர் அழகோடு ஆத்மசக்தியும் உடையவர்களாக இருக்க வேண்டும் என்ற நியதி உண்டு. ஏனெனில் இந்த நடனம் தெய்வ வழிபாட்டு முறைபோல் அமைந்தது. உணவுப் பொருள்களைத் தட்டுகளில் வைத்துக் கடவுளுக்கு நைவேத்தியம் செய்யும் பாவனையில் பெண்கள் பக்தி நடனம் ஆடுவார்கள்.

இளம் பெண்கள் மட்டுமே கலந்து கொள்ளும் மற்றொரு நடனம் 'தாரி சபோங்'. கிராமங்களில் திருமணம் போன்ற சமூக விழாக்களின்போது இந்த நடன நிகழ்ச்சி நடைபெறுவது வழக்கம். நடன அமைப்பு முறை சேவற்சண்டை போல் இருக்குமாம்.

ஆண்கள் மட்டுமே பங்கு கொள்ளும் நடன முறைகளும் மலாய்க்காரர்களிடம் உண்டு. அவற்றில் "தாரி லபி-லபி" என்பதும் ஒன்று. இந்த நடனத்துக்கு இசை மிகத் துரிதமாக முழங்கும். இசையின் வேகத்துக்கு ஏற்ப ஆட்டத்தினர் உக்கிரமும் அதிகமாகும். வேகம் உச்சநிலையை அடையும் சமயம் ஆடுபவர் மெய்ம்மறந்து ஆவேசத்தோடு மயக்கமடைந்து விடுவார். அவர் மயங்கும் வரை நடன நிகழ்ச்சி நடக்கும். ஆகவே, சில சமயங்களில் வெகு நேரமாகியும் நிகழ்ச்சி முடியாத நிலை ஏற்பட்டு, ஆட்டக்காரரைக் கையைப் பிடித்து மேடைக்கு உள்ளே இழுக்க வேண்டிய நெருக்கடியும் ஏற்படுவதுண்டாம்!

'ஓலக் மாயாங்' என்பது மீனவர்கள் ஆடும் பூஜை நடனம். ஒரு மணி நேரம் நடனம் நீடிப்பதற்குக் குறைந்தது ஏழுபேர்களாவது இருக்க வேண்டும். ஆட்டத்தின்போது ஒவ்வொருவராக ஆவேசம் அடைய வேண்டும். அப்படி ஆவேசம் வருவதற்கு ஏற்ற முறையில் பக்திப் பாட்டுக்கள் முழங்கும்.

"பெர்கா யோங் ஓட்டா ஓட்டா" என்பது உடல் வலிமையை உணர்த்தும் வீர நடனம். இந்த நடனம் ஆடுபவர்கள் சட்டிகளையும், வாள், கட்டாரி, கேடயம் முதலான போர்க் கருவிகளையும் அணிந்திருப்பார்கள். பழமையான சங்கீதத்துக்கு ஏற்றவாறு இரண்டு இரண்டு பேர்களாகச் சேர்ந்து வீர நடனம் புரிவார்கள். இவ்வாறு மேடையிலே மூன்று முதல் ஆறு ஜதை ஆட்டக்காரர்கள் பங்கு கொள்வார்கள்.

"சிலாட் பெஞ்சாக்" என்பது மலாய்க்காரர்களின் பழமையான தற்காப்பு நடனம். நமது நாட்டில் 'குஸ்தி' என்று சொல்கிறோமே அவ்வகையைச் சேர்ந்தது அது.

ஆடுபவர் ஒவ்வொருவரும் "சிலாட்" ஆட்டத்தில் தேர்ச்சி பெற வேண்டும் என்கிற கண்டிப்பு மலாய்க்காரர்களிடம் உண்டு.

"பெடிக்கிர் பாரத்" என்ற இசை நிகழ்ச்சியைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். கவிதையிலே ஆர்வமுள்ளவர்கள் இந்த நிகழ்ச்சியில் பங்கு கொள்வார்கள். இந்தத் தர்க்கப் பாட்டு நிகழ்ச்சி சில சமயங்களில் விடியும் வரையிலும் கூடச் சுவையாக நடப்பது உண்டாம். இந் நிகழ்ச்சியில் சாதாரணமாக எட்டுப் பேர்கள் கலந்து கொள்வார்கள்.

கிளந்தான் மாகாணத்தில் பிரபலமாக உள்ள "வயாங் குலிட்" என்னும் பாவைக் கூத்து நிழலாட்ட முறையில் நிகழ்கின்ற கலை நிகழ்ச்சி. திருமணம், பிறந்த நாள் போன்ற விழாக்களின் போதும், அறுவடைக் காலங்களிலும் இந்த நிழலாட்ட நிகழ்ச்சியை மலாய்க்காரர்கள் ஏற்பாடு செய்கின்றனர். இந்த நிழலாட்டத்துக்கு இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசக் கதைகளையே பயன்படுத்துகிறார்கள். ஒரே கதையைப் பல இரவுகளுக்கு நிழலாட்ட நிகழ்ச்சியாக நடத்துவது உண்டு. கதைக்குரிய பாத்திரங்களை அட்டைகளிலே உருவாக்கி, அவற்றை ஒரு வெள்ளைத்திரைக்குப் பின்புறமாக இருந்து கொண்டு ஆட்டி வைக்கிறார் பாவைக் கூத்துக் கலைஞர். அவர் அட்டைப் படங்களை இயக்குகின்ற வேகத்தில் திரைக்கு வெளியே நிழல் வடிவில் கதையானது விறுவிறுப்பாகச் செல்லுகிறது. கலை விழாவில் சீனர்கள் நடத்திய "கடல் நாக நடனம்" கலையன்பர்களின் கவனத்தை மிகவும் கவர்ந்த ஒன்று.

கலை விழாவிலே இந்தியர்களின் கலை நிகழ்ச்சிகள் பலவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. கோலாலம்பூர் சங்கீத அபிவிருத்தி சபா, ஈஸ்டர்ன் ஆர்ட் சொஸைட்டி, பரத நடன சபா ஆகிய கலைக் கழகங்கள் சிறந்த பரத நாட்டியம் கதகளி போன்ற நிகழ்ச்சிகளையும், நாட்டிய நாடகங்கள் சிலவற்றையும் நடத்திப் பிற இனத்தவர்களின் பாராட்டுதலையும் பெற்றார்கள் என்று அறிந்து பெருமிதம் அடைந்தோம்.

முதன் முதலாகப் பூமலை மாநகரில் மாபெரும் கலை விழா மிகச் சிறப்பாக நடத்துவதற்குக் காரணநாயகராக விளங்கிய முதலமைச்சர் திரு துங்கு அப்துல் ரஹ்மான் அவர்களின் கலையார்வத்தை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

"பலநாட்டுக் கலைவண்ணம்
பகையெதுவும் இன்றிப்
பக்குவமாய்க் கலந்தொளிரும்
வான்வில்லைப் போன்ற
மலைநாட்டில் மக்களெலாம்
குடியுரிமை பெற்று
வாழ்வதற்குச் சுதந்திரமாம்
வழிதேடித் தந்த
தலைவா! இந் நாட்டினிலே
சமத்துவமே பேணும்
தங்கமனம் படைத்தோனே!
துங்கு ரஹ்மானே!
கலைவாழப் 'பெஸ்டா'வைக்
கண்டமுத லமைச்சே!
கைகூப்பித் தொழுகின்றோம்
கலையுறவினாலே."

இவ்வாறு முதல் அமைச்சருக்குப் பாமாலை சூட்டக் கவிதை உள்ளம் முந்திக் கொண்டது.

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 41. ஙப்போல்......

விட்ட இடத்தில் தொடங்குவதானால்-மழை குளிர் காலங்களில், காலத்தின் விபவத்தால் ஏற்படும் நோய்களுக்குள்ள பரிஹாரங்களைப் பற்றிச் சொல்லி வந்ததை ஞாபகமூட்ட வேணும்.

ரூமாடிஸம் என்பது......

'ரூமாடிஸம்' என்பதைத் தமிழிலுள்ள 'ங' என்னும் எழுத்தைப் போன்றதென்று சொல்லலாம்.

அடாடா! இதென்ன தமிழுக்கு ஒரு புதிய கௌரவம் என்கிறீர்களா?

"ஙப்போல் வளை" என்று கேட்டிருப்பீர்களே! இதன் பொருள் என்ன, தெரியுமா? ங என்னும் எழுத்தில் ஒரு சவுக்கம் - ஒரு குழைவு - மறுபடியும் ஒரு சவுக்கம் என்று இப்படியெல்லாம் உள்ள அமைப்பின் அழகைச் சொன்னதாகப் பொருள் படுத்தக்கூடாது. ங் என்பது தானே மெய்யெழுத்து? ங முதல் ஙௌ வரையிலுள்ளவை உயிர்மெய் எழுத்துக்கள், ங, ஙா என்று சொல்லிக் கொண்டு வரும் பள்ளிச் சிறுவன் ங் என்று இத் தொடரை முடிப்பான். ஆகவே இத் தொடரில் ங முதலெழுத்து, ங் கடை எழுத்து. இவ்விரண்டு எழுத்துக்களைத்தான் நாம் உபயோகிக்கிறோம். ஙா—ஙி—முதலான ஙௌ வரையில் உள்ள எழுத்துக்களை உபயோகிக்க அவசியம் ஏற்படுகிறதா? ஆனாலும் அவைகளையும் கற்கத்தானே செய்கிறோம். இப்படியாகப் பயனற்றவையான இதர எழுத்துக்களும் இடம் பெற்றுக் கற்கப் படுவது இந்த 'ங' என்ற எழுத்தினால் தானே? ங என்பது தலை எழுத்து. ங் என்பது கடை எழுத்து. இடையிலுள்ளவை?

ரூமாடிஸம் என்பதிலும் இவ்வித அசாதரணமான ஓர் இயல்பு இருக்கிறது. ஆமவாதம் என்பது ஒன்று. ரத்தவாதம் என்பது இன்னொன்று. இவ்விரண்டையுமே ரூமாடிஸம் என்று அழைப்பர். ஆகவே, இந்தரூமாடிஸத்தில் ங — ங் இரண்டும் அடங்கி இருக்கின்றன. இதில் ஆமவாதம் 'தலை' எழுத்து; ரத்தவாதம் 'கடை' எழுத்து. இடையில்...?ஸயாடிகா-லம்பாகோ-என்பது போன்றவை வேறு. கிருத்ரஸி கடிக்ரஹம், ஊருஸ்தம்பம், அப்பாஹுகம் என்று இப்படி எல்லாம் ஏற்படும் வாத ரோகங்கள் 80 என்று நம் நாட்டு வைத்திய நூல்கள் தெளிவுபடுத்துகின்றன.

"ஒரே இனத்தைச் சேர்ந்த இவற்றை எதற்காக இப்படி 80 வகை என்று பிரித்துச் சொல்லி—சாஸ்திரத்தைப் பெருக்கி நமது மூளையையும் குழப்பி... கஷ்டம், கஷ்டம்" என்கிறீர்களா?

கோபிக்காதீர்கள். சிகிச்சை வரையிலும் அவசியமான அளவுக்கு-அதிலும் கை வைத்தியமாகச் செய்து கொள்வதற்குத் தேவையான அளவுக்கு இவற்றின் பாகுபாடுகளைத் தெரிவித்து விடுகிறேன்...மிகவும் சுருக்கமாகவே.

ஆமவாதத்தில் நெய்ப்புள்ள தைலங்களைச் சூடுள்ள நிலையில் மேலுக்கு உபயோகிக்க வேண்டும். ஒத்தடங்கள் போட்டுச் சூடு உண்டாக்கலாம்.

ரத்தவாதத்தில் நெய்ப்புள்ள தைலங்கள்-தண்மைக் குணமுள்ள மருந்துகளால் தயாரித்தவை-உபயோகிக்கலாம். சூடு என்பதே தலைகாட்டக் கூடாது. ஒத்தடங் கொடுத்தல்-வேது பிடித்தல் போன்றவை செய்யவே கூடாது. இப்படி இரண்டுக்குமிடையே சிகிச்சை விஷயத்தில் ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையான முறைகளைக் கையாள வேண்டும்.

"இது என்ன நோய்? இதன் லக்ஷணங்கள் என்ன? என்று சொல்லாமலே ...... சிகிச்சை விஷயமான அடிப்படைத் தத்துவத்தைப் பற்றி விமர்சனம் ஆரம்பித்து விட்டானே" என்று எண்ணுகிறீர்கள். இதோ அதற்கும் வந்து விட்டேன்.

வாயு-கீல் வாயு - முட்டுவாயு - என்னும் நோய்; இதில் பூட்டுக்குப் பூட்டு வீக்கம்-வலி-தொட்டால் வலி-தொடாவிட்டாலும் தெறிப்பு - எரிச்சல்



போன்ற கஷ்டம் ...... நீட்டவோ, மடக்கவோ, அசைக்கவோ முடியாது. சும்மா இருந்தாலும் வலி, எரிச்சல், குத்தல், சுரம். இப்படிப் பலவித உபாதைகளின் சேர்க்கையை இந்நோயில் காணலாம். இதைத்தான் ''ருமாடிஸம்'' என்பர்.

ஏற்கெனவே சொன்னதுபோல் இதை ஆமவாதம், ரத்தவாதம் என்னும் இரண்டு தலைப்பின்கீழ் அறிவதுதான் சிகிச்சை விஷயத்தில் சௌகர்யமானது.

இவற்றில் ரத்தவாதத்துக்குச் சிகிச்சை செய்வது சிறிது எளிது. ஆமவாதத்துக்கு அவ்வளவு எளிதல்ல.

ரத்தவாதத்தில் அனேகமாக முதன் முதலில் காலில் ஒரு பூட்டில்தான் வலியும் வீக்கமும் தொடங்கும். தொடங்கும்போதே கனவேகமான ஜுரமும் இருக்கும். ஒரு சிலருக்குக் கையிலும் தொடங்குவதுண்டு. பிறகு ஒவ்வொரு கீல்களுக்கும் இந்த வீக்கமும் வலியும் பரவும். சற்றுக் குறைந்தாற்போலிருக்கும் ஜுரம் திமீர் திடீரென்று அதிகரிக்கும். ஒவ்வொரு முறை அவ்விதம் அதிகரிக்கும்போதும் புதிய புதிய பூட்டுகளில் வீக்கமும் வலியும் பரவும். அல்லது ஏற்கெனவே பாதிக்கப்பட்டுள்ள பூட்டில் வீக்கம் வலி இவை அதிகரிக்கும். சிறியவை பெரியவை என்ற பாகுபாடின்றி எல்லாப் பூட்டுகளிலும் இந்நோய் பரவும். கழுத்திலுங்கூட வீக்கமும் வலியும் ஏற்படும். விரல்களின் சிறிய கணுக்களிலும் இது ஏற்படும்.

சில சமயங்களில் பூட்டுகள் இல்லாத துடை போன்ற சதைப் பற்றுள்ள இடங்களிலும் இவ்வீக்கம் ஏற்படும். சிவந்த நிறத்துடன் இருக்கும் இவ்வீக்கமுள்ள இடங்களில் எரிச்சலும் 'விண் விண்' என்ற தெறிப்பும் சும்மா இருக்கும்போதே சகிக்க முடியாத அளவில் இருக்கும். நோயாளி படுத்திருக்குமிடத்தை அடுத்து நாம் நடந்தாலும் ஓர் அதிர்ச்சியுடன் வீக்கமுள்ள பூட்டில் சம்மட்டி கொண்டு அடிப்பது போன்ற வலி ஏற்படும். நோயாளி 'ஓ' என்று அலறி விடுவர். இன்னும் நோயாளி படுத்திருக்கும் கட்டிலைத் தொட்டாலோ அல்லது அசையும்படி நம் கால் தட்டினாலோ என்ன ஆகுமென்பதைச் சொல்லி முடியாது. ஜுரவேகமும் வீக்கமும் வலியும் போட்டி போட்டுக் கொண்டு ஏறுவதும் புதிய இடங்களுக்குப் பரவுவதுமாயிருக்கும். வீக்கமுள்ள இடங்களில் ரத்த ஓட்டம் ஓரளவு ஸ்தம்பித்திருப்பதுதான் அதன் எரிச்சல்—சிவப்பு நிறம் தொட்டால் சூடு, தொட முடியாத வலி ஆகியவற்றுக்குக் காரணம். பசியும் இருக்கும். நாக்கும் பூத்திருக்கும். வாயில் கசப்புச் சுவை இருக்கும். தணுப்புள்ளவற்றில் இச்சை இருக்கும்.

சிகிச்சைக்கு வசப்படாமல் போகுமானால் வீக்கமுள்ள இடம் ஒரு கட்டியைப் போல் பழுத்து விடும். அப்போது எரிச்சல் ஓரளவு குறையும். ஆனால் சீழ் பிடிக்கத் தொடங்குவதால் குத்தல் வலி ஏற்படும். பிறகு இது ஒரு கட்டியைப் போல் உடைந்து சீழும் ரத்தமும் வெளிப்படும். இவ்விதமானால் அந்த ரணம் ஆறுவது வெகு சிரமம். ஆகவே இது நேராமல் சிகிச்சை செய்வது அவசியம்.

ஆமவாதம் இதற்கு மாறானது. சாதாரணமாக இது விரல் கணுக்கள் போன்ற சிறிய பூட்டுகளில் வருவதில்லை. இதில் ஜுரம் அவ்வளவு அதிகமாயிருப்பதில்லை. வீக்கம் வெளுத்தோ கறுத்தோ இரண்டும் கலந்துமோ இருக்கும். ரத்தவாதத்திலுள்ளது போல் சிவப்பாயிராது. இந்த வீக்கம் அப்படி விசேஷமான சூடுள்ளதாயிராது. அமுக்கினால் கடினமாயுமிருக்கும். மடக்கல், நீட்டல் போன்ற சேஷ்டைகள் செய்யும் போது தான் வலி இருக்கும். மற்றச் சமயங்களில் அப்படி ஒரு விசேஷமானவலி ஏதும் இராது. மணிக்கு ஒரு பூட்டு வீதம் வியாபிப்பதும் நிமிஷத்துக்கு ஒரு சுற்று வீக்கம் அதிகரிப்பதும் இராது. பசி மந்தித்திருக்கும். மலபந்தமிருக்கும். அதிகத் தூக்கம் அல்லது ஒருவகை தூங்குமூஞ்சித் தனம் இருக்கும். நாக்கு வெளுத்திருக்கும். வாயில் இனிப்பு அல்லது உப்புச் சுவை இருக்கும். காரமானதும் சூடுள்ளதுமான பண்டங்களில் இச்சை இருக்கும்.

இவ்விருவகை வியாதிகளுக்கும் சிகிச்சை முறை ஒன்றுக்கொன்று எதிர்மறையானது.

(தொடரும்)

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறர்


















# வளர்ந்த புகழ்



விநோதினிக்காக எவ்வளவு நேரம்தான் கோமதி காத்துக் கொண்டிருக்க முடியும்?

"புடலங்காயையும் வெண்டைக்காயையும் நறுக்கி வைத்து விட்டு வந்தேன். மணி பத்திருக்கும். போய் அடுப்பு மூட்டி உலையேற்றினால் தான் நேரத்துக்குச் சமையல் ஆகும். குழந்தை வேறு எழுந்து கத்திக் கொண்டிருக்கும்" என்றாள் கோமதி.

"இன்னும் கொஞ்ச நேரம் இரேன்" என்றாள் விநோதினி.

"நன்றாகத்தான் இருக்கிறது! அம்பாரம் துணியைச் சவுக்காரத்திலே போட்டு முக்கி வைத்திருக்கிறாய். மழை வந்து கொட்டும் போல இருக்கிறது" என்று கோமதி சொல்லி விட்டுப் பதிலை எதிர்பாராமல் சலசலத்து ஓடும் ஆற்று நீரில் கழித்து விட்டு, குடத்தில் தண்ணீரை மொண்டு இடுப்பிலே தூக்கி வைத்துக்கொண்டு கரையேறினாள்.

கோமதி சொன்னதுபோல் மழை வந்து கொண்டுதான் இருந்தது. வான மண்டலம் முழுவதும் புகைப் படலம் போலக் கரிய மேகங்கள் திரள் திரளாகச் சூழ்ந்துகொண்டிருந்தன. சில்லிப்பான வாடைக் காற்று உடலை ஊடுருவி எலும்பைத் தாக்குவது போலிருந்தது. ஆற்று நீர், முதல் நாளைவிட ஒரு முழும் பெருக்கெடுத்திருந்தது. எதிர்க் கரையில் நாலைந்து வெள்ளாடுகளை ஓட்டிக் கொண்டு போன ஒரு கிழவனைத் தவிர, சுற்று வட்டாரத்தில் ஜன சஞ்சாரமே இல்லை. அருகிலிருந்த மூங்கில் பாலத்தின் கைப்பிடிக் கழியின் மேல் உட்கார்ந்திருந்த மீன் கொத்திப் பறவையின் அலகுகளிடையே சிறு மீன் ஒன்று துடித்துக் கொண்டிருந்தது. எதிர்ப் புறத்தில் சற்றுத் தொலைவிலிருந்த நாணற் புதரில் மறைந்திருந்து செம்போத்து கத்திக் கொண்டிருந்தது.

அவசரம் அவசரமாக நுரை கவர்ந்திருந்த துணிகளை எடுத்து ஒவ்வொன்றாக அலசிப் பிழிந்து எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டாள் விநோதினி. ஈரப் புடவையின் முந்தானையை இடுப்பிலே சுற்றிக் கொண்டு நீர் தளும்பும் குடத்தோடு அவள் ஆற்றின் 'லேன்' கரையை அடைந்ததும் மழை சோனு மாரியாகக் கொட்டத் தொடங்கியது. வேக வேகமாக நடந்து அவள் தெருவுக்குப் போகும் வழியிலுள்ள பஜனை மடத்தை யடைந்து தாழ்வாரக் குறட்டிலே ஏறி நின்றாள்.

ஆற்றில் குளிப்பதற்காகக் குடையையும் சோப்புப் பெட்டியையும் எடுத்துக் கொண்டு கிளம்பிய முரளீதரன் மழையினால் மடத்துத் தாழ்வாரத்தில் ஒதுங்கி நின்றார். மடத்தின் கதவு பூட்டியிருந்தது. ஓடு மாற்றி எந்தக் காலமாயிற்றோ, தாழ்வாரத்தில் நாலைந்து இடங்களில் மழை நீர் ஒழுகிக் கொண்டிருந்தது. தரையெல்லாம் நீர்ப்பிரவாகம்.

முரளீதரன் சங்கோசமடைந்தார். அந்தப் பெண்ணும் அவரும் ஒரே தாழ்வாரத்தில் நின்று கொண்டிருப்பது அனுசிதமாகப் பட்டது. டில்லியிலோ, சென்னையிலோ பஸ் நிற்குமிடங்களில் மழையில் கூரைக்குக் கீழே முன்பின் அறியாத அன்னியப் பெண் ஒருத்தியோடு நிற்கக் கூடிய சந்தர்ப்பங்கள் பலவும் சகஜமாக ஏற்பட்டிருக்கின்றன அவருக்கு. எனினும் கிராமத்திலே இப்படிப் பட்ட எக்கச்சக்கமான நிலைமை அவருக்கு உபத்திரவம் அளித்தது. ஆற்றிலே குளித்து எத்தனை காலமாயிற்று. ஆவலோடு வந்தார் அவர். ஆனால் மழை பிடித்துக்கொண்டு விட்டது.

முரளீதரன் காலையில் குதிரை வண்டியில் இறங்கியபோது எதிர் வீட்டு வாசலில் பெண் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் பெயர் விலாசினியோ, விநோதினியோ அவருக்கு நினைவு இல்லை. ஐந்து வருஷங்களுக்கு முன்பு அவர் மாமா வீட்டுக்கு வந்திருந்த போது சின்னஞ் சிறு பெண் அவள். அப்பா! என்ன வாய்த்துடுக்கு! காசியில் முரளீதரன் அப்போது எஞ்சினியரிங் பரீட்சைக்கு வாசித்துக் கொண்டிருந்த சமயம். இந்த ஐந்து ஆண்டுகளில் இயற்கை அவளை எப்படி ஒப்பற்ற அழகியாக ஆக்கி விட்டது!

"அம்மா! இந்தக் குடையை எடுத்துக் கொண்டு போங்கள். மழை விட்டதும் நான் ஆற்றில் ஸ்நானம் செய்து விட்டு வருகிறேன்" என்று சொன்னார் முரளீதரன்.

விநோதினி அவரையே திரும்பிப்பார்க்கவில்லை. எதிரே சேர்ந்தாற்போல் வளர்ந்திருந்த அரச மரத்தையும், வேப்ப மரத்தையும் பார்த்துக் கொண்டிருந்தாள்.

*

'ஜாங்கிரி' என்னும் புனைபெயரில் திரை மறைவிலிருந்து தித்திக்கும் கதைகளும் நாவல்களும் எழுதிக் கொண்டிருக்கும் ஸ்ரீனிவாச வரதனின் வாழ்க்கை மிகக் கசப்பாக இருந்தது. பத்திரிகைகளெல்லாம் அவருடைய கதைகளுக்கு அமோகமாக வரவேற்பு அளிக்கத்தான் செய்தன. சமர்த்தாகக் கிராமத்திலே உட்கார்ந்து கொண்டு எழுதிக் கொண்டிராமல் தம்முடைய திறமைக்கு மிஞ்சிய காரியத்தில் அவர் பிரவேசித்தார். சென்னைக்குப் போய்ப் புத்தகப் பிரசுராலயம் ஒன்று தொடங்கிய பிறகுதான் எழுதும் கலைக்கும், பிரசுரத் தொழிலுக்கும் உள்ள பேதத்தை அவர் உணர்ந்தார். இந்த உணர்ச்சியின் கொள்முதல் அவருடைய பித்ரார்ஜித சொத்து. தாமே எழுதிய நாவல்களும், நாடகங்களும், கதைத் திரட்டுக்களுமாக ஏழெட்டுப் புத்தகங்களை வெளியிட்டு விற்பனையாகாமல் எஞ்சிக் கிடந்தவைகளை நிறுத்து மூர்மார்க்கெட்டில் பழைய புத்தகக் கடைக்காரர்களிடம் தள்ளிவிட்டு வெறுங் கையுடன் கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். வியாபாரச்

ஆ.ஜ. ஸௌகுந்த்ஜிபாகம்



சாமர்த்தியம் இல்லாமல், காரீயத்தைப் பொன்னாக்கலாம் என்று கனவு கண்டார் அவர். காரீயத்தினாலான அச்சுக்கள் அவருக்குப் பொன்னாய் விளையாமல் அவர் மனத்தைப் புண்படுத்தி விரட்டி விட்டன. மிகவும் பழைய கதை இது.

தமிழ் நாட்டின் பத்திரிகைக்காரர்கள் எல்லோரும் மிகுந்த அனுதாபத்துடன் 'ஜாங்கிரி'



யின் கதைகளைப் பிரசுரித்து அவருக்கு ஊக்கம் அளித்தார்கள். வாசகர்கள் அவருடைய கதைகளை ரஸித்துப் படித்து மகிழ்ந்தார்கள். ஆனாலும், என்ன, இந்தக் காலத்து சாதாரண மத்தியதர வர்க்கத்துக் குடும்பங்கள் எல்லாவற்றையும் போல, அவருடைய குடும்பத்தின் வரவும் செலவுமான இரு முனைகளும் ஒன்றோடு ஒன்று ஒட்டாமல் முரண்பட்டே யிருந்தன.

மசியை உதறி உதறிப் புள்ளிமான்தோல் போலச் செய்திருந்த அவருடைய மேஜையின் எதிரே நாற்காலியில் உட்கார்ந்து 'ஜாங்கிரி' எழுதிக் கொண்டிருந்தார்.

கனைப்புக் குரல் கேட்கவே, 'ஜாங்கிரி' திரும்பிப் பார்த்தார்!

"செட்டியார் பார்த்து விட்டு வரச் சொன்னார்!" என்றான் வந்த ஆள்.

"பார்த்து விட்டாய் அல்லவா! போய்வா"

"நல்லால்லீங்க இது."

"எது? எதுடா நல்லா இல்லே?"

"தீபாவளிக்கு ஜவுளி வாங்கினதற்கு இன்னும் பணம் கொடுக்காததுதான்: தீபாவளி மலர்களிலே நீங்கள் பணம் வரும் என்று சொன்னீங்களே!"

"பணம் வந்தது. நிறைய வந்தது. பத்திரிகைக்காரர்கள் மகாராஜாக்களாக நன்றாக இருக்கட்டும்! அமோகமாக அள்ளிக் கொடுத்தார்கள்!"

"அப்படியானால் கடை பாக்கியைக் கொடுக்கலாமே!"

"உனக்கு முன்னாலேயே பலபேர்கள் வந்து வாங்கிக் கொண்டு போய்விட்டார்களே, அப்பா! மளிகைக் கடைக்குக் கொடுத்தேன், எதிர்த்த வீட்டிலே இருக்கிறாரே ஒரு புண்ணியவான் அவரிடம் நெல் வாங்கிய பாக்கிக்குக் கொடுத்தேன்; தையற்காரன், பால்காரி, சலவைத் தொழிலாளி எத்தனையோ பேராக வந்து பிய்த்துப் பிடுங்கிக் கொண்டு போனார்கள். ஒரு ரூபாய் வந்தால் இரண்டு ரூபாய் செலவு."

"அந்தக் கதை இருக்கட்டுமுங்க. செட்டியாருக்கு என்ன சொல்றீங்க?"

"அவரிடம் சொல்லு; இன்னும் சில கதைகள் இந்த மாதம் வரும். வருகிற பணத்தைக் கொடுத்துக் கணக்கை நேர் செய்து விடுகிறேன் என்று."

"எனக்கு அதெல்லாம் தெரியாதுங்க. நீங்களே செட்டியாரிடம் வந்து சொல்லிக் கொள்ளுங்க."

முருகேசன் போனான். 'இனிமேல் இன்று எழுதினாற் போலத்தான்!' என்று பேனாவை டிராயரில் போட்டுவிட்டு எழுந்தார் ஜாங்கிரி.

இதே சமயம் கோமளவல்லி கைக்குழந்தையைத் தூளியில் போட்டுவிட்டு வந்து

"உங்களைத்தானே, விநோதினி குளிக்கப் போய் ஒரு மணியாகிறது. கணக்குப் பிள்ளை வீட்டுக் கோமதி அப்பொழுதே வந்து விட்டாள். தாழங்குடையை விநோதினியிடம் கொடுத்து விட்டு, நீங்கள் அப்படியே பள்ளிக் கூடம் போய் வேதாந்தத்தையும், பூமாவையும் அழைத்துக் கொண்டு வாருங்கள்" என்று சொல்லி விட்டுத் தாழம் குடையையும், துணிக் குடையையும் கொண்டு வந்து கொடுத்தாள்.

ஸ்ரீனிவாசவரதன் துணிக் குடையைப் பிரித்தார். மேலேயிருந்த பல் சக்கரத்தைச் சுற்றிக் குடையின் கம்பிகளை இணைத்திருந்த மெல்லிய கம்பி அறுந்திருந்தது. குடை ரிப்பேர்க்காரன் வரும்போது ஒக்கப் பண்ண வேண்டும் என்று நினைத்திருந்தார். ஆனால் குடையைப் பற்றிய நினைவு வராத வெய்யில் நாட்களில்தானே குடை ரிப்பேர்க்காரன் வாசலில் கத்திக்கொண்டு போகிறான்! ஒரு திருசாகக் கம்பியைச் சரியாக்கிக் கொண்டு ஸ்ரீனிவாசவரதன் வெளிக் கிளம்பினார்.

★



பஜனை மடத்தின் வெளித் தாழ் வாரத்தில் முரளீதரனும், விநோதினியும் சிலைகளைப் போல் நின்று கொண்டிருந்தாலும் அவர்களுடைய உள்ளங்கள் கொந்தளித்துக் கொண்டிருந்தன. பளிங்கு போலத் தூய்மையாக இருக்கும் பிளாஸ்டிக் பிடியுள்ள குடையை முரளீதரன் சரத்தில் மாட்டி வைத்திருந்தார். கொட்டும் மழையில் தலைநீட்ட முடியாமல் இருந்தது. அந்தக் குடையை வாங்கிக் கொண்டு போனால் அம்மா நூறு மொள்ளம் சொல்வாளே என்று கதிகலங்கிப் போனாள் விநோதினி. எதிர்த்த வீட்டு ரங்கநாயகி அம்மாள் கண்ணிலே பட்டுவிட்டதோ அனர்த்தம்தான். 'சொத சொத'வென்று சரத்துடன் எவ்வளவு நேரம்தான் இங்கே நின்று கொண்டிருக்க முடியும்? யாராவது வந்தால் என்ன நினைத்துக் கொள்வார்கள்? முரளீதரனும் எப்படியும் மழை விட்டுப் போகும், ஆற்றில் போய்க் குளித்துவிட்டே வரலாம் என்று உறுதியாக இருந்தார். ஆனால் தனியான இடத்தில் இந்தப் பெண் வேறு வந்து சேர்ந்து விட்டாளே! திரும்பி வீட்டுக்குப் போய் மழை விட்டு வரலாமென்றாலும் அவளை அங்கு விட்டுப் போகலாமா? அவனுடைய வீட்டிலே போய்ச் சொல்லி யாரையாவது குடை எடுத்து வர அனுப்பலாம் என்றால் அதுவும் அவ்வளவு இங்கிதமாக இருக்குமா?

முழங்கால்களுக்குமேல் வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டு தாழங்குடையைப் பிடித்துக் கொண்டே ஆற்றை நோக்கிப் போய்க் கொண்டிருந்த ஸ்ரீனிவாசவரதனைக் கண்டு 'அப்பா! அப்பா!' என்று கூப்பிட்டாள் விநோதினி. மழையில் அவள் கூப்பிட்டது அவருடைய காதுகளில் விழவில்லை. பலம் கொண்ட மட்டும் சத்தம் போட்டாள் அவள். அப்புறம்தான் அவர் திரும்பிப் பார்த்தார். அவரும் பஜனை மடத்தின் தாழ் வாரத்துக்கு வந்து சேர்ந்தார்.

"ஓ, முரளீதரனா? நீங்கள் எப்படி இங்கே வந்து சேர்ந்தீர்கள்? இன்று காலையில்தான் நீங்கள் வந்திருப்பதாகச் சொன்னார்கள். டாடா நகரில்தானே இருக்கிறீர்கள்?" என்று கேட்டார் ஸ்ரீனிவாசவரதன்.

"ஆமாம்! உங்களை மத்தியானம் பார்க்கலாம் என்றிருந்தேன். ஓடுகிற தண்ணீரில் உடம்பை ஊறப்போடலாம் என்று வந்தேன். மழை பிடித்துக் கொண்டுவிட்டது!" என்றார் முரளீதரன்.

குடத்துத் தண்ணீரை ஊற்றிவிட்டுத் துணிகளை எடுத்துக் கொண்டு தாழங்குடையைப் பிடித்துக்கொண்டு புறப்பட்டாள் விநோதினி.

"அமெரிக்காவுக்கு நீங்கள் போவதாகச் சொன்னார்களே?"

"ஆமாம், அடுத்த மாதம் முதல் வாரம் புறப்படுகிறேன். பிட்ஸ்பர்க்கில் ஒரு தொழிற்சாலையில் ஒரு வருஷம் இருக்கவேண்டும்.—நீங்கள் 'ரோஜாப் பழம்' என்று எழுதியிருந்த கதை அடா, அடா, அடா, ரொம்பவும் அருமையான கற்பனை, ஸார்! நானும்தான் பார்க்கிறேன், அழகான, மணமுள்ள புஷ்பங்களுக்குச் சுவையுள்ள பழங்கள் உண்டாவதேயில்லை. பிரமாதம் அந்தக் கருத்து. உங்களைக் கேட்க வேண்டும் என்று போன தடவையே நினைத்தேன். ஆமாம், நீங்கள் 'ஜாங்கிரி' என்று ஏன் புனை பெயர் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"பட்சணங்களுக்குள்ளே எனக்குப் பிடித்தது ஜாங்கிரி. ஜாங்கிரி எவ்வளவு அழகாக

# அண்மையி லிருப்பவரிடமிருந்து

ஜாம்ஷெட்பூர், ரௌர்கேலா இவைகளுக்கு, இடையே நெருங்கிய தொடர்பு அவசியமே. எல்லா எ:கு தொழிற் சாலைகளுள் ரௌர்கேலாவில் ஸ்தாபிக்கப்பட்டு வருவது, இந்தியாவின் முதல் எ:கு நகரமாகிய ஜாம்ஷெட்பூருக்கு மிக அருகில் இருக்கிறது.

இவ்வித நெருங்கிய தொடர்பு, தொழில் அனுபவத்தையும், உயரிய கருத்துக்களையும் உபயோகமான முறையில் ஒருவருக்கொருவர் மாற்றிக்கொள்ள வழி காட்டுகிறது.



இதுவும் அவசியமே. ஏனெனில் ஜாம்ஷெட்பூர் 50 வருட காலமாக எ:கு உற்பத்தி செய்து வருகிறது. ரௌர்கேலாவிற்காக எஞ்சினீர்களையும், தொழில் நிபுணர்களையும் பயில்வித்து உதவி புரிவதில் ஜாம்ஷெட்பூர் மிக சந்தோஷம் அடைகிறது. அப்படிப்பட்ட 150 பேர்கள் (வேலைக்குத் தேவையான முக்கிய அங்கத்தினர் முதல் தொழிலாளர் வரை) ஜாம்ஷெட்பூரில் இருக்கிறார்கள்.

*ரௌர்கேலாவிற்கு நல்வாழ்த்துக்கள்*

இவ்வித சிநேகத்தை பலப்படுத்தும் முறையில் ஜாம்ஷெட்பூரில் இருந்த பலரை ரௌர்கேலாவில் காணலாம். அவர்களுக்கும், அவர்களது சக தொழிலாளர்களுக்கும் ஜாம்ஷெட்பூரின் வாழ்த்துக்களும், அவசியம் உரித்தாகுக.

**தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்.**

TN 1508

இருக்கிறது? எந்தப் பட்சணமும் சுலபமாகச் செய்துவிடலாம். ஜாங்கிரி சுற்றுவதற்கோ லாகவம் வேண்டும், எல்லாருக்குமே நன்றாக வராது. அழகும் சுவையும் உள்ள ஜாங்கிரியைப் போலத்தான் சிறுகதைகள். நல்ல அமைப்பும் வேண்டும்; எழுதும் முறையும் வேண்டும்; அமைப்போ நடையோ கெட்டுப் போனால் கதை தோல்வியடையும். ஜாங்கிரிக்கும் சிறுகதைக்கும் பொருத்தம் இருக்கிறதல்லவா? அதனால்தான் 'ஜாங்கிரி' என்று புனைபெயர் சூட்டிக்கொண்டேன்."

மழை விட்டுப் போய்விட்டது. இனிமேல் குழந்தைகளை அழைக்க ஸ்ரீனிவாசவரதன் பள்ளிக்கூடம் போகவேண்டாம். அவருக்குத்தான் கதைகளைப்பற்றி யாராவது பேசத் தொடங்கிவிட்டால் பசி, தாகம் தோன்றாதே! அதுவும் ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் இஞ்சினீயர் ஆரம்பித்து விட்டால் கேட்கவா வேண்டும்?

"ஒரு சின்ன உதவி செய்ய வேண்டும்; தவறாக நினைத்துக் கொள்ள மாட்டீர்களே!" என்று ஆரம்பித்தார் ஸ்ரீனிவாசவரதன்.

"என்ன உதவி?" என்று கேட்டார் முரளீதரன்.

"ஒரு நூறு ரூபாய் ஒரு மாதத்துக்குக் கொடுத்து உதவ முடியுமா? கொஞ்சம் நிர்ப்பந்தம் இருக்கிறது."

"தருகிறேனே!"

"கொடுக்கிறது தான் கொடுக்கிறீர்கள், இன்னொரு நூறு ரூபாய் சேர்த்துக் கொடுங்கள். சமயத்துக்குச் செய்கிற ஒத்தாசை."

தமிழ் நாட்டினுடைய சிறந்த எழுத்தாளர்களில் ஒருவரான 'ஜாங்கிரி' தம் உதவியைக் கோருவதிலே பெருமையாக இருந்தது முரளீதரனுக்கு. டாடா நகரத்தில் தமிழ்ச் சங்கத்தில் தமக்கு 'ஜாங்கிரி'யை நன்றாகத் தெரியும் என்று நண்பர்களிடம் சொல்லிக் கொள்வதிலே அவருக்கு ஓர் அலாதி உற்சாகம் கூட.

"கையிலே பணம் இல்லை. செக்காகத் தருகிறேன், கல்கத்தா பாங்குக்குத் தருகிறேன்" என்றார் முரளீதரன்.

"அப்படியானால் ஒரு காரியம் செய்கிறேன். ஒரு பிராமிசரி நோட்டு எழுதிக் கொடுக்கிறேன். நீங்கள் அமெரிக்காவிலே யிருந்து வந்த பிறகு பணம் திருப்பிக் கொடுக்கிறேன். ஐந்நூறு ரூபாயாகக் கொடுங்கள். என்னுடைய தாயார் கவலைக்கிடமான நிலையிலே இருக்கிறாள். திடீரென்று இறந்து போனாலும் யாரிடமும் போய் நிற்க வேண்டிய அவசியம் இராது. இன்னும் சில்லறைக் கடன்கள் வேறு சில இருக்கின்றன!"

"உம்! ஐந்நூறு ரூபாயா வேண்டும்?" என்று கூறிச் சற்று யோசித்தார் முரளீதரன்.

ஆகா, அவர் தம்மைப் பற்றிக் கொண்டிருந்த நல்லெண்ணத்தைச் சிதற அடித்து விட்டோமே என்று மனம் குன்றிப் போனார் ஸ்ரீனிவாசவரதன்.

"வரும்போது சென்னைக்கு ஒரு 'டிராப்ட்' வாங்கிவந்தேன் ஐந்நூறு ரூபாய்க்கு, கைச் செலவுக்கு இருக்கட்டும் என்று. அதையே உங்களுக்குக் கொடுத்து விடுகிறேன்."

ஒரு கணம் நின்று போயிருந்த ஸ்ரீனிவாசவரதனின் இதயம் மறுபடியும் வேலை செய்யத் தொடங்கியது. தாயின் ஈமச் சடங்குக்குக் கூடக் கடன் வாங்கி வைத்துக் கொள்ளக் கூடிய நிலையில் ஒரு தமிழ் எழுத்தாளர் இருப்பதைக் கண்டு இரங்கினார் முரளீதரன்.

மூன்று நாட்களுக்குப் பிறகு முரளீதரனின் மாமா கோபாலதேசிகாச்சாரியார் அவரிடம், "முரளி! அந்த எதிர்த்த வீட்டுக்காரனிடம் போய்ப் பேசிக்கொண்டிருக்கிறாயே! ஏதாவது பணம் காசு கேட்டான் என்று கொடுத்து விடாதே! பத்து மூட்டை நெல்லைக் கொடுத்து விட்டு அவனிடமிருந்து பணம் வாங்குவதற்குள்ளே அப்பப்பா, ரொம்பச் சங்கடமாய்ப் போய்விட்டது. ஏதாவது கேட்டானோ? கேட்டு வாங்காமல் இருக்க மாட்டானே!" என்றார்.

முரளீதரன் பேசவில்லை. மகா அநுபவசாலியான கோபால தேசிகாச்சாரியாருக்கு விஷயம் விளங்கி விட்டது. "எவ்வளவு கொடுத்திருக்கிறாய்?" என்று கேட்டார்.

"ஐந்நூறு ரூபாய் கொடுத்தேன்!"

"ஐந்நூறு ரூபாயா? ஐயையோ! போச்சா? உன்னிடம் வந்து கேட்டு வாங்க என்ன தைரியம் அவனுக்கு?" என்று சீறினவர் ஸ்ரீனிவாசவரதனைக் கையோடு அழைத்து வருமாறு கடும் உத்தரவு பிறப்பித்தார்.

சரீரம் ஆதியந்தமும் நடுங்க வந்தார் ஸ்ரீனிவாசவரதன். வெள்ளைக் கரடியைப் போல இருந்த கோபால தேசிகாச்சாரியாரிடம் எப்போதும் அவருக்கு உள்ளூறப் பயம்தான்.

"முரளீதரன் வந்ததும், வராததுமாக அவனிடமும் உன் கை வரிசையைக் காட்ட ஆரம்பித்து விட்டாயா? கொண்டு வந்து கீழே வை, பணத்தை. இல்லேயிலே விடமாட்டேன்" என்று உறுமினார் பெரியவர்.

"அவர் கொடுத்த 'டிராப்டை'ப் பாங்கிக்கு அனுப்பி, நான் பாக்கி கொடுக்க வேண்டியிருந்த சில பேர்வழிகளுக்கு வரும் தேதி போட்டு செக் அனுப்பி விட்டேன். நான் ஒன்றும் தப்பாக நடந்து கொள்ளவில்லையே?" என்று லஜ்ஜையால் குன்றி, ஸ்ரீனிவாசவரதன் சொன்னார்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நாளைக் காலைக்குள் அவன் பணத்தை அவனிடம் கொண்டு வந்து கொடுத்தாக வேண்டும், போ!" என்றார் சுக்கிரீவ ஆக்ரோஷமாகப் பெரியவர்.

பரிதாபமாக இருந்தது முரளீதரனுக்கு, ஸ்ரீனிவாசவரதனைப் பார்க்க. உதட்டைக் கடித்துக்கொண்டு பத்திரிகையால் முகத்தை மறைத்துக் கொண்டார். ஸ்ரீனிவாசவரதன் வீட்டுக்குப் போய்த் திரும்பி வந்தார். அவர் கையிலே ஒரு வெள்ளித்தாம்பாளம் இருந்தது; அதன் நடுவிலே தங்கத்தாலான ஒரு சரஸ்வதிப் பிரதிமை பதித்திருந்தது. அதைக் கோபால தேசிகாச்சாரியிடம் கொடுத்து, "சில வாசக ரஸிகர்கள் சேர்ந்து என்னைப் பாராட்டிச் சன்மானமாக அளித்தார்கள்; இதை என் பணத்துக்கு அடமானமாக..." என்று ஸ்ரீனிவாசவரதன் சொன்னார்.

கோபால தேசிகாச்சாரியார் தாம்பாளத்தில் எழுதியிருந்ததைப் படித்து, "வெள்ளி இரண்டு சேர், பவுன் இரண்டரை வராகன் எடை இருக்கும்; பாக்கி?" என்று வினவினார்;

"இதை என் உயிருக்கு மேலாக மதிக்கிறேன்" என்றார் ஸ்ரீனிவாசவரதன். எடைபோட்டு மதிக்கக் கூடியதா அது?

"சரி, சரி! சிறுகச் சிறுக ஒரு வருஷத்திலே தோட்டுத் தீர்த்து விடவேண்டும்" என்றார் கடைசியாகப் பெரியவர்.

ஸ்ரீனிவாசவரதன் போனதும் பெருமூச்சு விட்டார் முரளீதரன்.

*

பிட்ஸ்பர்க்கு வந்த பின், 'ஜாங்கிரி'யின் சிறுகதை யொன்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, 'தி பென் வியூ' என்ற பத்திரிகைக்கு முரளீதரன் அனுப்பியிருந்தார். அந்தக் கதை பிரசுரமாகுமோ ஆகாதோ என்ற சந்தேகத்துடன்தான் அனுப்பி வைத்திருந்தார். 'ஜாங்கிரி' என்று ஆங்கிலத்திலே கதைத் தலைப்பின் கீழே எழுதித் தாம் மொழி பெயர்த்ததாகத்தான் எழுதினார். பத்திரிகாசிரியரிடமிருந்து கடிதம் வந்தது. கதை மிகவும் நன்றாக இருப்பதாகவும் மூல ஆசிரியருடைய அனுமதி இருந்தால் நலம் என்றும் அக் கடிதம் அறிவித்தது. உடனே ஜாங்கிரிக்கு விமானத் தபாலில் அனுமதி கேட்டு ஒரு கடிதம் வரைந்தார் முரளீதரன். 'ஜாங்கிரி'யினிடமிருந்து இரு கடிதங்கள் வந்தன. ஆங்கிலக் கடிதத்தில் அவர் எழுதியவை அனைத்தையும் மொழி பெயர்க்க முரளீதரனுக்கு அனுமதி வழங்கப் பட்டிருந்தது. தமிழ்க் கடிதத்தில் தம்முடைய தாயார் காலமானதாகவும், சமயத்தில் செய்த உதவிக்குத் தாம் நன்றி பாராட்டுவதாகவும் ஸ்ரீனிவாசவரதன் எழுதியிருந்தார். 'திபென்வியூ'வில் வந்த கதைக்கு இருபது டாலர்கள் சன்மானம் வேறு வந்தது. முரளீதரன் அந்தக் கதையைத் தம் நண்பராகிய வில்கின்ஸினிடம் காட்டினார்.

வில்கின்ஸ் பிட்ஸ்பர்க்கில் எஃகுத் தொழிற்சாலையில் முரளீதரனுடன் சக ஊழியராக இருக்கும் ஓர் எஞ்சினீயர்.

வில்கின்ஸ் அதைப் படித்துவிட்டுத் தம் தாயாருக்கு அனுப்பி வைத்தார்.

வில்கின்ஸின் தாயார் பிரசித்திபெற்ற அமெரிக்க நாவலாசிரியர் எலிஸா, எம். கோல்ட்மான் என்பவர். எலிஸா, எம். கோல்ட்மானிடமிருந்து வந்த கடிதத்தை வில்கின்ஸ் முரளீதரனிடம் காண்பித்தபோது தான் முரளீதரனுக்கு அவரைப் பற்றித் தெரிய வந்தது. அவர் பேராச்சரியத்தில் மூழ்கினார். மிகச் சிறந்த கதை அது என்று பாராட்டப் பட்டிருந்ததோடு 'ஜாங்கிரி'யின் வேறு சில கதைகளையும் எலிஸா கோரியிருந்தார். முரளீதரன் 'ஜாங்கிரி'யின் புத்தகங்களை யெல்லாம் இந்தியாவிலிருந்து வரவழைத்து, உவகையுடன் மொழிபெயர்த்து எலிஸாவுக்கு அனுப்பி வைத்தார்.

முரளீதரனை அழைத்து வரும்படி எலிஸா வில்கின்ஸுக்கு எழுதியிருந்தார். இருவரும் ஒரு விடுமுறை நாளில் போய்ச் சேர்ந்தார்கள்.

காலை உணவு அருந்தும்பொழுது எலிஸா, பேச்சுவாக்கில் முரளீதரனிடம், "சங்கராச்சாரியாரும், ராமானுஜரும் அவதரித்த தேசத்திலே 'ஜாங்கிரி'யைப் போன்ற ஒரு மேதை பிறந்ததிலே ஆச்சரியமே இல்லை. சிறந்த சிந்தனையாளர் அவர். வெறும் கதைகளா அவைகள்? உபநிஷதம் போலத்தான் நான் அவைகளை மதிக்கிறேன். நீங்கள் அழகாக ஆங்கிலத்திலே மொழிபெயர்த்திருக்கிறீர்கள்" என்றாள்.

"தாங்கள் அபிமானத்தினால் உயர்வு நவிற்சியாகக் கூறுகிறீர்கள்" என்றார் முரளீதரன்.

"இல்லை இல்லை. 'ஜாங்கிரி' ஒரு 'ஜீனியஸ்' என்று நான் கோபுரத்தின் மீதேறிக் கூசாமல் கூறுவேன். உங்களுக்கு ஏன் நம்பிக்கை ஏற்படமாட்டேனென்கிறது? உலகம் போற்றும் எழுத்தாளர் ஒருவர் ஏன் உங்கள் தமிழ் நாட்டில் ஏற்பட முடியாது? நீங்கள் அனுப்பியிருக்கும் ஒன்பது கதைகளும் ஒன்பது ரத்தினங்கள். அவைகளுக்கு நிகரான ஒன்பது அமெரிக்கக் கதைகளைப் பொறுக்கி எடுக்கும்படி என்னிடம் சொன்னால் என்னால் முடியாது."

எலிஸா, எம். கோல்ட்மான் ஒரு தமிழ் ஏழை எழுத்தாளரை, நாள் கணக்காக க்ஷவரம் கூடச் செய்து கொள்ளாமல், இரு புறத்துக் கடைவாய்களிலும் வெற்றிலைக் காவியை ஒழுக விட்டுக்கொண்டு பேய்க் கோலத்தில் பேனா ஓட்டிக் கொண்டிருப்பவரை, குடும்பத் தொல்லையால் கடன் வாங்கித் தடுமாறுகிறவரை வான மண்டலத்தில் ஏற்றிப் புகழ்ந்துகொண்டிருப்பது முரளீதரனை மயிர்க் கூச்சலடையச் செய்தது.

"அவர் இன்னும் பல கதைகளும், நாடகங்களும், நாவல்களும் எழுதியிருக்கிறார்" என்றார் முரளீதரன்.

"நான் எல்லாவற்றையும் பிரசுரிக்கிறேன்" என்றாள் எலிஸா. தாய்நாட்டுக்குப் பெரிய சேவை செய்ததாகப் பூரித்தார் முரளீதரன்.

பிரசித்தமான அமெரிக்கப் பத்திரிகைகளிலெல்லாம் 'ஜாங்கிரி'யின் கதைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பு வெளிவந்தது. எலிஸா எம். கோல்ட்மானின் முன்னுரையுடன் வெளிவந்த 'ஜாங்கிரி'யின் நாவல் ஒன்றைப் பற்றிப் பிரபலமான பத்திரிகைகள் விமர்சனம் வெளியிட்டன. அதைத் தொடர்ந்து பல நாவல்கள் உயர்ந்த விலைப் பதிப்பிலும், மலிவு விலைப் பதிப்பிலுமாக ஏராளமாக அமெரிக்காவில் விற்பனையாகின. அவருடைய நாடகங்களும் நியூயார்க்கிலும் சிகாகோவிலும் நடிக்கப்பெற்று அமெரிக்க மக்களின் மனத்தை வசீகரித்து விட்டன. பிரிட்ஜ் புக் கம்பெனி (இங்க்) 'ஜாங்கிரி'யின் இரண்டு நாவல்களுக்கு இருபதினாயிரம் டாலர் கொடுத்ததைச் சாமர்த்தியமான ஒப்பந்தம் என்று நினைத்தது. ஓராண்டுக்குள்ளே ஒரு லட்சம் டாலர் சம்பாதித்துக் கொடுத்தாள், ஜாங்கிரிக்கு எலிஸா. எம். கோல்ட்மான். ஜாங்கிரியின் சம்பாத்தியத்தில் பெரிய தொகை இந்தியாவின் மத்திய அரசாங்கத்துக்கு வருமான வரியாகக் கொடுக்க வேண்டி வந்தது!

★

முரளீதரன் இந்தியாவுக்குத் திரும்பி வந்தவுடனே கோபால தேசிகாச்சாரியார் முன்னின்று விநோதினிக்கும் முரளீதரனுக்கும் விவாகத்தை நடத்தி வைத்தார். பணமும் உலகப் பிரசித்தியும் வந்த பிறகு ஸ்ரீனிவாசவரதன் எழுதவேயில்லை. தமிழ் நாடு ஓர் அற்புதமான எழுத்தாளரை இழந்துவிட்டது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor : T. Sadasivam

# விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலவையான

# அனஸின்

## நான் உட்கொள்ளுகிறேன்

- க்வினைன் ஸல்பேட
- பினஸிடின்
- காபின்
- ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, அல்லது தசைவலி இவைகளின், முதல் அறிகுறிகள் தென்பட்டவுடனேயே நான் 2 'அனஸின்' வில்லைகளை உட்கொள்ளுகிறேன். அனஸினைக்காட்டிலும் வேறு ஒன்றும் விரைவில் வலியை நிறுத்துவதில்லையென்றும், வேறு எதைக்காட்டிலும் 'அனஸின்' அபாயமற்றதென்றும் கண்கூடாகப் பார்த்துள்ளேன். எவ்வித வலியையும், துரிதமாயும், அபாயமின்றியும், நிச்சயமாயும் அகற்றும். ஒரு டாக்டரின் குறிப்பு போல், நான்கு மருந்துகள் விஞ்ஞான முறையில் அனஸினில் சேர்க்கப்பட்டுள்ளன. நீங்களும் உங்கள் வீட்டில் எப்பொழுதும் 'அனஸின்' வைத்திருங்கள்.



WILL NOT UPSET THE STOMACH

DOES NOT HARM THE HEART




Made in India by

GEOFFREY MANNERS & COMPANY PRIVATE LIMITED

MAGNET HOUSE, DOUGALL ROAD, BOMBAY

WHITEHALL PHARMACAL COMPANY, NEW YORK, U.S.A.

## அனஸின்

### நான்கு மருந்துகளின் கலவை



Registered User :

ஒரு பாக்கட் விலை 12 நயாபைசா

GEOFFREY MANNERS & COMPANY PRIVATE LTD.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# தனது சேலையே வெண்மையென நினைத்தவள்

## ரின்ஸோவினால் வெளுத்த ராதையின் சேலையைப் பார்த்ததும் பிரமித்தாள்!



## உண்மை! அதிவெண்மையாக வெளுப்பது ரின்ஸோ!




நமது துணிகள் சுத்தமாக இருந்தால் மட்டும் போதாது. பிறர் கண்களில் படும்படி சுத்தமாக இருக்க வேண்டும் என்பதே நமது விருப்பம். வெண்மைத் துணிகளை அதிவெண்மையாகவும், வர்ணத் துணிகளை அதிக பிரகாசமாகவும் சலவை செய்வது அற்புத சோப் பவுடராகிய ரின்ஸோ.

நீங்களே ஊர்ஜிதம் செய்துகொள்ளுங்கள்! அடுத்த முறை சலவைக்கு ரின்ஸோ உபயோகித்துப் பாருங்கள். உங்கள் சேலைகள், ரவிக்கைகள் ... குடும்பத்தின் சகல துணிகளுமே அற்புதமான சுத்தத்தோடு சலவையாகும். ரின்ஸோவின் விறுவிறுப்பு வாய்ந்த நுரை அழுக்குகளை அறவே அகற்றி விடுகிறது—அடித்துத் துவைக்கவோ அழுத்தித் தேய்க்கவோ தேவையில்லை.

**உங்கள் வேலையை இலகுவாக்கும் அற்புத சோப் பவுடர்**

பெரிய சைஸ் பெட்டி வாங்குங்கள். அதனால் சிக்கனம் அதிகம்

R 14-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு